# புதிய தாய்மார்களுக்கு !

## குழந்தைக்கு <u>பாரெக்ஸ்</u> கொடுக்க ஆரம்பிக்க வசதியாக ஒரு விசேஷ 100கிம். டப்பா.




3 மாதம் முதல் குழந்தைக்கு திட உணவு தேவை. குழந்தையின் மென்மையான ஜீரணத்திற்கேற்ற சரியான புரதச் சத்தோடு, அதன் முழுமையான வளர்ச்சிக்கு வேண்டிய கார்போஹைட்ரேட்டுகள், கால்ஷியம், வைட்டமின்கள் மற்றும் இரும்புச் சத்துக்கள் யாவும் நிறைந்தது பாரெக்ஸ். இப் புதிய 100 கிம். டப்பாவை வாங்குங்கள்—குழந்தைக்கு பாரெக்ஸ் கொடுக்க ஆரம்பிக்கும் போது அது மிகவும் வசதியாக இருக்கும்

**பாரெக்ஸ்®**—க்ளாக்ஸோ தயாரிப்பு

சீரான உடல் வளர்ச்சிக்குக் குழந்தையின் முதலாவது திட உணவு.

CHGF-26-202 Tam

கணக்கில்லா ஆரஞ்சுப்பழங்களைக்
கவனமுடன் பொறுக்கி அக்கனிச்
சாற்றில் நான் வடித்தெடுத்த
அற்புதப் படைப்புதான்

# நியூட்ரின் ஆரஞ்சு காண்டி






NCM-27 TAM

குழந்தைகளே! அமுது போன்ற
ஆரஞ்சுச் சுவையை மிஞ்சும்
நியூட்ரின் ஆரஞ்சு காண்டிகள்.
உண்டு பாருங்கள், உங்களுக்கே
தெரியும். இன்றே கேட்டு வாங்குங்கள்,
நியூட்ரின் ஆரஞ்சு காண்டிகளை!

**தின்னத்தின்ன**
**திகட்டாத மிட்டாய்!**




நியூட்ரின் கன்பெக்ஷனரி கம்பெனி
பிரைவேட் லிமிடெட், சித்தூர் (ஆ.பி.)

## உங்களை ஆரோக்கியமாகவும், மகிழ்ச்சியாகவும் வாழவைக்க 1000க்கும் அதிகமான ஔஷதங்களை இம்ப்காப்ஸ் தயாரித்துள்ளது.

இம்ப்காப்ஸ் இந்திய மருத்துவர்களின் இணையில்லாத ஒரு கூட்டுறவு நிறுவனம். புராதன நூல்களில் கூறியுள்ள முறைகள், தரங்களை கண்டிப்பான முறையில் பின்பற்றி ஆயுர்வேத, சித்த, யுனானி மருந்துகளை அது தயாரித்து வருகிறது. மருந்துகளை தயாரிக்கும் ஒவ்வொரு கட்டத்திலும் அதிக கடுமையான முறையில் தரப் பரிசோதனை செய்யப்படுகிறது. புராதன மருந்துகளை தயாரிப்பதில் நவீன பாக்கிங் முறைகளையும் இயந்திரங்களையும் இம்ப்காப்ஸ் பயன்படுத்தி வருகிறது. சுதேச மூலிகைகள் பற்றிய இடைவிடாத ஆராய்ச்சியில் ஈடுபட்டுள்ள இம்ப்காப்ஸ் புராதன இந்திய மருந்துகள் சம்பந்தமாக ஒரு மறுமலர்ச்சியை உண்டாக்கப் பாடுபடுகிறது.




**உண்மையான ஆயுர்வேத, சித்த, யுனானி மருந்துகளுக்கு பெயர் பெற்ற நிறுவனம்**

**இம்ப்காப்ஸ் மருந்துகள் எல்லா முக்கிய மருந்து கடைகளிலும் கிடைக்கும்**

**இந்தியன் மெடிகல் பிராக்டிஷனர்ஸ் கோவாப்ரேடிவ் பார்மஸி அண்ட் ஸ்டோர்ஸ் லிட்.**

அடையார், சென்னை 20.

**விற்பனை நிலையங்கள்:** 4/86, மவுண்ட் ரோடு, சென்னை-2. போன்: 86520

16, வெஸ்ட்காட் ரோடு, ராயப்பேட்டை, சென்னை-14.

48, சௌத் மாஸி தெரு, மதுரை. போன்: 30875

maa/IMP/962/M Tam




நவராத்திரி
விசேஷ
விற்பனை!

தீபாவளி 4 புதிய கலர்கள்

• விஜயா • கீதா • பானு • ரத்னு

புதிய கட்டம்: கல்யாணி & குமாரி

பட்டுச் சேலைகள்-சோளி பீஸ்கள்

பாவாடை துண்டுகள்

மற்றும்

நூல் சேலைகள்

மில் ஜவுளிகள்

நல்லி

சில்க் எம்போரியம்

பாண்டி பஜார்

தியாகராய நகர் • போன்: 442567 • சென்னை-17

# ஓர் வேண்டுகோள்



**ஜவாஹர்லால் நேரு எழுதிய கடிதங்கள், அவரைப் பொருத்த புகைப்படங்கள், திரைப்படங்கள், அவருடைய குரலின் ஒலிப்பதிவுகள் ஆகியவற்றை வைத்திருப்போருக்கு**

ஜவாஹர்லால் நேருவின் எழுத்துக்களிலிருந்து தேர்ந்தெடுத்துத் தொகுத்து வெளியிடும் வேலையையும், அவரைப் பொருத்து ஆதாரபூர்வமான வரலாற்றுப் படமொன்றைத் தயாரிக்கும் பணியையும் ஜவாஹர் லால் நேரு நினைவு நிதி மேற்கொண்டிருக்கிறது. வருங்கால வரலாற்று வல்லுனர்களுக்கும் ஆராய்ச்சியாளர்களுக்கும் இந்த இரண்டும் அதி முக்கியமானதும், ஆதாரபூர்வமானதுமான தகவல் தரும் பொருட்டு ஜவாஹர்லால் நேரு எழுதிய கடிதங்கள் அவருடைய புகைப்படங்கள்—திரைப்படங்கள், மற்றும் குரல் பதிவுகள் ஆகியவற்றை வைத்திருப்போர் அனைவரையும் அவற்றை எங்களுக்கு அனுப்பி வைத்து தேசிய முக்கியத்துவம் வாய்ந்த இந்தச் சேவையில் எங்களுக்கு உதவுமாறு கேட்டுக் கொள்கிறேன்.

அவ்வாறு நன்கொடை தருவோருக்கு அவர்கள் அனுப்பி வைத்தவற்றின் நகல் பிரதிகள் அளிக்கப்படும்; இல்லையேல், நாங்கள் நகல் பிரதிகள் எடுத்துக்கொண்டு அசல் பிரதிகளை அவர்களுக்குத் திருப்பியனுப்பிவிடுவோம். எழுத்துத் தொகுப்பிலோ திரைப்படத்திலோ பயன்படுத்தப்படும் அனைத்திலும் கொடுத்தவர்கள் பெயர்கள் உரிய முறையில் அறிவிக்கப்படும். இது பற்றிய கடிதங்களெல்லாம் எழுதப்படவேண்டிய முகவரி:

**அட்மினிஸ்ட்ரேடிவ் செக்ரேடரி,**
**ஜவாஹர்லால் நேரு மெமோரியல் பண்ட், தீன்மூர்த்தி ஹவுஸ்,**
**புதுடில்லி-11**

Indira Gandhi

(இந்திரா காந்தி)

சேர்மன், ஜவாஹர்லால் நேரு மெமோரியல் பண்ட்

JN-141-2415-ACIL-TAM

நீங்கள் ஓர் இல்லத்தரசியோ—
நாகரிக கல்லூரி வனிதையோ
உங்கள் எழில்மிக்க
சருமத்தை, மிருதுவாகவும்,
புத்துணர்ச்சியுடனும்,
பாதுகாப்பது **சந்திரிகா**
ஆயுர்வேதிக் டாய்லெட்
சோப் ஒன்றேதான்.




aries

# சந்திரிகா

## ஆயுர்வேதிக் டாய்லெட் சோப்

**சந்திரிகா பிராடக்ட்ஸ் கோயம்பத்தூர்-2. சென்னை-10.**

# கல்கி

## பொருளடக்கம்

விரோதிக்ருது புரட்டாசி 10 - செப்டம்பர் 26, 1971








சந்தா விவரம்:

| | ஒருவருடம் | ஆறுமாதம் |
|---|---|---|
| இந்தியா | ரூ. 20-00 | ரூ. 10-00 |
| இலங்கை (இலங்கைநாணயம்) | ரூ. 21-00 | ரூ. 10-50 |
| இதர நாடுகள் | ரூ. 45-00 | ரூ. 22-50 |



விட்டமின்கள் மற்றும்
தாதுப் பொருட்களுக்கான
'உணர முடியாப் பசி' உங்களுக்கு
சோர்வும் எரிச்சலும் ஊட்டுகிறது...

# வாட்டர்பரீஸ் விட்டமின் டானிக்

## மட்டுமே 12 இன்றியமையாத சத்துக்களை அளிக்கிறது அந்த 'உணர முடியாப் பசி'யைத் தீர்ப்பதற்கு



உங்கள் உடலில் விட்டமின்கள், தாதுக்கள் மற்றும் முக்கிய சத்துக்களுக்கான பசி நிரந்தரமாக இருக்கிறது என்பதை எந்த டாக்டரும் கூறுவார். இந்த 'உணர முடியாப் பசி'யின் விளைவு— சோர்வு, எரிச்சல், இருப்புக் கொள்ளாமை, பசியின்மை, ஜீரண சக்தி குறைவு.

எல்லா சத்துக்களும் அடங்கிய வாட்டர்பரீஸ் விட்டமின் டானிக் சாப்பிட்டு 'உணர முடியாப் பசி'யைப் போக்குங்கள். அதில் 12 முக்கிய சத்துக்கள் உள்ளன: வளர்ச்சிக்கும், வலிமைக்கும் விட்டமின்கள்; இரத்த விருத்திக்கு இரும்புச் சத்து; நல்ல பசியெடுக்க எல்லாப் பொருட்களும்; நரம்புகளுக்கு உரமூட்ட ஃபாஸ்ஃபேட்டுகள்.

சிந்தித்துப் பாருங்கள்; உங்களுக்கு அல்லது உங்கள் குடும்பத்தில் யாரேனும் ஒருவருக்கு வாட்டர்பரீஸ் விட்டமின் டானிக் தேவை இன்றே!

இரண்டு அளவுகளில் கிடைக்கிறது:
250 ml 470 ml.

[illegible]




WVT-G

கல்கி

மலர் 31

இதழ் 9



தமிழ்த் திருநாடு தன்னைப் - பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா
—பாரதியார்

# ஜனநாயகமா, சர்வாதிகாரமா?

ஸ்ரீமதி இந்திராகாந்தியிடம் கட்டுக் கடங்காத அதிகார சக்தி இருக்கிறது. பதவியையும், பணத்தையும், அதிகாரத்தையும் நாடுகிற அனைவரையும் ஆகர்ஷிக்கும் விதத்தில் அவர் தமது சக்தியைப் பிரயோகித்து வருகிறார். மனச்சாட்சிக்கு இடமே இல்லாத நிலை எங்கு பார்த்தாலும் பரவி வருமாறு செய்கிறார். எல்லாக் கட்சிகளையும் சேர்ந்த தலைவர்களும், கட்சிகளை நடத்துகிற 'யஜமானர்'களும் சிந்திப்பது வேறு, சொல்வது வேறு, செய்வது வேறு என்றாகிவிட்டது. ஒரு தேசத்தின் உயர் வர்க்கத்தினர் கூசாமல் இப்படி ஆகிவிட்ட பின், நாட்டின் தலைவிதியை நிர்ணயிப்பதில் சாமானிய மக்கள் என்ன பங்கு பெற முடியும்? பொதுமக்களில் தொண்ணூறு சதவிகிதத்தினருக்குப் போதிய விஷய ஞானமில்லை. அவர்களுக்குப் பொருளாதார விதிகளைப் பற்றி எதுவுமே தெரியாது. அந்நிய விவகாரங்களில் நம் தேசத்தின் நிலை என்ன என்றும் அவர்களுக்குத் தெரியாது. நாட்டின் எதிர்காலத்தை வகுப்பதில் அவர்களுக்கு உண்மையில் பங்கே இல்லை.

ஸ்ரீமதி இந்திரா காந்தி ஒரு சர்வாதிகாரிக்குரிய அத்தனை அதிகாரமும் செலுத்துகிறார். அவர் செய்ய எண்ணுவதையெல்லாம் செய்து முடித்தபின், உண்மையில் அவரே திருப்திப்படுவதற்கு எதுவும் இராது. தன்னுடைய நிர்வாகம் தேசத்தை வறுமை நிலையிலிருந்தும், அசுத்தத்திலிருந்தும், பொருளாதார திவாலா நிலையிலிருந்தும் காப்பாற்றி மேம்படுத்துவதற்குச் சிறிதளவும் உதவவில்லை என்றே காண்பார்.

பதவியிலிருந்து ஓய்வு பெறும்போது, தாம் உண்மையான திருப்தி காண வேண்டும் என்று ஸ்ரீமதி இந்திரா எண்ணுவாராகில், அவர் போகிற போக்கை மாற்றிக் கொண்டேயாக வேண்டும். தேசத்தின் உண்மை நலனுக்கான காரியத்தைச் செய்தோமா என்று அவர் ஆராய்ந்தால், தாற்காலிகமாகக் கிடைக்கிற புகழுக்குச் சிறிதும் மதிப்பில்லை என்று உணருவார். இப்போது கிடைக்கும் புகழ் விரைவிலேயே மங்கி மறைந்து போகும். இந்திரா காந்தி மக்களுக்காக இன்ன சாதனை செய்தார் என்று எதிர்கால சரித்திரம் எடுத்துக்காட்டுவதற்கே இடமிராது.

ஸ்ரீமதி இந்திரா காந்தி செய்துள்ள காரியங்களில் மிகவும் கெடுதலானது எதுவென்றால், எதிர்க்கட்சி முக்கியஸ்தர்களையெல்லாம் சர்க்காரிடமிருந்து சில்லறை லாபங்களை எதிர்பார்த்து நிற்கும் புல்லுருவிகளாகச் செய்திருப்பதேயாகும். அரசியல் துறையில் இப்படியெல்லாம் நடந்தாலும் தேசப் பொருளாதாரமாவது நல்ல நிலையில் இருந்திருப்பின் நாம் 'இந்திரா ஆட்சி' என்ற தாற்காலிக விஷயத்தைப் பற்றிக் கவலைப்படாதிருக்கலாம். ஆனால் இன்று காண்பதென்ன? அரசியல் ஊழலைவிட — உயர் வர்க்கத்தினரின் ஒழுக்கக் குறைவைவிட — தேசப் பொருளாதாரம் மோசமான நிலையில் உள்ளது.

நமக்கெல்லாம் மேலே ஒரு பராசக்தி இருக்கிறது. அது இன்னமும் நம்மைக் காப்பாற்றக் கூடும். அவ்விதமே நம்பிப் பிரார்த்திப்போம்.

இன்று அரசியல் சாஸனத்தையும், அது அளிக்கும் அடிப்படைச் சுதந்திர உரிமைகளையும் உள்ளபடி காப்பதற்கு உறுதிபூண்ட எதிர்க் கட்சியாயிருப்பது சுதந்திரக் கட்சி ஒன்றே. மக்களின் அடிப்படை உரிமைகளை பார்லிமெண்ட் பலத்தால் ஒருகாலும் பறிக்கக் கூடாது என்பதே அரசியல் சாஸனகர்த்தர்களின் உத்தேசம். சிறுபான்மை சமுதாயங்கள் தங்களுடைய சுதந்திரங்களைப் பற்றிப் பயமில்லாமல் வாழ வேண்டும் என்றே சாஸனகர்த்தர்கள் கருதினர். மத அடிப்படையில் தங்களுக்கு எந்தவிதத்திலும் குறை ஏற்படாது என்ற உறுதியான நம்பிக்கையைச் சிறுபான்மையினருக்கு ஏற்படுத்த வேண்டும் என்பது சாஸனம் வகுத்தவர்களின் நோக்கம்.

சுதந்திரக் கட்சியைச் சேர்ந்தவர்கள் - அதன் தலைவர்கள், அதிலுள்ள முதியவர்கள், இளைஞர்கள் அனைவரும் அக்கட்சி எந்த இலட்சியங்களுக்காக ஸ்தா

பிக்கப்பட்டதோ, அந்த இலட்சியங்களை உண்மையுடன் திடமாகப் பற்றி ஒழுகுவர் என நம்புகிறேன். பிறருடைய உதவி இல்லாத காரணத்தினால் ஏற்படும் சோதனைகளை மனம் தளராது தைரியமாய் எதிர்த்து நிற்பார்கள் என நம்புகிறேன். அனைவருமே அரசியல் சாஸனத்துக்கு எதிராகச் சதி செய்தாலும் கூட நான் என் கொள்கையை விடமாட்டேன். சாஸனத்தைத் தந்த வல்லபபாய் பட்டேலையும், ராஜன் பாபுவையும், முன்ஷியையும், அல்லாடி கிருஷ்ணசாமி அய்யரையும் நான் ஒருநாளும் விட்டுக் கொடுக்க மாட்டேன். என் கடைசி மூச்சு உள்ளவரை எதிர்த்துப் பேசுவேன்.

(ராஜாஜி 'ஸ்வராஜ்யா'வில் எழுதியது)

# உடன்படிக்கையை மீறலாகாது

ருஷியாவுடன் இந்தியா செய்து கொண்டுள்ள உடன்படிக்கை காரணமாக நமது தேசத்தில் முற்றிலும் புதியதொரு நிலைமை ஏற்பட்டிருக்கிறது.

இந்த உடன்படிக்கையால் இந்தியா மற்ற உலக வல்லரசுகளிடமிருந்து ஒதுங்கிவிட்டதா, அல்லது அதற்கு மாறாக அமெரிக்கா சமீப காலமாக ஆசிய விவகாரங்களிலிருந்து ஒதுங்கியிருக்க முடிவு செய்ததால்தான் இந்த உடன்படிக்கையே ஏற்பட்டதா என்ற கேள்வி எழுகிறது. அமெரிக்கா ஒதுங்கியிருக்கத் தீர்மானித்து, ஆசியாவைக் கம்யூனிஸ்ட் சீனத்தின் ஆக்கிரமிப்புக்குப் பலியானால் ஆகட்டும் என்று விட்டு விட்டதை நான் கண்டித்து வந்திருக்கிறேன். அமெரிக்காவின் கொள்கை சற்றும் சரியானதல்ல என்பதே இப்போதும் என் கருத்து. அமெரிக்காவில் ஜனாதிபதித் தேர்தல் முடிந்த பிற்பாடு இவ்விஷயத்தை நாம் தெளிவாக மதிப்பிட்டு முடிவு காண முடியுமென நம்புகிறேன். அது எப்படி ஆயினும், இப்போது நாம் ருஷியாவுடன் உடன்படிக்கை ஒன்றைச் செய்து கொண்டு விட்டபடியால், அதற்கு விரோதமில்லாமல் நாம் நம்முடைய விவகாரங்களை நடத்த வேண்டும் என்பது என்னுடைய கொள்கை.

சர்வதேச நாடுகளிடம் இந்த உடன்படிக்கை காரணமாக இந்தியா கௌரவம் பெற்றிருக்கிறது. அதனால்தான் உடன்படிக்கை 'சரித்திர முக்கியத்துவம்' வாய்ந்தது என்ற பெயரைப் பெற்றிருக்கிறது. அந்நிய நாட்டு விஷயங்களில் நம்முடைய கொள்கைகளைப் பரந்த அடிப்படையில், நல்ல மனோ தைரியத்துடன் வகுத்துக் கொள்ள வேண்டும்; குறுகிய மனப்பான்மையில், கடையில் பேரம் பேசுவது போல் வகுத்துக் கொள்ளக் கூடாது. லாப — நஷ்ட பேரத்தில் இறங்கிவிட்டுத் தீர்மானமாகவும் தைரியமாகவும் முடிவுக்கு வராமல் இருந்தால் நம்முடன் உடன்படிக்கை செய்துகொண்டவருக்கு நம்மிடம் நம்பிக்கை உண்டாகாது. இருந்த நம்பிக்கை அழிந்து போகும். உலக அரசுகளும் நமக்கு மதிப்புத் தரமாட்டா. உடன்படிக்கைகளின்படி நடந்து கொள்வதே சத்தியமும் பயன்தரும் கொள்கையும் ஆகும். இந்தியாவின் உறுதிமொழிகளை நம்பலாம் என்று உலக நாடுகள் நம்மை மதிப்பதற்கு இதுவே வழி.

பாகிஸ்தானைவிட நமக்குப் பெரிய ராணுவ பலம் இருக்கிறது என்று அடிக்கடி பெருமை பேசிக் கொள்வது எவ்விதத்திலும் நன்மை பயக்காது. உண்மையிலேயே நமக்கு அதிக பலம் இருந்தாலும், அப்படியே இருக்கட்டும்; இதைப் பற்றிப் பெரிதுபடுத்திப் பேசிக் கொண்டேயிருக்கலாகாது. அதில் நற்பயன் ஒன்றுமில்லை. இந்தியாவுக்குச் சமதையாக, அல்லது இந்தியாவைக் காட்டிலும் பலமுள்ளதாகப் பாகிஸ்தானை ஆக்கும் பொருட்டு மேற்கத்திய ஜனநாயக வல்லரசுகள் பாகிஸ்தானுக்கு உதவி செய்ய எப்போதுமே விரும்புகின்றன. ராஜரீக மனப் போக்குகளை



"மதுவிலக்கை நீடிப்பதால் ஏற்படும் செலவைவிட மதுவிலக்கை ரத்து செய்வதால் செலவு அதிகமாகும் என்று எனக்குத் தோன்றுகிறது."

ஆராய்ந்து பார்க்கும் அறிஞர்கள் இதற்குக் காரணம் கண்டு சொல்ல முடியும். அமெரிக்காவிலிருந்து யாஹ்யாகானின் கொடுங்கோன்மையைக் கண்டித்து எத்தனை அறிக்கைகள் வெளியிடப்பட்டாலும் சரி, நாம் நமது ராணுவ பலம் பற்றிப் பெருமை அடித்துக் கொண்டேயிருந்தால், பாகிஸ்தானுக்கு அமெரிக்காவும், மற்ற மேல்நாடுகளும் செய்யும் உதவி அதிகரிக்கவே செய்யும்.


" என்ன அபத்தம்! நான் சீனுவுடன் சரஸமாடுவேனாக யார் சொன்னது?"

சீன அபாயமே நமக்கு மிகப் பெரிய பிரச்னையாகும். சீனத்துடன் இந்தியா பேச்சு வார்த்தை நடத்தி அதன் நட்பையும் உதவியையும் பெறலாம் என்று சிலர் எண்ணுவது வெறும் பிரமையே ஆகும். கம்யூனிஸ்ட் சீனம்தான் நமக்குப் பெரிய அபாயம். நாமாகச் சிலந்தி வலைக்குள் சென்று நிலைமையை மேலும் மோசமாக்கிக் கொள்ள வேண்டாம்.




இந்திய ருஷிய உடன்படிக்கையைக் கண்டிப்பது கம்யூனிஸ்ட் சீனத்துக்குச் சாதகமாகும். இந்தியாவில் நக்ஸலைட் அக்ரமம் வளர்த்து வருகிறது. சீன அபாயத்தை உணராமல் குருட்டுத்தனமாக ஆகாயக் கோட்டை கட்டிக் கொண்டு வாதம் செய்வதில் பயனில்லை. இது இளைஞர்களுடைய அறிவீனம். ருஷிய — இந்திய உடன்படிக்கையில் நான் காணத் தவறிய விஷயங்களை அவர்கள் கண்டு விட்டதாக என் நண்பர்களில் சிலர் எண்ணலாம். அவர்கள் எண்ணுவது சரியல்ல. நாம் ருஷியாவுடன் செய்து கொண்ட உடன்படிக்கைக்கு அவர்களும் ஆதரவு தர வேண்டும் என்று மனப்பூர்வமாகக் கேட்டுக் கொள்கிறேன். முறைப்படி ஒப்பமிட்ட உடன்படிக்கைகளை மதித்து நடப்பதே நேர்மைக்கும் நாணயத்துக்கும் உரிய வழி.

கிழக்கு வங்கம் இப்போது இந்தியாவிடம் காட்டும் நன்றி உணர்வு உண்மையாயினும் அதை மிகைப்படுத்த வேண்டியதில்லை. தாற்காலிகமான நன்றி உணர்வு சீக்கிரத்தில் மாறுபட்டும் மறைந்தும் போகலாம். கிழக்கு வங்கத்தில் முஸ்லீம்களே பெரும்பான்மையினர். இந்தியாவில் உள்ள முஸ்லீம்களிடமே நம் நாட்டு ஹிந்து மக்கள் பூரண நம்பிக்கை காட்டாவிடில், இந்திய முஸ்லீம்கள் — கிழக்கு வங்க முஸ்லீம்கள் ஆகியோரும் அதேபோலத்தான் ஹிந்துக்களிடம் சந்தேகம் வைப்பார்கள். அதோடு சீனம், வங்காளப் பகுதிகளை ஆகர்ஷித்துத் தன் வசம் ஆக்கிக் கொள்வதில் முனைப்பாக இருப்பதையும் நினைவில் வைக்க வேண்டும். வங்காள தேசத்துக்கு நம்மால் இயன்ற உதவியை எல்லாம் செய்வோம்; அவர்களது நன்றிக்குப் பாத்திரர் ஆவோம். ஆயினும் இந்த நன்றியை அடிப்படையாகக் கொண்டு கோட்டை கட்ட வேண்டாம். உதவி செய்ததற்காக நமக்குப் பதிலுபகாரம் வரும் என்று எதிர்பார்க்காமல் செய்ய வேண்டும். அரசியல் உலகத்தில் நன்றி என்பது காலக்கிரமத்தில் தேய்ந்து மறைந்துவிடும்.

சீன மக்கள் அரசியலை ராணுவத்திடமே பூரணமாக ஒப்படைத்து விட்டு, தங்களது தொன்றுதொட்ட சுறுசுறுப்புடன் தொழில்களில் இறங்கியிருப்பதாகத் தெரிகிறது. சீன ராணுவம் எல்லா அதிகாரங்களையும் பொறுப்புக்களையும் ஏற்றிருப்பதாகத் தெரிய வருகிறது. இதனால் சீனத்தின் ஆக்கிரமிப்பு ஆசை நமக்கு மிகப் பெரும் அபாயமாகி விட்டது. ஏகாதிபத்தியத்தை விரும்பாத ஆசிய மக்கள் யாவரும் இதைக் கவனத்தில் கொள்ள வேண்டும். ருஷ்யாவுடன் செய்து கொண்ட உடன்படிக்கை தஸ்தாவேஜின் மை நன்றாக உலருவதற்குமுன் சீனாவுடன் நட்பு நாடிக் கடிதப்போக்கு ஆரம்பிப்பது முறையே ஆகாது.

(ராஜாஜி 'ஸ்வராஜ்யா'வில் எழுதியது)

# ராஜாஜியின் கருத்துக்கள்

## ஔவை ஒப்புவாள்

பழைய ஜாதி பேதங்கள் இப்போது கணக்கில் இல்லை. இப்போது ஜாதி இரண்டொழிய வேறில்லை. குடிக்காதவர்கள் மேலோர்; குடிப்பவர்கள் கீழோர். தமிழ் மூதாட்டி இப்போது இருந்திருப்பின் இதுவே சரி என்று ஒப்புக் கொண்டிருப்பாள்.

## குருஷேவ் மறைவு

ஒரு காலத்தில் சர்வ தேச அரசியலில் மிகவும் செயல் துடிப்புடன் விளங்கியவரும், எவரையும் கவர்ந்தவருமான குருஷேவ் மறைந்து விட்டார். இப்போது அணு வெடிப்புச் சோதனைகளால் உலகச் சூழல் விஷமாவதிலிருந்து நமக்குக் காப்புக் கிடைத்திருப்பதற்குக் குருஷேவே காரணம். இப்போதும் உலக வல்லரசுகளின் உடன்படிக்கையைப் புறக்கணித்து பிரான்ஸ் இவ்வாறு விஷத்தைப் பரப்பி விளையாடுகிறது. அணு ஆயுதங்களைத் தயாரிப்பது, குவித்து வைத்துக் கொள்வது, சோதிப்பது, உபயோகிப்பது ஆகிய அனைத்தையுமே தடுக்கும் சர்வ தேச உடன்படிக்கை ஏற்பட்டாலன்றி உலகுக்குப் பத்திரம் இல்லை. அணு ஆயுதத்தில் சம்பந்தமே இல்லாத நாடுகள் தூய சூழலில் வாழப் பெற்றுள்ள உரிமையை அணு வல்லரசுகள் அநியாயமாக மீறுகின்றன. இது சட்டப்படியும், தருமப்படியும் சரியல்ல என்ற ஆட்சேபணையைப் பிடிவாதமாக அலட்சியம் செய்கிறார்கள். ஐ. நா. சபையாலும் காரியரீதியில் ஒன்றும் செய்ய முடியவில்லை. என் ஆட்சேபணையை விவரித்து நான் எழுதிய நூலை ருஷிய மொழியில் பெயர்த்து மாஸ்கோவின் பொறுப்புள்ள ஸ்தாபனத்தின் மூலம் வெளியிடுவதில் குருஷேவ் காட்டிய சுறுசுறுப்புக்கு நான் எவ்வளவு நன்றி கொண்டாலும் போதாது.



குருஷேவ்

## கொழு கொம்பில்லாக் கொடி

அரசியல் சாஸனத்தை அடியிலிருந்து நுனிவரை அப்படியே பார்லிமெண்டில் பெரும்பான்மை வகிப்போரின் கையில் அடக்கம் செய்வதற்கு ஸ்தாபன காங்கிரஸாரும் ஆதரவு தருவாராகில், அதன் பின் இந்தியாவில் சுதந்திரவாழ்வுக்குப் பலம் தரச் சக்தி வாய்ந்த ஏதுமே இல்லை. அவர்களுக்குநல்லறிவுஉதித்து, சாஸனம் காக்கப்படும் என்று நம்புவோம்.

புயலில் மரம் விழும்போது, கொழு கொம்பை இழந்த கொடி நிலத்திலிருந்து மேலெழுந்து சூரிய வெளிச்சத்தைப் பெற முடியாமல் தவிப்பது போல் சத்தியம் இன்று தவிக்கிறது.

கட்டுப்பாடற்ற அதிகாரம் கைக்கு வந்தால் அதிகாரப் பசி அதிகமாகிக்கொண்டே சென்று சர்வாதிகாரம் ஏற்பட வேண்டியதுதான். இந்தப் போக்குக்குப் பணத்தால் நல்ல போஷணை தருகிறது பெர்மிட் — லைசென்ஸ் முறை. எத்தனையோ விஷயங்களைப் பற்றி (காரியத்தில் ஏதுமே செய்யாமல்) பேசினாலும் கூட, பெர்மிட்-லைசென்ஸ் விநியோகத்தைச் சுதந்திரக் குழுவிடம் தருவது பற்றி மட்டும் ஸ்ரீமதி இந்திரா காந்தி ஒரு வார்த்தை கூடப் பேசவில்லை. பொருளாதார அறிஞர்களும் அரசியல்வாதிகளும் இந்த முறையில் தீமை இருப்பினும்கூட இதனால்தான் தொழிற் பெருக்கம் காண முடியும் என்று மெய்யாகவே முடிவு கட்டிவிட்டார்களெனில், அதன் பின் ஜனநாயகம் அழிந்து, ஏக கட்சி ஏகாதிபத்தியத்துக்கு வழிவிட வேண்டியதுதான்.

## புனித கடமை

ஹிட்லருக்கு எதிராகப் பிரிட்டனை எத்தகைய வீராவேசத்துடன் வின்ஸ்டன் சர்ச்சில் எழுச்சி கொள்ளச் செய்தாரோ, அவ்வளவு தீவிர உணர்ச்சியுடன் அரசியல் சாஸனத்தையும், அது அளிக்கும் அடிப்படைச் சுதந்திர உரிமைகளையும் பாதுகாப்பதற்கு நாம் எழுச்சி பெற வேண்டும். பயத்துக்கோ, தோற்றுவிடுவோமோ என்ற எண்ணத்துக்கோ இடம் தராமல் போராட வேண்டும். இத்தகைய பாதுகாப்பினைப் பெறும் தகுதி நமது அரசியல் சாஸனத்துக்கு உண்டு. இந்தப் போராட்டத்தைச் சுதந்திரக் கட்சி தன் தலையாய பணியாக ஏற்க வேண்டும். சுதந்திரக் கட்சிக்கு ஆட்சியதிகாரம் பெறும் வாய்ப்பு இல்லாவிடினும் கூட, தனது புனித கடமையை அது துறக்க முடியாது. அடிப்படைச் சுதந்திரங்களைக் காப்பதே சுதந்திரக் கட்சியின் ஸ்வதர்மம்.

## பிரமையில் மகிழ்ச்சி

மதத்தின் அடிப்படையில் இந்தியாவை இரண்டாக்க வேண்டும் என்று கோரி ஜின்னா வகுத்த 'இரு தேசக் கொள்கை'யைக் கிழக்கு வங்க முஸ்லிம்களின் எழுச்சி பொய்யாக்கி விட்டதென நம் நாட்டு ஹிந்துக்கள் மகிழ்கிறார்கள். இது பிரமையில் பிறந்த மகிழ்ச்சி. ஏனெனில் இப்போது கிழக்கு வங்கத்தில் ஏற்பட்டுள்ள கிளர்ச்சியால் அங்குள்ள முஸ்லிம்கள் தனித்திருப்பதைக் கைவிட்டு, இந்தியாவின் ஹிந்துக்களுடன் ஒரே தேசமாகக் கூடிவிடப் போவதில்லை. முஸ்லிம்களின் மதப் பற்றை ஹிந்துக்கள் உணரவில்லை.



# மனம் அடங்க மருந்து



ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி சங்கராசாரிய ஸ்வாமிகள்

மனத்தினால்தான் நமக்கு எல்லாவிதமான கஷ்டங்களும் உண்டாகின்றன. மனத்தில் ஏற்படும் ஆசையே கஷ்டங்களுக்குக் காரணம். 'ஆசைப்படாதே' என்று இந்த மனத்தை இழுத்துப் பிடித்து நிற்க வைக்க முடியவில்லை.

நாம் 'ஒரு வஸ்துவை நினை' என்று இந்த மனத்திடம் சொன்னால், அது ஏதோ சொற்ப காலம் அதை நினைப்பது போல இருந்து, வேறு எங்கோ பாய்ந்து விடுகிறது. தியானம், சாந்தி என்றெல்லாம் நான் உபந்நியாசத்தில் சொல்கிறபோது ஒரு க்ஷணம் உங்கள் மனம் அடங்கினாற்போல் தோன்றும், ஆனந்தமாய் இருக்கும். ஆனால் அடுத்த க்ஷணமே மனம் எங்கோ ஓடி, சாந்தி குலைந்துபோகிறது.

'பேசாமல் இரு' என்று கட்டளை போட்டு வாயை மூடிக் கொண்டு விட்டால் அது பேசாதிருக்கிறது. 'பார்க்காதே' என்று உத்தரவு போட்டுக் கண்ணை மூடிக் கொண்டுவிட்டால், கண் பார்க்காமல் இருக்கிறது. ஆனால் இந்த மனத்திடம் மட்டும் 'நினைக்காமல் இரு' என்று எவ்வளவுதான் முட்டிக் கொண்டாலும் அது கேட்பதில்லை. நாம் 'நினை' என்றால் மனம் நினைக்க வேண்டும், 'நினைக்காதே' என்றால் பேசாமலிருக்க வேண்டும். அப்போதுதான் நமக்கு மனம் ஸ்வாதீனமாயிற்று, நமக்கு சித்த ஸ்வாதீனம் இருக்கிறது என்று அர்த்தம்.



இப்போது பைத்தியங்கள் என்று சிலரைக் குறிப்பிட்டு அவர்கள் சித்த ஸ்வாதீனம் இல்லாதவர்கள் என்கிறோமே, உண்மையில் நம்மில் யாருக்குமே சித்த ஸ்வாதீனம் இல்லைதான். பைத்தியம் வாயை அடக்காமல் பிதற்றிக் கொண்டே இருக்கிறது என்றால், நாமும் மனத்தை அடக்காமல் அது பிதற்றல் வழியில் போகத்தான் விட்டிருக்கிறோம்.

நமக்குச் சித்தஸ்வாதீனம் வந்துவிட்டால் எப்படியிருக்கும் தெரியுமா? எத்தனை வலி ஏற்பட்டாலும், 'வலி என்று நினைக்காதே' என்றால் மனம் வலியைப் பொருட்படுத்தாமல் இருந்துவிடும். எதிரிலே புலி வந்து நின்றால் கூட மனத்திடம், 'பயப்படாதே' என்றால் அது பயப்படாமலே இருக்கும். இப்போது நாம் காரணமில்லாமலே அழுது கொண்டிருக்கிறோம். மனம் வசப்பட்டு விட்டாலோ, அழுகைக்குக் காரணமாக எத்தனை துக்கம் வந்தாலும்கூட அது சிரித்துக் கொண்டிருக்கும். ஆத்திரமூட்டும்படி என்ன நடந்தாலும் அது கோபமே இல்லாமல் சாந்தமாயிருக்கும்.

முதலில் மனத்தை இப்படி அப்படிப் போகாமல், நல்ல விஷயத்தில் நினைவைச் செலுத்தும்படி செய்ய வேண்டும். எண்ணெயை விட்டால் அது எப்படிப் பிசிர் இல்லாமல் ஒரே இழையாக விழுகிறதோ அதைத் 'தைலதாரை' என்பார்கள், அது மாதிரி மனம் நல்ல நினைவில் ஒருமுகப்பட்டுச் செல்ல வேண்டும். 'ஸ்வாமி', 'ஸ்வாமி' என்ற நல்ல வஸ்துவை அப்படியே நினைத்துக் கொண்டிருக்கும்படி மனத்தை அப்பியாசப்படுத்த வேண்டும். அதன்பிறகு, 'நினைக்கிறோம்' என்பதும் போய், ஸ்வாமியிலேயே கரைந்து ஸ்வாமியாகவே ஆகிவிடுவோம்.

இப்படி மனத்தை அடக்குவதுதான் 'யோகம்' என்பது.

சாவதற்குள் இந்த மனத்தை அடக்க ஒரு வழி தேடியே ஆகவேண்டும். இல்லாவிட்டால் மறுபடி பிறப்புதான். மறுபடி மனத்தின் ஓயாத ஓட்டம்தான். எனவே இந்த ஜன்மாவிலேயே, காமமும் குரோதமும் ஏற்படுவதற்கு எவ்வளவோ ஹேதுக்கள் இருக்கும் போதே, இவற்றின் நடுவில் மனத்தை அடக்க முழுப் பிரயத்தனமும் பண்ண வேண்டும். அப்படிப் பண்ணினவன்தான் 'யுக்தன்' என்கிற யோகி; அவன்தான் 'ஸுகி' என்கிற உண்மையான ஆனந்த ஆத்மா என்கிறார் கிருஷ்ண பகவான்.

'யோகமெல்லாம் ரிஷிகள் சமாசாரம், நமக்கு வருமா?' என்று விட்டுவிடலாகாது. மருந்து யாருக்கு வேண்டும்? வியாதி உள்ளவனுக்குத்தானே? நமக்குத்தான் மனோவியாதி—அதாவது மனம் என்ற வியாதி – இருக்கிறது. எனவே நாம்தான் அதை அடக்குகிற மருந்தைச் சாப்பிட்டாக வேண்டும்.

மனத்தை அடக்க இரண்டு சாதனங்கள் உண்டு. ஒன்று பகிரங்க சாதனம், மற்றது அந்தரங்க சாதனம். வெளிமுகமாகச் செய்வது பகிரங்க சாதனம். உள்ளுக்குள்ளேயே செய்து கொள்வது அந்தரங்க சாதனம். இரண்டும் வேண்டும். இந்த மடத்தில் வண்டிக்காரன், சமையற்காரன் இவர்கள்



வெளியிலும், தீபத்தில் திரி போட்டுத் தருகிறவன், புஷ்பம் எடுத்துக் கொடுப்பவன் இவர்கள் பூஜைக்குப் பக்கத்திலேயே அந்தரங்கமாகவும் இருக்கிறார்கள். இரண்டு வகையினரும் இருந்தால்தான் மடம் நடக்கும். அப்படியே பகிரங்க சாதனம், அந்தரங்க சாதனம் இரண்டையும் கொண்டு மனத்தை முதலில் நல்லதில் ஒருமுகப்படுத்தி, பிறகு நினைவற்ற நிலைக்கு வரவேண்டும்.

தானம் தர்மம் செய்வது, சந்தியாவந்தனம், யாகம், பூஜை, பரோபகாரம் எல்லாம் நல்லதில் மனத்தைச் செலுத்தும் பகிரங்க சாதனம். தியானம் மிகச் சிறந்த அந்தரங்க நிலை. அதற்கு அநுகூலமாக இருக்கிற மற்ற அந்தரங்க சாதனங்கள் ஐந்து. அவை, அஹிம்சை, சத்தியம், அஸ்தேயம், சௌசம், இந்திரிய நிக்ரஹம் என்பவை. எவருக்கும், எவற்றுக்கும் கெடுதலே எண்ணாதபடி மனத்தை அன்புமயமாகச் செய்து கொள்வது அஹிம்சை. மனம், வாக்கு, காயம் மூன்றையும் உண்மையிலேயே ஈடுபடுத்துவது சத்தியம். அஸ்தேயம் என்றால் 'திருடாமல் இருப்பது' என்று அர்த்தம். அதாவது, பிறர் பொருட்களில் ஆசையே எழாதபடி மனத்தை வைராக்கியமாக்கிக் கொள்வது. சௌசம் என்றால் தூய்மைப்படுத்திக் கொள்வது. இந்திரிய நிக்ரஹம் என்பது புலன்களை அவற்றின் போக்கில் விடாமல், ஒவ்வோர் இந்திரியத்துக்கும் இவ்வளவுதான் ஆகாரம் கொடுப்பது என்று நிர்ணயமாக வைத்துக் கொள்வது. கண் இதைப் பார்க்கக் கூடாது, காது இதைக் கேட்கக் கூடாது, வாய் இதைத் தின்னக் கூடாது - பேசக் கூடாது, உடம்பு இந்தப் பாவத்தைச் செய்யக் கூடாது என்று தடுத்து நிறுத்துவதே இந்திரிய நிக்ரஹம்.

இந்த ஐந்தும் 'சாமானிய தர்மங்கள்' எனப்படும். அதாவது நமது வைதிக மதத்தைச் சேர்ந்த சகல பிரிவினரும் இவற்றை அநுஷ்டிக்க வேண்டும் என்பது மனுதர்மம்.



# அழகுமல்ல புகழுமல்ல

-ராஜாஜி-



நாவிலெழுந்ததை எழுந்தபடி நவில்கிறேன்
பாவினிலக்கணம் பயிலாதவன்
அழகோ உனக்கிது கழகமே ?
அண்ணாதான் தெய்வம், ராமனுமல்ல
கண்ணனுமல்ல வென்று கோஷமிட்ட நீ
வேஷமாக்கி அதையெல்லாம் கல்லறையில்
உடனுடனவர் சொன்ன சொல்லுக்கும்
சமாதி கட்டி விட்டாய் கழகமே !
உனக்கிது அழகோ, புகழோ ?
வள்ளுவ முனிவன் ஒதுக்கென்று வகுத்திட்ட
பகுத்தறிவை அழிக்கும் மதுப்பொருளை
கடைகள் அமைத்தாய்த் தடையின்றி
பயமின்றி, வரியின்றி அருந்த
தமிழ்த்தாய் சொன்ன அமிழ்தச் சொல்லைப்
புறக்கணித்தவள் உருவத்துக்குச்
சிலை யெழுப்பினாருன் தலைவர்
இது அழகாமோ, புகழாமோ ?
பதனியின்றாவது வெல்லமது
தமிழ் நாட்டின் செல்வம்
அதனின்று மதியழிக்கும் பொருள் செய்து
கவலைக்கு மருந்திது பயமின்றி
அருந்தென்று தருவது பாபமாச்சே
நண்பனாகச் சொல்லுகிறேன்
நல்லதுக்குச் சொல்லுகிறேன்
பாபத்தைச் செய்யாதே !

நன்றி: நவசக்தி

மனதிற்குகந்த
தூய வெண்மையைப் பெற

# ஓ ஓ பி®
# நீலம்




ஓ ஓ பி நீலம் உடனடியாக முற்றிலும் கரைந்துவிடும் வெள்ளைத் துணிகள் ஒரே சீராக பால்போல் பளிச்சிடுகின்றன. உங்கள் சட்டைகள், புடவைகள், பெட்ஷீட்டுகள் மற்ற துணிகள் எதையும் வெள்ளை வெளேர் என்று ஆக்க மிகவும் சிக்கனமான வழி இது. நீலப்புள்ளி விழாது, மஞ்சள் திட்டு தெரியாது.

ஓ ஓ பி நீலம் மேற்கு ஜெர்மன் கூட்டுறவுத் தயாரிப்பு இந்தியாவின் மிக நவீன அல்டிராமரைன் தொழிற்சாலையில் உருவானது

தயாரிப்பாளர்:
அல்டிராமரைன் & பிக்மெண்ட்ஸ்
லிமிடெட், அம்பத்தூர், சென்னை 53



UPL/6546

# மகுடபதி

அமரர் கல்கி

## இருபத்தைந்தாம் அத்தியாயம்

## "கவுண்டா! சுடாதே!"

கார்க்கோடக் கவுண்டர், ''இந்தத் தடவை தப்பிக்க முடியாது'' என்று சொன்னபோது, மகுடபதி அதனுடைய உண்மையைப் பூரணமாக உணர்ந்தான். ஒரு நிமிஷ நேரத்துக்குள் அவன் உள்ளத்தில் ஆயிரம் எண்ணங்கள் தோன்றி மறைந்தன. ஆகா! கடைசியில் இதுதானா முடிவு? இந்தக் கொலைகாரன் கையினால் சாவதற்குத்தானா இவ்வளவு பிரயாசையும்? சாமியாரின் பேச்சைத் தட்டி விட்டு வந்தேனே?... பெரியண்ணன் எப்படித் தவிப்பான்?... ஐயோ! செந்திரு... அவள் கதி என்ன? அடுத்த ஜன்மத்திலாவது அவளை அடைவோமா?

''என்னடா இருட்டு முழி முழிக்கிறாய்? இங்கே எதற்காக வந்தாய்? இது உன் அப்பன் வீடா?..'' என்ற கவுண்டரின் கடுமையான குரலைக் கேட்டு மகுடபதி சுய நினைவை அடைந்தான். ''உன் அப்பன் வீடா?'' என்ற கேள்வி அவனுக்கு என்னவெல்லாமோ ஞாபகங்களை உண்டாக்கிற்று. தான், தாய் தந்தை இல்லாத அநாதை என்பதும், திருவிழாக் கூட்டத்தில் கிடந்து அகப்பட்டவன் என்பதும் நினைவுக்கு வந்தன. வளர்ப்புப் பெற்றோர்களில் தகப்பனார் காலமாகி விட்டார். தாயார் மட்டும் தான் வேங்கைப்பட்டிக் கிராமத்தில் ஓர் இடிந்த வீட்டில் இருக்கிறாள். ஐயோ! தன்னை எத்தனையோ அன்பாய் வளர்த்த அந்த அம்மாள் இவ்விதம் தான் செத்ததை அறிந்தால் எவ்வளவு துக்கப்படுவாள்?

ஏற்கனவே பலவித துயரங்களினாலும் ஏமாற்றங்களினாலும் இளகியிருந்த மகுடபதியின் உள்ளம் இந்த நினைவினால் ரொம்பவும் உருகி விட்டது. அவன் கண்களில் குபீர் என்று நீர் ததும்பிற்று.

''அடே கோழை! அழுகிறாயா? உன் வீர தீரமெல்லாம் இவ்வளவுதானா? மீட்டிங்குகளிலே பிரமாதமாய்ப் பேசினதெல்லாம் வெறும் வாய்ப் பேச்சுத் தானா? கள்ளை ஒழிப்பதற்காக 'உயிரைக் கொடுப்பேன்' என்றெல்லாம் வீராப்புப் பேசினாயே? இப்போது பெண்பிள்ளை மாதிரி அழுகிறாயே? '' என்றார் கவுண்டர்.

மகுடபதியின் உள்ளத்தில் அமுங்கிக் கிடந்த கோபமெல்லாம் பொங்கி எழுந்தது.

''பாவி! துரோகி!...'' என்று ஆரம்பித்தான். ஆனால் ஆத்திர மிகுதியினாலே ஒன்றும் பேச முடியவில்லை.

''அவ்வளவுதானா?'' என்று கவுண்டர் கூறிப் பயங்கரமாகச் சிரித்தார்.

''கொலைகாரா!...'' என்றான் பல்லைக் கடித்துக் கொண்டு.

''அப்புறம்?...''

''அப்புறம் நீ நரகத்துக்குப் போவாய். உன்னோடு பேச எனக்கு இஷ்டம் இல்லை. உன் எதிரில் நிற்பதே பாவம். துப்பாக்கியை வைத்துக் கொண்டு ஏன் நிற்கிறாய்? குண்டு இருக்கிறதா? வெறும் ஒட்டைத் துப்பாக்கியா?'' என்றான் மகுடபதி.

''செத்துப் போவதற்கு அவ்வளவு அவசரமா?'' என்றார் கவுண்டர்.

''அவசரந்தான். உன்னைப் போன்ற பாவிகள் வசிக்கும் உலகத்தில் இருக்கிறதைவிட இறந்து போவதே மேல்.''

''அப்படியானால் உயிரோடு இருக்கவே உனக்கு இஷ்டமில்லையா?''

இதைக் கேட்டதும் மகுடபதிக்குச் சிறிது நம்பிக்கை உண்டாயிற்று. ஒரு வேளை கார்க்கோடக் கவுண்டரின் மனம் கூட இளகி விட்டதோ? தன்னைக் கொல்வதற்கு அவருக்கு மனம் வரவில்

லையோ? இல்லாவிட்டால் இத்தனை நேரம் ஏன் தயங்கிக் கொண்டு நிற்கிறார்? — அவருடைய மனம் உண்மையில் இளகியிருக்கும் பட்சத்தில் இந்தச் சமயத்தில் கொஞ்சம் போதனை செய்து அவருடைய மனத்தைத் திருப்ப முயல்வதே மேல் அல்லவா? மகாத்மா, அவருடைய அஹிம்சா தர்மம், அன்பு மதம் எல்லாம் மருதபதியின் மனத்தில் தோன்றின. ''பகைவனுக் கருள்வாய்'' என்னும் பாரதியார் பாட்டின் வரிகளையும் நினைவுபடுத்திக் கொண்டான். தன்னுடைய துவேஷம், கோபம் எல்லாவற்றையும் அடக்கிக் கொண்டு முகத்தில் மலர்ச்சியை வருவித்துக்கொண்டு கவுண்டரைப் பார்த்துச் சொன்னான்:

''அப்படி யொன்றும் நான் வாழ்வை வெறுத்து விடவில்லை. இந்த உலகத்தில் ஜீவித்திருக்கவே விரும்புகிறேன். தேசத்துக்காக இன்னும் எவ்வளவோ தொண்டுகளைச் செய்ய விரும்புகிறேன். இந்தப் பாரத தேசம் சுதந்திரம் அடைந்து பார்க்க ஆசைப்படுகிறேன். இந்தியக் குடியரசின் முதலாவது பிரசிடெண்டாகப் பண்டித ஜவாஹர்லால் நேரு வருவதைப் பார்க்க விரும்புகிறேன். நீங்களும் இந்தத் தேசத்தில் பிறந்தவர்தான்; பாரத மாதாவின் புதல்வர்தான். உங்கள் கையினால் சாவதைக் காட்டிலும் போலீஸ் துப்பாக்கியினால் சாக நேர்ந்தால் எவ்வளவோ சந்தோஷமாக உயிரை விடுவேன். ஐயா! உண்மையில் உங்களுக்கு நான் என்ன கெடுதல் செய்தேன்? எதற்காக என்னை நீங்கள் கொன்று பாவத்துக்குள்ளாக வேண்டும்? — உங்களுடைய இதயத்தில் கையை வைத்துச் சொல்லுங்கள்...''

மருதபதியின் பேச்சினால் கவுண்டரின் மனம் எவ்வளவு தூரம் மாறியதோ, என்னவோ, தெரியாது. அவர், ''இந்தப் பிரசங்கமெல்லாம் வேண்டியதில்லை. நீ உயிர் தப்ப வேண்டுமானால், அதற்கு வழி இருக்கிறது'' என்றார்.

மருதபதி மௌனமாக இருந்தான். அவன் உள்ளத்தில் மறுபடியும் சந்தேகங்கள் தோன்றின.

''இங்கே வா! இந்தக் காகிதத்தில் கையெழுத்துப் போட்டாயானால், இங்கிருந்து பிழைத்துப் போகலாம்'' என்று கவுண்டர் சொல்லி, தம்முடைய சட்டைப் பையிலிருந்து ஒரு காகிதத்தையும், பௌண்டன் பேனாவையும் எடுத்து மேஜையின் மேல் வைத்தார்.

மருதபதி தயக்கத்துடன் மேஜையண்டை நெருங்கினான். மேஜை மேல் விரித்து வைத்திருந்த காகிதத்தைப் படிக்கத் தொடங்கினான். பக்கத்தில் கவுண்டர் கையில் பிடித்த துப்பாக்கியுடன் நின்று கொண்டிருந்தார்.

காகிதத்தில் சில வரிகள் படித்ததுமே மருதபதியின் இரத்தம் கொதிக்கத் தொடங்கியது. ஆத்திர மிகுதி



யினால் மண்டை வெடித்து விடும்போலிருந்தது. பக்கத்தில் நின்ற கவுண்டரை அவனுடைய உடம்பின் ஒவ்வொரு அணுவும் வெறுத்தது.

அந்தக் காகிதத்தில் எழுதியிருந்தது இதுதான்:

''கள்ளிப்பட்டி மகா - ள - ள -ஸ்ரீ கார்க்கோடக் கவுண்டர் அவர்களுக்கு, மருடபதி தாழ்மையுடன் நமஸ்காரம் செய்து எழுதிக்கொண்ட விண்ணப்பம்.

நான் இத்தனை நாளும் செய்த குற்றங்களை மனப்பூர்வமாக ஒப்புக்கொண்டு, தங்களுடைய மேலான மன்னிப்பைக் கோருகிறேன்.. காங்கிரஸ் தொண்டன் என்று நான் வேஷம் போட்டுக் கொண்டு பணம் வசூலித்துத் துன்மார்க்கமான காரியங்களுக்கு உபயோகப்படுத்தியது உண்மை. தங்களுடைய கண்டிராக்டில் உள்ள கள்ளுக் கடைகளை மறியல் செய்யாம லிருப்பதற்காகத் தங்களிடம் பணம் கேட்டது நிஜம். தாங்கள் கொடுக்காதபடியினால் தங்களுடைய கள்ளுக்கடைகளில் கடுமையாக மறியல் நடத்தியதும் நிஜம். சிங்கமேடு தங்கசாமி கவுண்டர் தலைமையனார் பெண் செந்திரு சித்த



''சுடாதே! உன் தலைமேல் ஆணை'' என்று கத்தினான் பெரியண்ணன்.

சுவாதீனம் இல்லாதிருப்பது தெரிந்ததும், அவளுடைய நகைகளை அபகரிக்கும் எண்ணத்துடன் அவளை ஊரை விட்டுக் கடத்திக் கொண்டு போனேன். பெரியண்ணன் வந்து என்னைக் கைப் பிடியாய்ப் பிடித்த போது, அவனைக் கத்தியால் குத்தி விட்டேன். இப்பேர்ப்பட்ட பாதக மான காரியங்களையெல்லாம் செய்த தன் பொருட்டு மிகவும் பச்சாதாபப் படுகிறேன். தாங்களும் மகாராஜஸ்ரீ தங்கசாமிக் கவுண்டரும் ரொம்பவும் பெரிய மனசு செய்து என்னை இந்தத் தடவை மன்னித்து விட்டுவிட்டால், இனிமேல் இப்பேர்ப்பட்ட துர்க் காரியங்களில் இறங்குவதில்லை என்று கடவுள் சாட்சியாகப் பிரமாணம் செய்கிறேன். அதோடு, இந்தக் கோயமுத்தூர் ஜில்லாவில் அடிவைப்பதில்லை என்றும் பிரமாணம் செய்கிறேன். துராக்கிரகமாக இன்றைக்கு உங்களுடைய பங்களாவில் நுழைந்ததற்காகவும் என்னை மன்னித்து விட்டு விடும்படி வேண்டிக் கொள்கிறேன்.''

கடிதத்தை எப்படியோ முழுவதும் மகுடபதி படித்து முடித்தான். ஆனாலும் கடிதத்தை விட்டுக் கண்களை அகற்றாமல் தீவிரமாக யோசனை செய்யத் தொடங்கினான். இந்தக் காகிதத்தில் தன்னைக் கையெழுத்திடச் செய்யும் நோக்கம் இன்னதென்பது அவனுக்கு ஸ்பஷ்டமாக விளங்கி விட்டது. செந்திருவிடம் இதைக் காட்டித் தன்னிடம் அளவிலாத அருவருப்பு அவளுக்கு உண்டாகும்படி செய்வார்கள். இன்னும் பலருக்கும் பகிரங்கப்படுத்திக் கோயமுத்தூர் ஜில்லாவில் தான் தலைகாட்ட முடியாதபடி செய்வார்கள். காங்கிரசின் பெயருக்கே அழியாத மாசு தன்னால் உண்டாகி விடும்... இந்தக் காகிதத்தில் கையெழுத்துப் போட்டு உயிரைக் காப்பாற்றிக் கொள்வதைக் காட்டிலும் உயிரை விட்டு விடுவதே மேல். சித்திரவதை செய்தாலும் இதில் கையெழுத்துப் போடக் கூடாது. ஆனால் தான் உயிரை ஏன் விட வேண்டும்? இப்பேர்ப்பட்ட பாதகன் உலகத்தில் ஏன் ஜீவித்திருக்க வேண்டும்? தான் சாக வேண்டியிருந்தாலும் இவனைக் கொன்றுவிட்டு ஏன் சாகக் கூடாது?— ஆம்; மகுடபதி பல்லைக் கடித்துக் கொண்டு அவ்விதம் தீர்மானித்தான். எப்படியாவது இன்றைக்கு இந்தக் கொடும் பாதகனை எமலோகத்துக்கு அனுப்பி விட வேண்டும். பிறகு தனக்கு என்ன கதி நேர்ந்தாலும் பாதகமில்லை. ஆனால், எப்படி....! எப்படி?... இவன்

## ஒளிமயமான ஒலிம்பிக் !



இரவைப் பகலாக்கும் பிரகாசமான ஒளி விளக்குகள், மூனிச் நகரில் ஒலிம்பிக் விளையாட்டுப் போட்டியின் போது பயன்படுத்தப்பட இருக்கின்றன. இரவு நேரத்தில் நடக்கும் விளையாட்டுக்களையும் ரசிகர்கள் நன்கு பார்த்து ரசிக்கலாம். மேலும் 'ஒளி நட்சத்திரங்கள்' என அழைக்கப்படுகிற இந்த விளக்குகள் டெலிவிஷனுக்கென காமிராக்கள் விளையாட்டுக்களை நன்கு படமெடுக்கவும் பெரிதும் பயன்படும். —பு. பி. எஸ்.

---

கையில் உள்ள துப்பாக்கியைப் பிடுங்கிக் கொண்டு சுட்டால் என்ன?... அது சாத்தியமா? படீரென்று தட்டிவிடலாமா? ஆளையே பலமாகப் பிடித்துத் தள்ளி விடலாமா?... மேஜையின் கீழ் புகுந்து அப்பால் சென்று நாற்காலியை எடுத்து எறியலாமா?...

''என்னப்பா! கையெழுத்துப் போடப் போகிறாயா?'' என்று கவுண்டரின் குரல் கேட்டது.

மகுடபதி நிதானமான குரலில், ''கடவுள் சாட்சி போதுமா?'' என்றான்.

''போதாது; நீ கடவுளே இல்லை என்று சாதித்து விடுவாய். மடத்துச் சாமியாரை இங்கே அழைத்து வரச் செய்கிறேன். அவர் சாட்சி போட வேணும்.... ஆ!''

கவுண்டர் அடுத்த கணத்தில் சுவரில் போய்ப் படார் என்று மோதினார். அவர் கையிலிருந்த துப்பாக்கி இன்னொரு பக்கம் போய் விழுந்தது. அதிலிருந்து 'டுடும்' என்று ஒரு வெடி வெடித்தது. அறையில் புகை சூழ்ந்தது. மகுடபதி நாலாபுறமும் பார்த்துவிட்டு அந்தத் துப்பாக்கியை எடுத்துக்கொள்வதற்கு ஓடினான். அதற்குள் அறைக் கதவு திடீரென்று திறந்தது. யமகிங்கரன் போலத் தோட்ட வேலைக்காரன் ஓடிவந்து மகுடபதியைக் கட்டிப்

பிடித்தான். தட்டுத் தடுமாறி எழுந்திருந்த கவுண்டர், ''கட்டு அவனை, மேஜைக் காலோடு சேர்த்துக் கட்டு!'' என்றார். தோட்டக்காரன் அவ்வாறே மருடபதியை இழுத்துச் சென்று தான் மேலே போட்டிருந்த வேட்டியினால் மேஜைக் காலோடு சேர்த்துக் கட்டினான்.

கவுண்டர் துப்பாக்கியை மறுபடியும் எடுத்துக் கொண்டார். மருடபதியை நோக்கிக் குறி பார்த்தார். ''அடே! இந்த வேலைகூடத் தெரியுமா உனக்கு? காந்தியின் சீடன் என்றல்லவா பார்த்தேன்'' என்று கூறி ஹஹ்ஹஹா என்று பேய் சிரிப்பதுபோலச் சிரித்தார்.

''இதோ பார்! இந்த ரிவால்வரில் இன்னும் ஐந்து குண்டுகள் இருக்கின்றன. ஆனால், உன்னை அவ்வளவு சுலபமாய் விட்டு விடுவேன் என்று நினைக்காதே! முனியா! கொண்டு வா, சவுக்கை!'' என்று கர்ஜித்தார்.

முனியன் அறைக்கு வெளியே சென்றான். மறு கணத்தில் நடையில் ஏதோ தடபுடல் சத்தம் கேட்டது. ''விடு, விடு'' என்று ஒரு குரல் அலறிற்று. பின்னால் இருந்து இழுத்த முனியனை மீறிக் கொண்டு பெரியண்ணன் உள்ளே வந்தான். அவனுடைய வெறி கொண்ட கண்களால் வெறித்துப் பார்த்தான். மருடபதி கட்டுப்பட் டிருப்பதையும் கார்க்கோடக் கவுண்டர் அவனைச் சுடும் பாவனையாகத் துப்பாக்கியைக் குறி வைத்து நிற்பதையும் கவனித்தான்.

''கவுண்டா! சுடாதே!'' என்று அலறினான்.

''ஓகோ! நீயும் வந்து விட்டாயா?'' என்றார் கார்க்கோடக் கவுண்டர்.

''ஆமாம்; வந்து விட்டேன். கவுண்டா! நல்ல சமயத்தில்தான் வந்தேன். அவனைச் சுடாதே! உன் தலை மேல் ஆணை!'' என்று பெரியண்ணன் கத்தினான்.

''சீ, நாயே! உன்னை யார் கேட்டது? முனியா! இழுத்துக் கட்டு அவனையும்!'' என்றார் கவுண்டர்.

''என்னைக் கட்டு! என்னைச் சுடு! கொல்லு! அந்தப் பிள்ளையைச் சுடாதே!''

''ஓகோ! அப்படியா? உன் கண்ணெதிரிலேயே சுடுகிறேன், பார்!'' என்று கார்க்கோடக் கவுண்டர் மருடபதியை நோக்கிக் குறி பார்த்து விசையிலும் கையை வைத்தார்.

''ஐயோ வேண்டாம், கவுண்டா! **அவன் உன் மகன்!**'' என்று பெரியண்ணன் அலறினான்.

''என்ன?'' என்று கூவினார் கவுண்டர்.

''ஆமாம்; காணாமற் போன உன் மகன்தான். இடது காதுக்குப் பின்னால் அடையாளம் இருக்கிறது. வேணுமானால் பார்த்துக் கொள்'' என்றான் பெரியண்ணன்.

கள்ளிப்பட்டிக் கவுண்டருடைய உடம்பு வெட வெட வென்று ஒரு நிமிஷம் நடுங்கியது. அவருடைய கையிலிருந்த துப்பாக்கி கீழே விழுந்தது. மறுகணம் அவரும் தள்ளாடிச் சுருண்டு கீழே விழுந்தார். (தொடரும்)

---

## இரு நடன அரங்கேற்றங்கள்

சென்னை பி. ஏ. எஸ். எப். இந்தியா கம்பெனியின் மானேஜர் திரு பி. கிருஷ்ணன் அவர்களின் குமாரி ராஜேசுவரியின் பரத நாட்டிய அரங்கேற்றம் எஸ். ஜீ. எஸ். சபா கல்யாண மண்டபத்தில் சமீபத்தில் வெகு விமரிசையாக நடைபெற்றது. இந்த நடன வைபவத்துக்கு ஸ்ரீமதி சாவித்திரி கணேசன் தலைமை வகித்தார்.

★

செல்வி கிரிஜாவின் பரத நாட்டிய அரங்கேற்றம் அண்மையில் பத்மஸ்ரீ சிவாஜி கணேசன் தலைமையில் வெகு சிறப்பாக நடந்தேறியது. செல்வி கிரிஜாவும், செல்வி ராஜேசுவரியும் நாட்டிய கலா ரத்தினம் அருணாசலம் பிள்ளை அவர்களிடம் பரதம் பயின்றவர்கள்.



ராஜேசுவரி



கிரிஜா

ஆண்மை—
திடவடிவம்,
தீரம், திறமை,
கம்பீரம்.
ஆண்மையின்
பன்முகப்
பண்புகளைப்
படித்தறிந்த
படைப்பு
'எஸ்டர்காட்'

MAFATLAL GROUP

எஸ்டர்காட்®

ஆண்மகன் இதோ ஆளவருகிறான்.
எங்கும் அவன் செங்கோல்.
'எஸ்டர்காட்' அவன் உடுப்பு.

'எஸ்டர்காட்' பாலியெஸ்டர் இழை கலந்த காட்டன் சூட்டிங்குகள்.

தவிர, இளம் சாயல்களிலும், எடுப்பான வண்ணங்களிலும், பெருமிதப் பிரிண்டுகளிலும் 'மெ.ப்ரின்' 100% பாலியெஸ்டர் சேலைகள், பாலியெஸ்டர் இழை கலந்த காட்டன் சேலைகள்; 'மெ.ப்ரின்' பாலியெஸ்டர் இழை கலந்த உடுப்புத் துணிகள்—

இலேசான வாயில்கள், கோடை நிழல் படரும் கேம்ப்ரிக்குகள், கோலாகல நகை மிளிரும் பாப்லின்கள்; அதிநவீனமான அரும்பெரும் அழகு வண்ணங்களிலும், பிரிண்டுகளிலும் 'டெரோலேல' பாலியெஸ்டர் இழைகலந்த காட்டன் ஷர்ட்டிங்குகள்.

**மபத்லால்
க்ரூப்**



ரெடிமேட் ஷர்ட்டுகள் வாங்கும்போது தரமான மபத்லால் உடைகளுக்கான 'ஸ்மார்ட்டி' சின்னம் இருக்கிறதா பாருங்கள்!

AIYARS-MC173 TAM

# இவர் பாராட்டுக்குரியவர்



பெயர்: அ. ஸ்ரீநிவாஸன். முன்னம் வாழ்ந்த ஊர்: திருவானைக்கோவில். தற்போது வாழும் ஊர்: விஜயவாடா.

திருச்சி சந்திப்பில் ரயில்வே நாணய அலுவலகத்தில் எழுத்தராகப் பத்து வருஷங்களுக்கு முன் இருந்தார். இவரும் இவரைச் சுற்றியுள்ளோரும் மேல் பதவிக்குச் செல்லவேண்டும் என்றால் அதாவது பொருளாளராக (Cashier) ஆக வேண்டுமானால் ரூ. 3000 'டிபாசிட்' கட்ட வேண்டும் என்ற சட்டம் இருந்தது. இதைக் கட்ட முடியாமல் கஷ்டப்பட்டனர். இன்ஷூரன்ஸ் கொடுக்கும் சலுகை ரயில்வே சட்டத்தில் இடம் பெறவில்லை என்பதைக் கண்டார். தனியொரு மனிதனாகவே உரிமையைப் பெறக் கஷ்டப்பட்டார்.

அச்சலுகை ரயில்வே சட்டத்தில் இடம் பெற வேண்டும் என்று குரல் எழுப்பித் திருச்சி மாவட்ட பாராளுமன்ற அன்றைய அங்கத்தினர் ஜனாப் எம். கே. எம். அப்துல் சலாம் அவர்களை அணுகி, அவரின் உதவியுடன், தில்லி சென்று, மத்திய அமைச்சர்கள் ஜனாப் ஷா நவாஸ் கான், எஸ். வி. ராமசாமி, அபித் அலி ஆகியோரைப் பேட்டி கண்டு அத்திட்டத்தைக் கொண்டு வர அரும் பாடுபட்டார். பலமுறை டெல்லி சென்றும், சிவப்புநாடா முறையினால் 1957ல் ஆரம்பிக்கப்பட்ட முயற்சி 1965ல் தான் சட்டமாக உருவாயிற்று. ஒரு சாதாரண மனிதனால் எடுக்கப் பட்ட முயற்சி பாராளுமன்றத்தில் சட்டத்தைத் திருத்தும் அளவுக்குச் சென்று வெற்றி கண்டது. ஆனால் அது அவருக்குப் பயன் படாமல் இப்போது வரும் எழுத்தர்களுக்குப் பயன் படுகின்றது. இந்தியா முழுவதும் பயன் படக்கூடிய ஒரு திட்டம் ஒரு சாதாரண மனிதனின் முயற்சி என்று பலருக்குத் தெரியாது. அவரைக் கேட்டால் யாருக்குத் தெரிந்து என்ன ஆகவேண்டும்? வெற்றி கண்டதில் எனக்கு மகிழ்ச்சியும், நிம்மதியும் கிடைத்துள்ளது என்பார்.



ஸ்ரீநிவாஸன்

ஒழுக்கம், நாணயம், பண்பு ஆகிய பொது வாழ்க்கையின் நியாயங்கள் யாவும் பறி போகாமல் காக்கும் ஒரே வேலி இறை உணர்வுதான். மனம் வளர்வதற்கும் மருந்து அதுதான். அதைப் பெருக்கும் விதத்தில் ஸ்ரீ ராமதாஸ் பக்த ஜன ஸபா (திருவானைக்கோயில்) வின் காரியதரிசியாகப் பொறுப்பு ஏற்றுப் பல சேவைகள் செய்துள்ளார்.

திருவானைக்கோயில் அருகே உள்ள திருமஞ்சனக் காவேரி என்று புகழப்படும் சிறிய ஆற்றில் மழை நாட்களில் வெள்ளத்தால் பாதிக்கப்பட்டு, நடைபாதை மிகவும் சீர்கெட்டு, மக்களும் மாவும் ஸ்நானம் செய்யக் கஷ்டப்பட்டனர். இதைக் கண்ட அவர், முன்னாள் பாராளுமன்ற அங்கத்தினர் ஜனாப் எம். கே. எம். அப்துல் சலாம் அவர்களை அழைத்து வந்து காண்பித்து, ஊர் மக்களிடம் கையொப்பம் சேகரித்து மாவும் மக்களும் நீராடத் தனித் தனியே படித் துறை கட்டவும் நடைபாதை அமைக்கவும் அரசாங்கத்துடன் போராடி ரூ. 5800 செலவுக்கு அனுமதி பெற்று மக்கள் நன்மை பெறக் கண்டார்.

பல பெரியோர்களின் ஆசியைப் பெற்றிருப்பதுடன், அவர் அவ்வூரை விட்டுப் பிரியும் காலத்தில் ஊர் மக்களும் ஒன்றுகூடிப் பாராட்டினர். "மாவும் மக்களும் பிறவும் பலனடையுமாறு திருமஞ்சனக் காவேரி படித்துறையை விரிவுபடுத்த அரசாங்கத்தினருடன் போராடி வெற்றி கண்ட தங்கள் தொண்டைத் திருவானைக்கா ஊரும் ஊரருகே ஓடும் ஆறும் நீரளவு காட்டும் திருமஞ்சனக் காவேரிப் படித்துறைகளும் என்றும் நன்றியுடன் எடுத்துரைத்துக் கொண்டிருக்கும். "அன்புப் பணி செய்ய என்னை ஆளாக்கி விட்டு விட்டால் இன்ப நிலை தானே வந்தெய்தும் பராபரமே" என்ற தாயுமானவரின் திருவாக்கின்படி பணி செய்யும் தாங்களும், தங்கள் மனைவியும் மக்களும் எல்லா வளமும் நலமும் பெற்று நீடூழி வாழ்க என்று நெகிழ்ந்த நெஞ்சத்துடன் வாழ்த்தி வழியனுப்புகிறோம்" என்று அனுப்பி வைத்தார்கள்.

தம் பணியை இத்துடன் நிறுத்திக்கொள்ளாமல் வந்த ஊரிலே, அயல் மாநிலத்திலே கூட்டு வழிபாட்டை வலியுறுத்தி "ஸ்ரீ சீதாராம பக்த ஜன பிருந்தம்" என்று ஆரம்பித்து வாரந்தோறும் பஜனைகள், போட்டிகள் நடத்த ஏற்பாடு செய்துள்ளார். அவர் வசிக்கும் பகுதியில் தெலுங்கர், தமிழர், கன்னடியர், மகாராஷ்டிரர் என்று பலமொழி பேசும் மக்கள் இருப்பினும் அவர்கள் எல்லோரையும் ஈடுபடுத்தி ஆஞ்சநேயரைப் பிரதானமாகக் கொண்ட சிவ–கேசவ ஆலய நிர்மாணக் குழு ஒன்று அமைத்துச் செயல் புரிந்து கொண்டிருக்கிறார்.

- எஸ். எல். நரஸிம்மன்

## ஓரே சலவையில் 3 வழிகளில் செயல் புரிந்து ...




# டெட் துணிகளை அதிவெண்மையாக்குகிறது

— மற்ற எந்த பவுடரையும்விட.

**இதோ, எப்படி என்று பாருங்கள்:**

1. **டெட்** டிலுள்ள தனிப்பட்ட சக்திவாய்ந்த பொருள் அதி விரைவாகத் துணியில் ஊடுருவிச் சென்று, மறைந்துள்ள அழுக்கைக்கூட நொடியில் விரட்டி அடிக்கிறது. துணிகள் வெண்மையாகின்றன.
2. **டெட்** அழுக்கை வெளிக்கொணர்ந்த பிறகு, அது மீண்டும் படியாமல் தடுக்கிறது. துணிகள் அதிக சுத்தமாகின்றன; சுத்தமாகவே நீடித்து இருக்கின்றன.
3. **டெட்** துணிகளை அதிவெண்மையாக்குகிறது. துணிகள் முன்னைவிட அதிவெண்மையுடன் பளிச்சிடுகின்றன. (நீலம் அல்லது வெண்மைச் சாதனம் சேர்க்கவேண்டிய அவசியமில்லை.)

**இன்றே டெட் வாங்குங்கள்!** ஸ்வஸ்திக் ஆயில் மில்ஸ், பம்

SHILPI HPMA 38A/70



இந்தப் பாலம் ஆயிரத்துத் தொள்ளாயிரத்து முப்பத்தாறில் கட்டப்பட்டது. இதன் நீளம் எண்ணூற்று இருபது மீட்டர். இந்தப் பாலத்தின்மீது நடப்பதோ, பாலத்தை போட்டோ எடுப்பதோ கூடாது. அத்துமீறி நடப்பவர்கள் தண்டனைக்குள்ளாவார்கள்.

--ஒரு ரயில்வே பாலத்தின் முன் அறிக்கைப் பலகை.

# சென்ட்ரல்

**பி.வி.ஆர்**

**அத்தியாயம் 8**

கேதாரமும் மணியும் ரீடயரிங் அறையை அடைந்தார்கள்.

''என்னடா, சாப்பிடறே, மணி? காப்பியா, டீயா?''

''இரண்டுமே வேண்டாம். நான் இப்பத்தான் டிபன் காப்பி சாப்பிட்டேன்.''

''உன்னைப் பார்த்து ஒரு யுகம் ஆச்சு என்பார்களே, அதுமாதிரி உண்மையாகவே ஒரு யுகம் ஆச்சு.''

''வாஸ்தவத்தில் நான் உன்னை மறந்தே போயிட்டேன்'' என்ற மணி, ''இப்பவும் சாயங்காலங்களில் புஸ்தகம் தான் படித்துக் கொண்டிருக்கிறாயா? கல்யாணம் ஆச்சா?'' என்று கேட்டான்.

''இல்லை. ஆனால் கூடிய சிக்கிரம் ஆயிடும்னு தோணறது... ஆமாம், உன் கதையைச் சொல்லு. இப்பவெல்லாம் கால்பந்தும் கூடைப்பந்தும் ஆடுகிறாயா?''

''என் வாழ்க்கையைக் குட்டிச்சுவராக்கியவர்கள் இரண்டு பேர். ஒண்ணு, கால்பந்து. இன்னொண்ணு, என் தாயாதிக்காரர்கள்... ஒண்ணு படிப்பை ஒழிச்சுக் கட்டிடுத்து. இன்னொண்ணு சொத்தைத் தீர்த்து அழிச்சுது.''

''இப்போ என்ன செய்கிறாய்?''

''ஏதோ செய்கிறேன். எப்படியோ பிழைப்பு நடக்கிறது. விட்டுத் தள்ளு. மேலே கேட்காதே.....''

''பள்ளிக்கூடத்திலே படிக்கிறபோது எப்படி என்னைக் கோட்டா பண்ணி அழ வைப்பாய்? இப்போது நினைச்சாலும் உன் மேலே ஆத்திரம் வர்றது'' என்றான் கேதாரம்.

''அப்போ நீ எப்படியடா இருந்தாய்? அதை முதல்லே நினைச்சுப் பாரு. காவி ஏறிய வேஷ்டி, இஸ்திரி போடாத ஷர்ட்டு. கொத்தவரைக்காய் பின்னல். பெண்கள் பூ வைச்சுக்கிற மாதிரி, பின்னலுக்கு மேலே செருகின சங்கு புஷ்பம். நெற்றியிலே பட்டை பட்டையாக விபூதி.... இந்தக் கோலத்திலே நீ தூக்க முடியாமல் புஸ்தக மூட்டையைத் தூக்கிக் கொண்டு வருவே...சாப்பாட்டு வேளையிலே வகுப்பறையே காலியாகக் கிடக்கிறப்போ, ஒரு மூலையிலே ஒடுங்கி ஒளிஞ்சிண்டு மாமி பிசைஞ்சு கொடுத்த எருமைத் தயிர் — பழைய சாதம்—வடு மாங்காயைத் தொண்டைக் குழாய் அடைக்க அரை மணி நேரம் சாப்பிடுவாய். உன்னைக் கேலி பண்ணாமல் யாரைக் கேலி பண்ணுவார்கள்?''

''ஆனால், மணி! நீதாண்டா என்னைக் காவிரியிலிருந்து காப்பாத்தினாய்....: அதை நான் சாகிற வரைக்கும் மறக்கவே மாட்டேன்.''

ஒரிரு நிமிஷங்களுக்கு மணி பதில் சொல்லவில்லை. எங்கேயோ பார்த்தவனாய் உட்கார்ந்து கொண்டிருந்தான்.

கேதாரத்தின் கண் முன் விதியின் அந்தத் தோல்வி நாள் நிழலாக ஓடியது. அதே காட்சி மணியின் மனக்கண்ணுக்கும் தெரிந்தது.

ஆடிப் பெருக்கு. காவிரி பொங்கிச் சிரித்து, கரைகளை வாரி அணைத்துக் கொண்டு ஓடினாள். எல்லா வருடங்களைப் போல அந்த வருடமும், மணியும் அவனுடைய கோஷ்டியும் ரயில்வே பாலத்திலிருந்து ஆற்றில் குதித்து, சீற்றத்துடன் பாயும் நதியுடன் சமர் செய்து கரையை அடைந்து கரையில் இருப்போரின் கரகோஷத்தைப் பெற்று அவர்கள் அளித்த சித்திரான்னங்களை வயிறு புடைக்கத் தின்றார்கள். இக் கரைக்கு அக்கரை என்று நீந்தினார்கள்.

இக்கரையிலிருந்து அக்கரைக்குப் போய், மீண்டும் இக்கரைக்கே திரும்பிய மணி மேல் மூச்சு கீழ் மூச்சு வாங்க உட்கார்ந்திருந்தான். கைகால்கள் அசைக்கவும் முடியவில்லை. மார்புக் கூடு வலித்தது. அவனுடைய கோஷ்டியில் மற்ற எல்லோரும் இன்னும் அக்கரையிலே இருந்தார்கள். ஒரு சிலர், ரயில்வே பாலம் வழியாக நடந்து வந்து கொண்டிருந்தார்கள்.

கையெழுத்து மறையும் வேளை. ஜனக் கூட்டம் மெள்ள மெள்ளக் கலைந்து கொண்டிருந்தது. மணி தரையிலே சாய்ந்து படுத்துக் கொண்டான்.

அதே சமயத்தில், ''ஐயோ!'' என்ற அலறல் கேட்டது.

மணி திடுக்கிட்டு எழுந்தான். மங்கிக் கொண்டு வரும் வெளிச்சத்தில், ஒரு பையன் ஆற்றோடு கால்களை மேலே கொண்டு வந்து நீந்த முடியாமல் தத்தளிப்பது தெரிந்தது. தத்தளிக்கும் பையனை மேலும் விட்டுவிடக் கூடாது என்று தோன்றியது. சக்தியை எல்லாம் திரட்டி ஒரே எட்டில் பாய்ந்து அந்தப் பையனுடைய தலையை ஒரு கையால் கவ்வினான். அவனது குடுமி சிக்கியது.



அதன் பின் நதியின் போக்கோடு, கரையை நோக்கிச் செல்லுவது கடினமாகப்படவில்லை.

அவன் கரையில் பையனுடன் விழுந்தான்.

மணி கண் விழித்துப் பார்க்கையில், யாரோ முன்பின் பார்த்திராத ஒருவருடைய வீட்டு ஹால் ஊஞ்சலில் படுத்துக் கொண்டிருப்பதை அறிந்தான்.

''அந்தப் பையன் எங்கே ?''

'' இதோ, நான்தாண்டா, மணி.'' குரல் தலைமாட்டிலிருந்து எழுந்தது.

''யாருடா, கேதாரமா?''

''ஆமாம்டா! கரையோரமா நீஞ்சலாம்னு இறங்கிட்டேன்.... நதியோட வேகத்தைப் பத்தி யோசிக்கலே....நீங்களெல்லாம் நீஞ்சறதைப் பார்த்து ஒரு ஆசை கிளம்பிடுத்து.''

''முட்டாள்.... முட்டாள்....''

மீண்டும் கண் மூடின மணி விழித்த போது மறுநாள் காலை ஏழு மணி.

* * *

**“நா**ன் ரொம்பக் கடமைப்பட்டிருக்கிறேன் மணி.... ரொம்பக் கடமைப்பட்டிருக்கிறேன்.... இன்னிக்கு நான் ஒரு பி. ஈ. படித்து ஐ. ஆர். எஸ். இ. பாஸ் பண்ணி ரயில்வேயில் ஆயிரத்துக்கும் மேலே சம்பாதிக்கிறேன்னு, அதுக்குக் காரணம் நீ அன்னிக்குப் போட்ட உயிர்ப் பிச்சைதாண்டா.''

மணி சிரித்தான்.

''அன்னிக்கு முட்டாள் மாதிரி ஆற்றிலே இறங்கினே.... இன்னிக்கு முட்டாள் மாதிரி பேசறே.... நீ ஒண்ணும் மாறவேயில்லை.... குடுமி ஒண்ணு தான் மாறியிருக்கு. ஆனால் அன்னிக்கு நீ குடுமி வைச்சுண்டிருந்தது எனக்கு எவ்வளவு சௌகரியமாக இருந்தது தெரியுமா ?''

''இன்னிக்கும் மாமி உன்னைப் பற்றிப் பேசுவாள் !''

''டேய், கேதாரம் ! அன்னிக்கு உசிருக்கு மன்றாடிக் கொண்டிருந்தவன் கேதாரம், என் வகுப்பு மாணவன் என்ற காரணத்துக்காகத்தான் நான் நதியிலே குதிச்சுக் காப்பாத்தப் புறப்பட்டேன்னு நீ நினைக்கிறயா? அப்படி நினைச்சா நீ இவ்வளவு படிச்ச படிப்புக்கு அர்த்தமே இல்லை.... ஓர் உயிர் தவிக்கிறது. இன்னொரு உயிர் அதைக் கண்டு தவிக்கிறது. காப்பாற்றத் துடிக்கிறது.... மனுஷனை மனுஷன் வாழ்க்கைக் கஷ்டங்களிலிருந்து காப்பாற்ற மாட்டான்... அதுவும் பணச் செலவு வந்துவிடும் என்று தெரிந்தால்...ஆனால் மனுஷனுடைய மனத்தையும் சிந்தனையையும் மீறித் துடிக்கிறது பாரு, அது தாண்டா உயிரின் மனம்... அதற்கும் வீரம் உண்டு, சோகம் உண்டு, தாகம் உண்டு.... கேதாரம் என்கிற உயிர் அதனுடைய கூட்டிலிருந்து பிரிந்து போகாமலிருக்க மணி என்கிற கூட்டில் இருக்கிற உயிர் தவிச்சுது.... அவ்வளவுதான். கேதாரத்துக்குப் பதிலாக வேறு யாராக இருந்திருந்தாலும், மணிக்குப் பதிலாக வேறு யாராக இருந்திருந்தாலும் இது நடந்திருக்கும்.''

''ரொம்ப எளிசாச் சொல்லிவிட்டே. அது சரி, இன்னிக்கு உன்னுடைய 'புரோகிராம்' என்ன?''

''ஒன்றுமில்லை.''

'' என் மாமா... அவர்தாண்டா தர்ம குண்டாமணின்னு கோட்டா செய்வியே, அவர் என் பிராணனை வாங்கிக் கடைசியில் பெண் பார்க்க வரவழைத்து விட்டார். மூன்று மணிக்

குப் பெண் பார்க்கப் போகிறேன்..... நீயும் கூட வாயேன்...... அரை மணி நேரத்திலே சொஜ்ஜியையும் பஜ்ஜியையும் தின்று விட்டு, ஏதாவது சினிமா பார்க்கலாம்......''

''உன் மாமா என்னடா நினைப்பார்? அரை மணி நேரத்துக்குள்ளே அவசரப்பட்டால் அவருக்கு ஏமாற்றமாக இருக்கும்.''

''போடா, முட்டாள்! அவர் சந்தோஷப்படுவார்..... புதன்கிழமை இரண்டாவது பெண்.... வெள்ளிக்கிழமை மூன்றாவது பெண்... சனிக்கிழமை நான் பம்பாய்க்குத் திரும்பிப் போகிறேன்!''

''சுயம்வரமே நடத்தியிருக்கலாம்!''

''இதையேதாண்டா, இதே வார்த்தையைத்தாண்டா நானும் அவ



ரிடம் சொன்னேன். மனுஷனுக்குக் கை நிறைய வரதட்சிணை வாங்கணும்னு ஆசை. ஆனால் அவரையும் குத்தம் சொல்ல முடியாது. ஓர் இருபது ரூபாய் கிடைச்சா, தம் இரண்டு பெண்களையும் கலியாணம் செய்து கொடுத்து விடுவார்.''

''நீயே ஒருத்தியைப் பண்ணிக் கொள்ளலாமே?''

''என்னடா, உளர்றே...? இரண்டு பேர்களுடனும் நான் கூடப் பிறந்தவன் மாதிரி வளர்ந்திருக்கேன். என்னை ரெண்டும் 'டா' போட்டுப் பேசும்.''

மணி சிரித்தான்.

''என்னடா சிரிக்கிறே ?''

''அவர்களில் ஒருத்தியை நீ கலியாணம் பண்ணிக் கொண்டால், அவள் கேட்பாள் உன்னிடம்: 'ஏண்டா, இன்னிக்குச் சாயங்காலம் சினிமாவுக்குப் போகலாமாடா'ன்னு. அதுக்கு நீ, 'சரிடீ' என்பே. இல்லே...?''

''அது நடக்காது.... என்ன நாம் போவோமா ?''

மணி ஒருகணம் யோசித்தான். ரொஸாரியோ கண் முன் நின்றார். அவருக்கு அவசரமாக இருநூறு ரூபாய் தேவை. சைக்கிள் விற்றால் இருநூறுக்கு மேலே கிடைக்கும். லால்சந்திடம் விற்றால் அவன் மல்லுக்கு நின்று நூற்றைம்பதோடு அனுப்புவான். அப்புறம் கை விரலில் இருக்கிற மோதிரத்தையும் விற்க வேண்டி வரும். சாயங்காலத்துக்குள் இந்தப் பிரச்னைக்கு ஒரு முடிவு காண வேண்டும். கேதாரத்துடன் சினிமாவுக்குப் போனால், திரும்பி வர ஆறரை, ஏழு மணி என்றாகிவிடும்.

''இன்னிக்கு வேண்டாம்டா, இன்னொரு நாள் பார்த்துக் கொள்ளலாம்.''

''ஓகே!'' என்ற கேதாரம், ''ஏண்டா மிஸ். மங்களாவை உனக்குத் தெரியுமா ?'' என்று கேட்டான்.

''என்னடா, திடீர்னு எஸ்.எஸ்.ஸின் பெண் ஞாபகம் உனக்கு வர்றது.....?''

''சொல்லேன், தெரியுமா?''

''நன்னாத் தெரியும்.''

''எப்படி ?''

''வால் ஆட்டாதே. ஒட்ட நறுக்கி விடுவாள். சகஜமாகப் பேசுகிற பெண்களிடம் எப்போதுமே ஜாக்கிரதையாக இருக்கணும். சகஜமாப் பேசுகிற சுபாவத்தைப் பெண்மையின் பலவீனம் என்று ரொம்பப் பேர் தப்பாக நினைக்கிறார்கள்.''

''சீ, நான் அப்படி நினைத்துக் கேட்கவில்லே......''

''அவள் ரொம்ப நல்ல பெண்ணாக்கும் !'' என்றான் மணி.

''பம்பாயில் அவளுடைய சிநேகிதி ஒருத்தி இருக்கிறாள். பெயர் ரேணுகா. அவள் மூலமாகத்தான் எனக்கு மங்களா அறிமுகமானாள்.''

'இன்னிக்குக் கார்த்தாலே உன் வண்டியிலிருந்து அவள் இறங்குவதைப் பார்த்தேனே!' என்று சொல்ல மணி வாயெடுத்தான். ஆனால் அடுத்த கணமே பர்ஸ் கண் முன் நின்றது.

''அப்படியா ?''

''எனக்கும் அவள் நல்ல பெண் என்றுதான் படுகிறது.''

''ஆமாம், எதற்கு அடி போடுகிறாய்? மூணு பெண்களைப் பார்க்கிறது போதாதா ?''

''மூணு பெண்களையும் எனக்குப் பிடிக்கப் போவதில்லே என்று எனக்கு இப்போதே தெரியும்!''

''இப்போதுதான் தெரியுமா? அல்லது பாம்பேயிலிருந்து புறப்படும் போதே தெரியுமா?''

''இப்போது.''

''அப்போ, நீ மூன்று பெண்களையும் பார்க்க வேண்டாம்....''

''இல்லே..... மாமா சென்ட்ரல் ஸ்டேஷன்லே, நட்ட நடுவே நின்னு கத்தி ஆள் கூட்டம் சேர்த்து விடுவார்.''

''மங்களா...?''- இழுத்தான் மணி,

''எனக்குப் புரிகிறது. அவளுடைய அப்பாவைத் தெரியும். என் மாமாவுக்கு நன்னாத்தெரியும். எனக்கு சுமாராக...''

''அப்போ நன்னாத் தெரிந்து கொள்ள ஒரு வாய்ப்பு இருக்கு.''

''என்னடா, உளர்றே ?''

''சிவா — விஷ்ணு கோயிலிலே தினமும் பாகவதம் நடக்கிறது. சந்தான் கோபாலாச்சாரியார் சொல்கிறார். தினமும் கேட்கிறேன். எஸ். எஸ்.ஸும் வர்றார். இன்னிக்கு மூணு பேருமா போவோம்.''

''பாகவதமா?''

''ஏண்டா, மூஞ்சியைச் சுளிக்கிறே? 'பயாக்ரபி ஆஃப் லார்ட் கிருஷ்ணா' என்றால்தான் பிடிக்குமா? என்ன வர்றியா ?''

''சரி !''

''அப்போ ஆறு மணிக்கு இங்கேயே இரு.''

''ஆகட்டும் !''

''நான் வரேன். எனக்கு நிறைய வேலை இருக்கு.''

''எங்கே, எந்த ஆபீஸில் வேலைன்னு கேட்டால் பதில் சொல்ல மாட்டேன் என்கிறாய் !''

''தரித்திர வேலையடா... சொன்னால் என்னைப் பத்தி ரொம்ப மட்டமாய் நினைப்பாய்... எஸ். எஸ். எல். ஸி. பாஸ் செய்தவன், பெரிய கால்பந்

தாட்டக்காரன் செய்யற வேலையா இதுன்னு கேட்பே...! இந்த அறைக் குள்ளேகூட விடமாட்டே, சரி சரி, நான் வர்றேன்......''

* * *

**ம**ணி பத்து.

'என்கொயரி' கவுண்டரில் கூட்டம் இல்லை. மணி மற்ற கவுண்டர்கள்மீது நோட்டம் விட்டு விட்டு மங்களாவிடம் வந்து சேர்ந்தான். மங்களா 'ரீடர்ஸ் டைஜஸ்டை' ஒரு கையில் வைத்துக் கொண்டு, இன்னொரு கையைக் கன்னத் தில் வைத்தவளாய் உட்கார்ந்திருந்தாள்.

''ரயில் கவிழ்ந்தாலும் கன்னத்தில் கை வைக்கக் கூடாது.''

நிமிர்ந்து பார்த்த மங்களா, ''ஓ, நீங்களா?'' என்றாள்.

''ஏன், கேதாரமோ என்று நினைத் தாயோ...?'' என்று முறுவலித்தான் மணி.

''அவரைப் பற்றி நான் ஏன் நினைக்க ணும்? ஏதோ ரேணுகா தகவல் சொல்லி அனுப்பினாள் அவர் மூலமாக. வந்த இடத்தில் அஜாக்கிரதையில் பர்ஸைத் தொலைத்துவிட்டு, இங்கே வந்து பம்பாய்க்குப் பர்த் வேணும்னு அழுதார்.....''

''பர்த் இல்லையாக்கும்.''

''ஊஹூம்... இருந்தால் ஏன் அழ றார்....? அது சரி, எங்கே இவ்வளவு தூரம்....?''

'' இந்தக் கேதாரமும் நானும் எஸ். எஸ். எல். சி. வரை ஒன்றாகப் படித்தவர்கள்.... ஈ. ஆர். ஸ்கூலில்.''

'' இதைச் சொல்லுவதற்கா வந் தீர்கள்....? இது என்கொயரி கவுண் டர். தகவல்கள் கேட்டுத் தெரிந்து கொள்ளத்தான் வரணும். தகவல்கள் வாங்கிக் கொள்ள எங்களை வேலைக்கு அமர்த்தவில்லை.''

''அந்தக் காலத்தில் எஸ். எஸ்.எல். ஸி.யில் மாவட்டத்திலேயே முதன்மை யாக வந்தால் பரிசுகளோ, விழாக் களோ, புகைப்படங்களோ கொடுப் பார்களா, நடத்துவார்களா, எடுப் பார்களா....?''

''இது கல்வி இலாகாவிடம் கேட்க வேண்டிய கேள்வி!''





''என்கொயரின்னு கேட்டேன்.... கேதாரத்துக்குப் பரிசு கொடுக்கவில்லே. விழா நடத்தவில்லே.....''

''படமும் எடுத்திருக்க மாட்டார்கள்.''

''ரொம்ப சரி. அப்புறம் இண்டர் மீடியட்டை நேஷனல் காலேஜில் படிச்சான். சர்வகலாசாலேயிலே ஆறுவது ராங்க்.... அப்புறம் குடுமியும் விபூதிப் பட்டையுமாய் என்ஜினீயரிங் காலேஜில் சேர்ந்தான்.... மெட்ராஸில்தான். இந்த ஃபஸ்ட் க்ளாஸ் விடமாட்டேன்னு பிடிவாதம் பிடிச்சது அங்கேயும்.''

''பம்பாய்க்கும் பர்ஸ்ட் கிளாஸில் தான் போகிறார்.''

''இப்போது பாம்பேயில் டிவிஷனல் என்ஜினீயர்.... ஆயிரத்துக்கும் மேலே சம்பளம்.''

''சரி, ரொம்ப சரி! என்னிடம் ஏன் சொல்லுகிறீர்கள், அவருடைய சரித்திரத்தை ?''

'' இத்தனே நேரமாக ஆவலோடு கேட்டாயே....!''

''நான்சென்ஸ்....''

'' மாமா பார்த்து வைத்திருக்கிற பெண்களே ஒவ்வொருத்தியா பார்க்கத் தான் வந்திருக்கிறான். இன்னிக்கு ஒண்ணு, புதன் ஒண்ணு, வெள்ளிக் கிழமை ஒண்ணு.''

''திங்கள், செவ்வாய், வியாழன், சனி எல்லாம் இருக்கே.... பெண் பார்க்கும் வாரம் யார் கொண்டாடினுல் எனக்கு என்ன?''

''உன் அப்பாகூட இன்னிக்கு வீட்டுக்கு அழைத்திருக்கிறார் கேதாரத்தை.''

''என் அம்மாகிட்டே சொல்லி ஆறின காப்பியா கொடுக்கச் சொல்கிறேன்.''

''சாயங்காலம் நான், உன் அப்பா, கேதாரம் மூவருமா பாகவதம் கேட்கப் போகிறோம்.''

''இவ்வளவுதானு? இன்னும் ஏதாவது பாக்கி இருக்கா?''

'' உனக்கு என்ன அலுப்பா, வெறுப்பா....? என் பேச்சு பிடிக்கவில்லே என்றால் சொல்லி விடு.... போய் விடுகிறேன்.''

''போய் விடுங்கள்.... ஸார்! உங்களுக்கு என்ன வேணும்?'' மங்களா மணிக்குப் பின்னல் அப்போதுதான் வந்து நின்றவரை விசாரித்தாள். மணி ஒதுங்கி நின்றான்.

''டாடா எக்ஸ்பிரஸில் போகிறேன். பர்த் ரிஸர்வாகி யிருக்கு. பன்னிரண்டு மணிக்குப் புறப்படறது.... அதற்கு முன்னல் எனக்கும் என் மனேவிக்கும் சாப்பிடணும். 'லஞ்ச்' கிடைக்குமா?''

'' ரிஃப்ரெஷ்மெண்ட் அறையில் கேளுங்கள்.''

'' இதுவும் என்கொயரிதானே?''

''ஆமாம்.''

''உங்களுக்குத் தெரிந்திருக்க வேண்டாமா ?''

''உங்களே மாதிரி நிறையப் பேர் இதுமாதிரி கேள்விகளேக் கேட்க இந்தக் கவுண்டருக்கு வருவார்கள் என்று நாங்கள் எதிர்பார்க்கவில்லே.''

''போனில் கேட்டுச் சொல்லுங்கள். நான் முதல் வகுப்புப் பிரயாணி.''

'' அப்படியானல் கிடைக்கும்'' என்றான் மணி.

கேள்வி காதில் விழுவதற்கு முன் பேயே மங்களா போனில் பேசலானாள்.

''சரி...தாங்க்யூ... ஸார், கிடைக்குமாம்.''

''ரயிலில் வந்து சாப்பாடு கொடுப்பார்களா ?''

மங்களா விசாரித்தாள். பிறகு, ''கிடைக்குமாம்'' என்றாள்.

''தாங்க்ஸ்...'' என்றார் முதல் வகுப்புப் பிரயாணி.

அவர் திரும்பிச் சென்றதும், ''நல்ல உத்தியோகம்!'' என்றான் மணி.

''ஓ... நீங்கள் இன்னும் போகலியா? நாங்கள் இங்கே உதவி பண்ணத்தானே இருக்கிறோம்.''

''இதுவே பெரிய செய்தி! வீட்டிலேயிருந்து என்கொயரிக்கு போன் பண்ணினல், யாருமே போனே இங்கே எடுக்கிறதில்லே என்ற புகார் பேப்பரில் அடிக்கடி வருகிறதே......''

''எப்பவாவது ஒண்ணு ரெண்டு தரம் ஒரே ஆளுக்கு நேர்ந்திருக்கும். போனே வைச்ச கையோடு, ஆத்திரமா வீடு நிறைய பேப்பரும் பேனவும் இருக்கேன்னு கடிதாசு எழுதிப் போட்டிருப்பான். கடைசி நிமிஷம் வரை விளம்பரத்துக்குக் காத்திருந்து விட்டு, ஆசிரியர் அதைப் பிரசுரித்திருப்பார்.....''

''அப்போது புகார் ஆதாரமில்லாத புகார் என்று சொல்லு....''

'' பொதுஜனத் தொடர்பு அதிகாரின்னு ஒருவர் இருக்கிறார். அவரிடம் கேளுங்கள்.''

''தாங்க்ஸ் !'' என்று சிரித்த மணி ''இப்போது உன் அப்பாவைப் பார்க்கத்தான் போய்க் கொண்டிருக்கிறேன்'' என்றான்.

'' கூடவே தலேவலி மாத்திரையையும் வாங்கிக் கொண்டு போங்கள் '' என்றாள் மங்களா. மணி போன சற்றைக்கெல்லாம் மேரி மங்களாவைப் பார்க்க வந்தாள். (தொடரும்)




மேட்டூரில் தண்ணீரானது ஏராளமாய் உள்ளதாய் அறிகின்றோம்.

ஆனால் ஆற்றில் சிறிதளவு நீர்கூட இல்லை. எங்கள் ஊர் வயல்கள் எல்லாம் வெடித்து விட்டன. உழுதவர்கள் எல்லாம் தண்ணீர் இல்லாமல் நடவில்லை. அவர்களது வயல்கள் கட்டாந்தரையாகக் கிடக்கின்றன. தண்ணீர் வந்தாலும் அவர்கள் மீண்டும் உழுதால்தான் நடலாம். இரட்டிப்புச் செலவு. அப்படி செய்தாலும் நாற்றுகளின் வயது கூடிவிட்டதனால் இவ்வருடம். சரியான விளைச்சலை எதிர்பார்க்க இயலாது. அரசு அதிகாரிகள் போன வருடம் நல்ல விளைச்சல் என்றும் உணவுப் பஞ்சமே ஒழிந்தது என்றும் கூறுகின்றனர். கையிருப்பு அதிக அரிசி இருப்பதாகவும் கூறுகிறார்கள். ஆனால் தமிழ் நாட்டின் நெல் களஞ்சியமான தஞ்சையில் அரிசியின் விலை படி ரூ. 1–25. ஏழைகளின் கண்ணீருக்கு அவர்களது பதில் என்ன? நன்றாக விளைச்சல் கண்ட பொழுதே இப்படி என்றால் அடுத்த வருடத்தில் அவர்களது நிலை என்ன?

தஞ்சை
3–9–71 மு. விஜயகுமாரி

கல்கி 5–9–71 இதழில் 'இரண்டாவது இமாலய வெற்றி' என்ற தலைப்பின் கீழ் நம்முடைய இந்தியாவின் கிரிக்கெட் வீரர்களின் படங்களைப் பிரசுரித்திருக்கிறீர்கள். அதில் மூன்றாவது டெஸ்டின் போது இந்தியாவின் பெரு வெற்றிக்குக் காரணமாக இருந்த பருக் இஞ்ஜினீயரைப் படம் எடுக்க மறந்ததும் ஏனோ? அந்நிய நாட்டினர் புகழ்ந்த — இல்லிங்வொர்த் புகழ்ந்த பருக் இன்ஜினீயரை மறந்தது ஏன்?



சென்னை–33
6–9–71 எஸ். சாந்தா

இதோ உங்கள் குறையை நிவர்த்தி செய்து விட்டோம்! — ஆசிரியர்

சமீபத்தில் நானும் எனது குடும்பத்தாரும் கொடைக்கானல் ரோடு பஸ் நிலையத்திலிருந்து டி. வி. எஸ். பஸ்ஸில் சின்னாளப்பட்டிக்கு வந்து கொண்டிருந்தோம். குற்றாலம், திருச்செந்தூர், கன்னியாகுமரி ஆகிய இடங்களுக்குப் பயணம் சென்றதால் எங்களோடு பல சாமான்களையும் எடுத்துப் போயிருந்தோம். பஸ் சின்னாளப்பட்டியை அடைந்ததும் சாமான்களை இறக்கி வீட்டுக்குச் சென்றோம். வீட்டுக்குச் சென்றதும் சாமான்களைச் சரிபார்த்ததில், மூன்று சாமான்கள் மட்டும் இல்லாததைக் கண்டு மிகவும் வருத்தப்பட்டோம். அப்போது அருகிலிருந்த நண்பர் ஒருவர், ''நீங்கள் டி.வி.எஸ். அலுவலகத்துக்குச் சென்றால் உங்களுடைய சாமான்கள் திரும்பக் கிடைக்கும்'' என்று ஆறுதல் சொன்னார்.

அந்த நண்பர் சொன்னபடியே நான் மறு நாள் காலையில் திண்டுக்கல் டி. வி. எஸ். அலுவலகம் சென்று விவரம் சொன்னேன். அங்கிருந்த அதிகாரி உடனே ரிஜிஸ்தர் புத்தகத்தை எடுத்துப் பார்த்து, ''நீங்கள் குறிப்பிடும் சாமான்கள் அப்படியே பத்திரமாக இருக்கின்றன. பஸ் திண்டுக்கல் வந்தவுடன் கண்டக்டர் மேற்படி சாமான்களை எடுத்து அலுவலகத்தில் ஒப்படைத்து விட்டார். நீங்கள் ஒரு விண்ணப்பம் எழுதிக் கொடுத்தால் சாமான்களைக் கொடுத்து விடுவோம்'' என்று சொன்னார். அதைக் கேட்டவுடன் நான் மகிழ்ச்சியடைந்து விண்ணப்பம் எழுதிக் கொடுத்துச் சாமான்களைப் பெற்றுக் கொண்டேன்.




பொதுமக்களுடைய உடைமைகளைப் பாதுகாப்பதில் டி. வி. எஸ். பஸ் நிறுவனத்தார் எவ்வளவு அக்கறை கொண்டிருக்கிறார்கள் என்பதை அறிந்து, மனதாரப் பாராட்டி விட்டுத் திரும்பினேன்.

காந்திகிராமம்,
23–8–71 அ. இராமநாதன்

□ இந்திய ஆட்சியாளர்கள் பத்திரிகைத் துறையின் ஏகபோகத்தைத் தடுக்கப் போவதாய்ச் சொல்லிக் கொண்டு, மற்றொரு அடிப்படை உரிமையை அழிக்க ஆயத்தப்பட்டுள்ளனர்.

ஒரு நாட்டின் சுதந்திரத்துக்குப் பத்திரிகை சுதந்திரம் மிக மிக அவசியமானது. பத்திரிகைத் துறையில் கட்டுப்பாடு போடுவது ஜனநாயகத்தின் கழுத்தை நெரிப்பதற்கு ஒப்பாகும். சட்ட மன்ற, நாடாளு மன்ற எதிர்க்கட்சிகளின் வாத வலிமை குறையும்போது பத்திரிகையே அரசுக்கு ஒரு நல்ல எதிர்த்தரப்பாய்ப் பணியாற்றுகிறது. அதற்குக் கட்டுப்பாடு போடும் எந்த ஓர் அரசையும் ஜனநாயக அரசு என்று சொல்ல முடியாது. ஆட்சியாளர்களது இத்தகையதொரு நடவடிக்கை சர்வாதிகாரத்தின் ஒரு முன்னோடியே. மக்கள் விழிப்போடிருப்பார்களாக!

இட்டச்சேரி,
28–8–71 மு. அலிஹுஸைன்

# பொன்னியின் செல்வன்



அமரர் கல்கி

## அத்தியாயம் ஐம்பத்தொன்பது

## சகுனத் தடை

மரத்தடியில் ஒதுங்கி நின்ற படகைப் பார்த்ததும் வந்தியத்தேவன் அதிர்ஷ்ட தேவதை மறுபடியும் தன் பக்கம் வந்திருப்பதாக எண்ணி உற்சாகம் அடைந்தான். தனக்குப் படகோட்டத் தெரியா விட்டாலும், கருத்திருமன் படகோட்டுவதையே தொழிலாகக் கொண்டவன். அவனுடைய உதவியுடன் படகைத் தள்ளிக்கொண்டு வடவாற்று நீரோட்டத்தோடு சென்றால், அந்த ஆற்று வெள்ளம் கோடிக்கரைக்குப் பாதி வழி வரையில் கொண்டு சேர்த்துவிடும்.

''பார்த்தாயா, கருத்திருமா! இந்தப் படகு ஆற்றில் அமிழாமல் மிதந்து வந்து நமக்காகவே காத்திருக்கிறது. உன்னுடைய படகோட்டும் திறமையைக் கொஞ்சம் காட்டினாயானால், பொழுது விடிவதற்குள் பாதி தூரம் போய்விடலாம். அப்புறம் குதிரைமேல் வருகிறவர்கள்கூட நம்மைப் பிடிக்க முடியாது!'' என்றான் வந்தியத்தேவன்.

கருத்திருமன் சிறிது சந்தேகக் கண்ணுடன் சுற்று முற்றும் பார்த்தான். மரத்துக்குப் பக்கத்தில் ஆற்றங்கரையில் மதிள் சுவரோரமாக மண்டி வளர்ந்திருந்த புதர்களுக்கு மத்தியில் ஏதோ அசைவது போலத் தோன்றியது. கருத்திருமன் ஒரு சிறிய கல்லைத் தூக்கிப் புதர்களுக்கு மத்தியில் எறிந்தான். அங்கிருந்து ஒரு பூனை துள்ளிப் பாய்ந்து, வந்து படகில் ஏறிக் கொண்டது.

வந்தியத்தேவன் சிரித்துக் கொண்டே, ''படகோட்டி! என்னை விடப் பெரிய தைரியசாலியாயிருக்கிறாயே?'' என்று சொல்லி இன்னொரு சிறிய கல்லைத் தூக்கிப் படகுக்குள் விட்டெறிந்தான்.

பூனை மறுபடியும் படகிலிருந்து வெளியே துள்ளிப் பாய்ந்து இவர்களை நோக்கி ஓடிவந்து இரண்டு பேருக்கும் இடையில் புகுந்து ஓடியது.

இப்போது வந்தியத்தேவன் மிரண்டு இரண்டடி பின்னால் எடுத்து வைத்தான்.

''நீ ஒன்றும் என்னைவிடத் திரனாகத் தோன்றவில்லையே?'' என்று ஏளனமாகக் கூறினான் கருத்திருமன்.

''எனக்குப் பூனையென்றால் பயம். அது என் மேல் பட்டாலே உடம்பெல்லாம் மயிர்க்கூச்சு உண்டாகும். நல்ல வேளை! அதுதான் போய் விட்டதே! வா, போகலாம்!'' என்றான் வந்தியத்தேவன்.

''பூனை என் மேலே விழுந்தால்கூட எனக்குப் பயம் ஒன்றுமில்லை; ஆனால் குறுக்கே போனால்தான் பயம். சகுனத் தடை!'' என்றான் கருத்திருமன்.

''சகுனமாவது, தடையாவது?'' என்று சொல்லிக் கொண்டே வந்தியத் தேவன் கருத்திருமன் கையைப் பிடித்து இழுத்துக் கொண்டு போய்ப் படகில் ஏறினான்.

கருத்திருமனும் படகின் ஒரு மூலைக்குச் சென்று அதை மரங்களின் வேர்களிலிருந்து தள்ளிவிட முயன்றான்.

படகு சிறிது நகர்ந்ததோ இல்லையோ, சடசடவென்று நாலு பேர் துள்ளிப் பாய்ந்து ஓடி வந்து கண் மூடித் திறக்

கும் நேரத்தில் படகில் ஏறிக் கொண்டார்கள்.

அவர்களில் இரண்டு பேர் வந்தியத்தேவன் மீது பாய்ந்து அவனைப் படகுக்குள்ளே தள்ளிப் படகின் குறுக்குச் சட்டங்களோடு சேர்த்துக் கட்டினார்கள்.

மற்ற இருவரும் வேல் பிடித்த கையுடன் கருத்திருமன் அருகில் சென்று இருபுறமும் காவலாக நின்றார்கள்.

வந்த நால்வரில் தலைவனாகத் தோன்றியவன் பாதாளச் சிறைவாசலிலிருந்து தங்களைத் தொடர்ந்து வந்த பருமனான மனிதன்தான் என்பதை வந்தியத்தேவன் கண்டு கொண்டான். சுரங்க வழியின் வாசலருகில் அவன் அதற்குள்ளே படகிலே வந்து காத்திருந்ததை எண்ணி வியந்தான். அவன் சாதாரண காவலன் அல்ல, மிகக் கைதேர்ந்த ஒற்றனாயிருக்க வேண்டும் என்று தீர்மானித்தான். அவன் யாராயிருக்கும், எங்கோ பார்த்த நினைவாக இருக்கிறதே என்று எண்ணிக் கொண்டிருக்கும்போதே அவனுடைய பேச்சுக் குரல் காதில் விழுந்தது.

கருத்திருமனைப் பார்த்து அக்காவலன், ''அப்பனே! இத்தனை வருஷம் சிறையில் கழித்து விட்டு வெளி வந்திருக்கிறாய். உடனே இந்தத் துன்மதியாளன் வார்த்தையைக் கேட்டு ஏன் ஓடப் பார்த்தாய்? போனால் போகட்டும். உன்னை மறுபடியும் கட்டிப் போட மனமில்லை. நான் சொல்கிறதைக் கேட்டு அதன்படி செய்தாயானால் உனக்குத் தீங்கு ஒன்றும் நேராது!'' என்றான்.

ஓடக்காரனும், ''அப்படியே, ஐயா! முதன் மந்திரி எனக்கு விடுதலை அளிக்க ஆள் அனுப்பினார். ஆனால் இந்த மூடன் பேச்சைக் கேட்டு நான்



கெட்டுப்போனேன். இனி நீங்கள் சொல்கிறபடி செய்கிறேன். என்னைப் பாதாளச் சிறைக்கு மட்டும் மறுபடியும் அனுப்பி விடாதீர்கள்!'' என்றான்.

''ஆமாம், ஆமாம்! முதன்மந்திரி உன்னிடம் சில விவரங்கள் கேட்க விரும்புகிறார். அவற்றை நீ உண்மையாகச் சொல்லி விட்டால், உன்னைப் பாதாளச் சிறைக்கு அனுப்பமாட்டார். வேண்டிய பொன்னும் மணியும் பொருளும் பரிசு கொடுத்து அனுப்புவார். நீங்கள் எங்கே போவதென்று புறப்பட்டீர்கள்?''

''ஈழ நாட்டுக்குப் போவதென்று புறப்பட்டோம்.''

''அழகாயிருக்கிறது. முதன்மந்திரியை ஏமாற்றி விட்டு, வேளாரின் காவலை மீறிவிட்டு, அவ்வளவு தூரம் போய் விடலாம் என்று எண்ணினீர்களா? ஆனால் இந்த முரட்டு வாலிபன் அம்மாதிரி யோசனை சொல்லக் கூடியவன் தான். முன்னொரு தடவை, சின்னப் பழுவேட்டரையரின் காவலுக்குத் தப்பி ஓடியவன் அல்லவா? போகட்டும்; இப்போது படகை ஆற்று நீர் ஓட்டத்துக்கு எதிராகச் செலுத்த வேண்டும். என்னுடன் வந்தவர்களில் ஒருவனுக்குத்தான் படகு செலுத்தத் தெரியும். அவனும் கற்றுக்குட்டி. வரும்போது நாங்கள் நீரோட்டத்தோடு வந்தபடியால், தட்டுத் தடுமாறி வந்துவிட்டோம். இப்போது நீ கொஞ்சம் உன் கைவரிசையைக் காட்ட வேண்டும். அக்கரைக்குச் சமீபமாகப் போய் அங்கிருந்து வடக்குக் கோட்டை வாசலை நோக்கிப் படகைச் செலுத்து, பார்க்கலாம்!''

''அக்கரை சென்று அங்கிருந்து நடந்து போய் விடலாமே, ஐயா! நீரோட்டம் வெகு வேகமாகச் செல்கிறது. எதிர்முகமாக அதிக தூரம் படகு செலுத்துவது கஷ்டமாயிற்றே?''

''அக்கரையில் இறங்கினால் இந்த முரட்டு வாலிபன் மறுபடியும் ஏதாவது தகராறு செய்வான்! ஆகையால் ஆற்றோடுதான் மேலே போக வேண்டும்!'' என்றான் காவலர் தலைவன்.

படகைக் கருத்திருமனும் மற்றொருவனும் தள்ளத் தொடங்கினார்கள்.

காவலர் தலைவன் வந்தியத்தேவனின் அருகில் வந்து, ''அப்பனே! உன் வேலைத்தனத்தை மறுபடியும் காட்டப் பார்க்காதே!'' என்றான்.

''ஐயா! என்னைப் பற்றி உமக்கு ரொம்பத் தெரியும் போலிருக்கிறதே!'' என்றான் வந்தியத்தேவன்.

''ஏன் தெரியாது? வைத்தியர் மகனைச் சிறையிலே உனக்குப் பதிலாக அடைத்து விட்டு நீ வெளியிலே வந்ததைத்தான் பார்த்துக் கொண்டிருந்தேனே? அப்புறம் எங்களை ஏமாற்றி விட்டு ஓடிப் போகப் பார்த்தாய் நீ!''

வந்தியத்தேவன் மிக ஆச்சரியப்பட்டவனைப் போல், ''ஐயா! என்னைவிடக் கெட்டிக்காரர் தாங்கள்! பாதாளச் சிறையில் நடந்ததை ஒருவரும் கவனிக்கவில்லை என்று நினைத்தேன்!'' என்றான்.

''தம்பி! எங்கள் முதன் மந்திரியின் கண்களும் காதுகளும் எட்டாத இடம் சோழ சாம்ராஜ்யத்தில் எங்கும் இல்லை. அவை ஈழ நாட்டிலும் உண்டு; காஞ்சியிலும் உண்டு; கடம்பூர் மாளிகையிலும் உண்டு; பாதாளச் சிறையிலும் உண்டு. அந்த வைத்தியர் மகன் பினாகபாணி சுத்த மூடன் என்பது முதன் மந்திரிக்குத் தெரியும். அதனாலேதான், அவன் பின்னால் என்னையும் அனுப்பி வைத்தார்!''

''நான் இந்த வழியாக வெளியேறுவேன் என்பதும் முதன் மந்திரிக்குத் தெரிந்திருந்தது போலும். அவருடைய கண்களும் காதுகளும் அதிசயமானவைதான். அப்படியானால், நான் நிரபராதி என்பதும், என்னைப் பாதாளச் சிறையில் அடைத்தது தவறு என்பதும் அவருக்குத் தெரிந்திருக்க வேண்டுமே?''

''அது முதன் மந்திரியின் பொறுப்பு அல்ல. நீ குற்றவாளியா, இல்லையா என்பதைத் தீர்மானிப்பது சக்கரவர்த்தியின் பொறுப்பு. நீ பாதாளச் சிறையிலிருந்து தப்ப முயன்றதற்குத் தண்டனை கொடுப்பது கொடும்பாளூர் பெரிய வேளாரின் பொறுப்பு'' என்றான் காவலன்.

''ஐயா! என்னை இப்போது எங்கே கொண்டு போகிறீர்கள்?''

''முதலில் கொடும்பாளூர் வேளாரிடம் கொண்டு போகிறேன். அவர் வடக்குக் கோட்டை வாசலில் காத்திருக்கிறார்.''

''எனக்காகவா பெரிய வேளார் காத்திருக்கிறார்?''

''ஆகா! உன் கர்வத்தைப் பார்! தென்திசை மாதண்ட நாயகரும் சோழ நாட்டுக் குறுநில மன்னர்களில் முதல் மரியாதைக்குரிய மன்னரும் சோழகுலத்தின் பரம்பரைத் துணைவரும் பாண்டிய குலத்தை வேரோடு களைந்தவரும் ஈழங் கொண்ட வீராதிவீரருமான கொடும்பாளூர் வேளார் சேநாதிபதி பூதி விக்கிரமகேசரி உனக்காகக் கோட்டை வாசலில் காத்துக் கொண்டிருப்பார் என்று நினைத்தாயா?''

''பின்னே, யாருக்காகக் காத்துக் கொண்டிருக்கிறார்?''

''பழுவேட்டரையர்களையும் மற்றும் திருப்புறம்பயத்தில் கூடியிருந்த சிற்றரசர்களையும் அழைத்துக் கொண்டு பார்த்திபேந்திரன் வருகிறான்....''

''பெரிய பழுவேட்டரையர்கூடவா?''

''ஆமாம்; அவர் கூடத்தான். இளவரசர் கரிகாலரின் மரணத்தைப் பற்றி அவருக்கு உண்மை தெரியுமாம். அவர் வந்த பிறகு சக்கரவர்த்தியின் முன்னிலையில் விசாரணை நடைபெறும். நீ குற்றவாளி அல்லவென்றால், அப்போது அதை நிரூபிக்க வேண்டும்.''

**வ**ந்தியத் தேவன் இதைக் கேட்டுப் பெருங் கவலையில் ஆழ்ந்தான். பழுவேட்டரையர்களும் பார்த்திபேந்திரனும் சேர்ந்து தன் பேரிலேதான் குற்றத்தைச் சுமத்துவார்கள். கடவுளே! அந்தக் குற்றச் சாட்டுடனே சக்கரவர்த்தியையும் இளவரசர் அருள்மொழிவர்மரையும் எப்படி நிமிர்ந்து பார்ப்பது? என்ன சாட்சியத்தைக் காட்டி நான் குற்றவாளி அல்லவென்று நிரூபிக்க முடியும்?

''ஐயா! நான் தங்களுக்கு ஒரு தீங்கும் செய்ய வில்லையே? என்னைத் தப்பிப் போகும்படி விட்டு விடுங்கள்! உண்மையில் நான் குற்றவாளி அல்ல. காலமான இளவரசருக்கு அத்தியந்த நண்பனாயிருந்தவன். சந்தர்ப்ப வசத்தினால் இத்தகைய பயங்கரக் குற்றம் சாட்டப்பட்டேன். தாங்கள் முதன் மந்திரியின் சேவகர். சிறையிலிருந்த பைத்தியக்காரனைக் கொண்டு வரும்படிதானே தங்களுக்கு முதன் மந்திரி கட்டளையிட்டார்? இவனை அழைத்துப் போங்கள். என்னை விட்டு விடுங்கள்! உங்களுக்குப் புண்ணியம் உண்டு!'' என்று வந்தியத் தேவன் இரக்கமாகக் கேட்டான்.



''உன்னை விட்டு விட்டால் எனக்கு என்ன தருவாய்?'' என்றான் காவலன்.

''பின்னால் சமயம் வரும்போது பதிலுக்குப் பதில் செய்வேன்.''

''அப்படிச் சமயம் வரப்போவது மில்லை; வந்தாலும் உன் உதவி எனக்குத் தேவையும் இல்லை. இப்போது உடனே என்ன தருவாய் என்று சொல்லு!''

வந்தியத் தேவனுக்கு அவனுடைய அரைக் கச்சில் கட்டிக் கொண்டிருந்த பொற்காசுகளின் நினைவு வந்தது.

''உம்முடைய இரண்டு கைகளும் நிறையும்படி பொற்காசுகள் தருவேன்.''

''ஆகா! அப்படியா? பொற்காசுகளா? எங்கே காண்பி!'' என்றான் காவலன்.

''கொஞ்சம் என் கட்டுக்களைத் தளர்த்தி விடு! அரைக்கச்சிலிருக்கிறது; எடுத்துக் காட்டுகிறேன்!'' என்றான் வந்தியத்தேவன்.

''மறுபடியும் உன் வேலைத்தனத்தை மட்டும் காட்டி விடாதே!'' என்று சொல்லிக் கொண்டே காவலன் குனிந்து வந்தியத்தேவனுடைய கட்டுக்களைச் சிறிது தளர்த்தி விட்டான்.

வந்தியத் தேவன் அந்தக் காவலனின் முகத்தை உற்றுப் பார்த்துக் கொண்டே அரைக் கச்சை அவிழ்த்துப் பொற்காசுகளை எடுத்துக் கொடுத்தான்.

அக்காசுகளைக் காவலன் கை நிறைய வைத்துக் கொண்டு, ''தம்பி! இக்காசுகளைப் பழுவேட்டரையரின் பொக்கிஷத்திலிருந்து எடுத்து வந்தாயா? அல்லது வார்ப்படச் சாலையிலிருந்தே அடித்துக் கொண்டு வந்தாயா? உன் பேரில் இப்போது மூன்று குற்றங்கள் ஆயின. கொலைக் குற்றம் ஒன்று. சிறையிலிருந்து தப்பிய குற்றம் ஒன்று. இராஜ்ய பொக்கிஷத்திலிருந்து திருடிய குற்றம் ஒன்று. ஆக மூன்று குற்றங்கள். ஒவ்வொரு குற்றத்துக்காகவும் உன்னைத் தனித் தனியே கழுவில் ஏற்றலாம்'' என்றான்.

''ஐயா! சோழ ராஜ்யத்துக்கு நான் எத்தனையோ சேவைகள் செய்திருக்கிறேன். பல முறை தூது சென்றேன். என் உயிரைக் கொடுத்துக் கரிகாலரின் உயிரைக் காப்பாற்ற முயன்றேன். இந்தச் சில பொற்காசுகளை என் சேவைக்குக் கூலியாகப் பெற எனக்கு உரிமை உண்டு. அதுவும் பிரயாண வசதிக்காகவே எடுத்துக் கொண்டேன்'' என்றான் வந்தியத்தேவன்.

''இதை யெல்லாம் நீ உன்னை விசாரணை செய்யும்போது சொல்லிக் கொள்!'' என்றான் காவலன்.

''அப்படியானால், நீர் என்னைக் கட்டவிழ்த்துவிடப் போவதில்லையா?'' என்று கேட்டான் வந்தியத்தேவன்.

''கிழக்கில் உதிக்கும் சூரியன் மேற்கே உதித்தாலும் திருமாலைக் காட்டிலும் பரமசிவன் பெரிய தெய்வம் என்று ஏற்பட்டாலும், நான் சில பொற்காசுகளுக்காக இராஜ்யத் துரோகம் செய்யமாட்டேன்'' என்றான் காவலன்.

கருத்திருமன் என்ன செய்கிறான் என்று வந்தியத்தேவன் கடைக்கண்ணால் பார்த்துக் கொண்டான். அவன் தன்னை ஆர்வத்துடன் நோக்கிக் கொண்டு சமிக்ஞையை எதிர்

பார்த்திருந்தவனுகத் தோன்றியதைக் கவனித்தான்.

உடனே அவ்வீர வாலிபன் ஏற்கனவே தளர்த்தி விட்டிருந்த கட்டுக்களை இன்னும் சிறிது தளர்த்திக் கொண்டு சட்டென்று அந்தக் காவலனுடைய முகத்திலிருந்த மீசையையும் தலைக் கட்டையும் பிடித்து இழுத்தான்.

அவை அவன் கையோடு வந்து விட்டன. சாக்ஷாத் ஆழ்வார்க்கடியான் காட்சி அளித்தான்.

''வேஷதாரி வைஷ்ணவனே! நீதானு?'' என்ருன் வந்தியத்தேவன்.

ஆழ்வார்க்கடியான் தனது மீசையை யும் தலைப்பாகையையும் காப்பாற்றிக் கொள்ள முயன்றபோது அவன் கையி லிருந்த பொற்காசுகள் சிதறி விழுந்தன.

வந்தியத்தேவன் ஒரு நொடியில் தன் கட்டுக்களிலிருந்து விடுபட்டு ஆழ்வார்க் கடியானைக் கீழே தள்ளினுன்.

சற்று முன் தன்னைக் கட்டியிருந்த கயிற்றைப் போட்டு ஆழ்வார்க்கடி யானைப் படகின் குறுக்குச் சட்டங்க ளோடு சேர்த்துக் கட்டினுன்.

அவன் அரையில் தரித்திருந்த வாளை அதன் உறையிலிருந்து இழுத்து எடுத் துக் கையில் ஏந்திக் கொண்டான்.

வந்தியத்தேவன் இச்செயல்களில் ஈடு பட்டிருக்கையில் கருத்திருமன் சும்மா இருக்கவில்லை. அவன் அருகில் நின்ற காவலனைத் திடீரென்று தாக்கி ஆற்று வெள்ளத்தில் வீழ்த்தினுன். அவன் நதி வெள்ளத்தில் போராடலானுன்.

மற்ற இருவரில் ஒருவன் படகோட் டியை நோக்கியும் இன்னெருவன் வந்தி யத்தேவனிடத்திலும் நெருங்கினுர்கள். இருவரும் பயத்துடன் தயங்கித் தயங் கியே வந்தார்கள். வந்தியத்தேவன் அவனை நோக்கி வாளை வீசிக் கொண்டு முன்னுல் சென்றதும் அவ்வீரன் தாஞ கவே வெள்ளத்தில் குதித்து விட்டான்.

இன்னெருவனை இதற்குள் கருத்திரு மன் தன் கையிலிருந்த துடுப்பினுல் ஓங்கி அடித்துப் படகில் வீழ்த்தினுன்.

இருவரும் சேர்ந்து அவனையும் குறுக் குச் சட்டத்தில் கட்டிப் போட்டார்கள்.

படகு நதி வெள்ளத்தோடு போய்க் கொண்டிருந்தது. வெள்ளத்தில் விழுந்த இருவரும் அக்கரையை நோக்கி நீந்திச் செல்ல முயன்று கொண்டிருந்தார்கள்.

வந்தியத் தேவன் ஆழ்வார்க்கடியான் அருகில் சென்று, ''வீர வைஷ்ணவ சிகாமணியே! இப்போது என்ன சொல்லுகிருய்?'' என்று கேட்டான்.

''என்னத்தைச் சொல்வது? எல்லாம் நாராயண மூர்த்தியின் செயல். கட்டு கிறவனும் அவன்; கட்டப்படுகிறவனும் அவன். தள்ளுகிறவனும் அவன்; தள் ளப்படுகிறவனும் அவன்! தூணிலும் உள்ளான்; துரும்பிலும் உள்ளான்; உன் கை வாளிலும் உள்ளான்; என் தோளி லும் உள்ளான்!''

''அப்படியானுல் இந்த ஆற்று வெள் ளத்திலும் உள்ளான்! உன்னைக் கட்டித் தூக்கி இந்த வெள்ளத்தில் போட்டு விடலாம் அல்லவா?''

''பிரஹலாதனைக் கல்லுடன் சேர்த் துக் கட்டிக் கடலில் போட்டார்கள். அவனை நாராயணமூர்த்தி காப்பாற் றிக் கரை சேர்க்கவில்லையா? அப்படிப் பகவான் வந்து என்னைக் கரை சேர்க்க முடியாவிட்டால், சாக்ஷாத் வைகுண் டத்துக்கு நேரே அழைத்துக் கொள் கிருர்!'' என்ருன் ஆழ்வார்க்கடியான்.

இதைக் கேட்ட வந்தியத்தேவன் சிறிது யோசித்துவிட்டு, ''இதோ பார்! நீ சில சமயம் என் உயிரைக் காப்பாற்றி யிருக்கிருய். என்ன எண்ணத்துடன் காப்பாற்றினுயோ, தெரியாது! எப்படி யிருந்தாலும், உன்னை நான் கொல்ல விரும்பவில்லை. ஆயினும், உன் உயிரைக் காப்பாற்றுவதாயிருந்தால், எனக்கு ஓர் உதவி நீ செய்ய வேண்டும்!'' என்ருன்.

''அப்பனே! பரோபகாரம் இதம் சரீரம் என்ற கொள்கை உடையவன். என்ன உதவி உனக்குத் தேவையோ, கேள்! கட்டை அவிழ்த்து விட்டால் செய்கிறேன்'' என்ருன் திருமலை.

''உன் சரீரத்தினுல் உதவி எனக்கு இப்போது தேவையில்லை. எனக்கும் இவனுக்கும் இரண்டு குதிரைகள் வேண் டும். எதற்காக என்று கேட்கிருயா? தப்பிச் செல்வதற்காகத்தான்! அதற்கு ஏதேனும் வழி சொன்னுல், உன்னை இப் படியே படகில் மிதக்க விட்டு விட்டு நாங்கள் கரையில் இறங்கி விடுகிறோம். படகு கரையில் ஒதுங்குமிடத்தில் நீ உன் சாமர்த்தியத்தை உபயோகித்துக் கொண்டு பிழைத்துக் கொள்!''

''என்னுல் முடிந்த உதவியைக் கேட் கிருயே, அதைப் பற்றி நான் மகிழ்ச்சி அடைகிறேன்.''

''குதிரைகள் கிடைக்க எனக்கு வழி சொல்ல முடியுமா?''

''முடியும்! உங்கள் இரண்டு பேருக் கும் இரண்டு குதிரைகள் இருக்குமிடம் எனக்குத் தெரியும்... வாணி அம்மை வீடு உனக்குத் தெரியும் அல்லவா?''

''எந்த வாணி அம்மை?''

''தஞ்சைத் தளிக் குளத்தார் ஆலயத் துக்குப் புஷ்பக் கைங்கரியம் செய்யும் வாணி அம்மை. பிறவி ஊமை. சேந் தன் அமுதனின் தாயார்.''

இவ்வாறு ஆழ்வார்க்கடியான் சொல்லிக் கொண்டிருந்தபோது கருத்திருமன் அருகில் நெருங்கி ஆவலாகக்கேட்டான்.

''தெரியும்; அந்த வீடு எனக்குத் தெரியும். நந்தவனத்தில் இருக்கிறது.''

''அங்கே இரண்டு குதிரைகள் இந்தக் கணத்தில் இருக்கின்றன.''

''எப்படி?''

''ஒன்று, என் குதிரை. வாணி அம்மையின் குடிசைக்கருகில் அதைக் கட்டிப் போட்டு விட்டு இந்தப் படகில் ஏறி வந்தேன். இன்னொன்று, சேந்தன் அமுதன் ஏறி வந்த குதிரை. பாவம்! அமுதன் குதிரை ஏறி வழக்கமில்லாதவன். வழியில் அந்த முரட்டுக் குதிரை அவனைக் கீழே தள்ளி விட்டது. முன்னமே சுரத்தினால் பலவீனம் அடைந்திருந்தான். கீழே விழுந்த அதிர்ச்சியால் மறுபடியும் படுத்துவிட்டான். பிழைத்தால் புனர்ஜன்மம் என்று சொல்கிறார்கள். ஆகையால் குதிரை இனி அவனுக்குத் தேவை இராது.''

வந்தியத்தேவன் மிக்க கவலையுடன், ''அவனைக் கவனிக்க அங்கே யார் இருக்கிறார்கள்?'' என்றான்.

''அவனுடைய தாயாரும் பூங்குழலியும் இருக்கிறார்கள்!'' என்றான் திருமலை.

கருத்திருமன் திடீர் என்று அச்சம்பாஷணையில் பிரவேசித்து, ''எந்தத் தாயார்?'' என்று கேட்டான்.

இருவரும் ஒரு கணம் அவனை ஏறிட்டுப் பார்த்தார்கள்.

''என்ன கேட்டாய்?'' என்றான் ஆழ்வார்க்கடியான்.

''சேந்தன் அமுதன் உயிருக்கு அபாயம் என்னும் செய்தி பெரிய பிராட்டி செம்பியன்மா தேவிக்குத் தெரியுமா என்று கேட்டேன்.''

''ஆமாம்; செம்பியன்மாதேவிதான் அவர்களுக்குப் புஷ்ப கைங்கரியத்துக்கு மானியம் கொடுத்து ஆதரித்து வருகிறார். ஆனால் அரண்மனையைச் சேர்ந்தவர்கள் எல்லாரும் இப்போது கரிகாலர் மரணத்தினால் ஏற்பட்ட துயரத்தில் மூழ்கிக் கிடக்கிறார்களே? அமுதனை எங்கே கவனிக்கப் போகிறார்கள்?''

வந்தியத் தேவன் கருத்திருமனைப் பார்த்து, ''நீ என்ன சொல்கிறாய்? சேந்தன் அமுதனையும் அவன் அன்னையையும் போய்ப் பார்த்து விட்டுப் போவோமா?'' என்றான்.

கருத்திருமன் தலையை அசைத்துத் தன் சம்மதத்தைத் தெரிவித்தான்.

''அப்படியானால், படகைக் கரையை நோக்கிச் செலுத்து!'' என்று வந்தியத்தேவன் கூறிவிட்டு, ஆழ்வார்க்கடியானைப் பார்த்து, ''வைஷ்ணவனே! இதில் ஏதாவது உன் சூழ்ச்சி தந்திரத்தைக் காண்பித்திருந்தாயோ, பார்த்துக் கொள்! என்னுடைய கதி எப்படியானாலும் உன்னைக் கைலாஸத்துக்கு அனுப்பி விட்டுத்தான் மறு காரியம் பார்ப்பேன்!'' என்றான்.

''வேண்டாம், தம்பி! வேண்டாம்! உனக்குப் புண்ணியமாய்ப் போகட்டும். நித்திய சூரிகள் புடைசூழ ஸ்ரீமந் நாராயணமூர்த்தி மகாலக்ஷ்மி சகிதமாக வீற்றிருக்கும் வைகுண்டத்துக்கு என்னை அனுப்பி வை!'' என்றான் வைஷ்ணவன்.

## அத்தியாயம் அறுபது

# அமுதனின் கவலை

நந்தவனத்து நடுவில் இருந்த குடிலில் சேந்தன் அமுதன் நோய்ப்பட்டுப் படுத்திருந்தான். பூங்குழலி அவனுக்கு அன்புடன் பணிவிடை செய்து கொண்டிருந்தாள். வாணி அம்மை பாகம் செய்து கொடுத்த கஞ்சியைக் கொண்டு வந்து அவனை அருந்தும்படி செய்தாள்.

சற்று முன்னாலேதான் சுந்தர சோழ ஆதுரசாலையிலிருந்து வைத்தியர் வந்து சேந்தன் அமுதனைப் பார்த்து விட்டுப் போயிருந்தார். போகும்போது அவரிடம் பூங்குழலி தனியாக விசாரித்தாள். ''அமுதனுக்கு எப்படியிருக்கிறது,—பிழைத்து எழுந்து விடுவானா?'' என்று கேட்டாள்.

''முன்னமே ஒரு தடவை காய்ச்சல் வந்து பலவீனமாயிருந்தான். அத்துடன் நீண்ட பிரயாணம் போய்த் திரும்பிக் குதிரை மேலிருந்தும் கீழே விழுந்திருக்கிறான். அதனாலெல்லாம் பாதகமில்லை. ஆனால் அவன் மனத்தில் ஏதோ கவலை வைத்துக் கொண்டிருக்கிறான். அதனாலே தான் உடம்பு குணமடைவது தடைப்படுகிறது!'' என்றார் வைத்தியர்.

இதை உள்ளத்தில் வைத்துக்கொண்டு பூங்குழலி, ''அமுதா! உன் மனத்தில் என்ன கவலை? ஏன் உற்சாகமே இல்லாமலிருக்கிறாய்? உன் மனக் கவலையினால்தான் உன் உடம்பு குணப்படுவது தாமதமாகிறது என்று வைத்தியர் சொல்கிறாரே?'' என்றாள்.

அமுதன், ''பூங்குழலி! உண்மையைச் சொல்லட்டுமா? அல்லது மனத்தில்

ஒன்று வைத்துக் கொண்டு வெளியில் ஒன்று பேசட்டுமா?'' என்றான்.

பூங்குழலி, ''நான் அப்படி உள்ளொன்றும் புறமொன்றுமாகப் பேசுகிறவள் என்று சுட்டிக் காட்டுகிறாயா?'' என்று கேட்டாள்.

''பூங்குழலி! உன்னுடன் பேசுவதே அபாயகரமா யிருக்கிறது. நீ பேசாமலிருந்தால் உன் முகத்தைப் பார்த்துச் சந்தோஷப்பட்டுக் கொண்டிருப்பேன்.''

''என் அத்தைமார்களைப் போல் நானும் ஊமையாய்ப் பிறந்திருந்தால் உனக்குச் சந்தோஷமா யிருக்கும் அல்லவா?''

''ஒருநாளும் இல்லை. நீ பாடும்போது நான் அடையும் ஆனந்தத்துக்கு அளவே இல்லை. வெறும் பேச்சிலே என்ன இருக்கிறது? ஒரு தேவாரப் பண் பாடு!''

''அதெல்லாம் முடியாது. உன் மனத்தில் என்ன கவலை என்பதைச் சொன்னால்தான் பாடுவேன்.''

''அப்படியானால் சொல்கிறேன், கேள்! என்னுடைய கவலையெல்லாம் என் உடம்பு சீக்கிரமாகக் குணமாகி விடப் போகிறதே என்றுதான்.''

''இது என்ன இப்படிச் சொல்லுகிறாய்? உனக்கு உடம்பு குணமாக வேண்டும் என்று நான் எல்லாத் தெய்வங்களையும் வேண்டிக் கொண்டிருக்கிறேனே? நீ குணமாகி விடுமே என்று கவலைப்படுவது ஏன்?''

''என் உடம்பு குணமாகிவிட்டால் நீ என்னை விட்டு விட்டுப் போய்விடுவாய் அல்லவா? அதை எண்ணித்தான் கவலைப்படுகிறேன், பூங்குழலி!''

**பூ**ங்குழலியின் முகம் காலைப் பனித் துளிகளுடன் ஒளிர்ந்த மலர்ந்த செந்தாமரை போல் விளங்கியது. அவள் இதழ்களில் புன்னகை விரிந்தது; கண்களில் கண்ணீர் துளித்தது.

''அமுதா! உன் அன்பை எண்ணி என் நெஞ்சு உருகுகிறது. உன்னைவிட்டு விட்டுப் போகவும் மனம் வரவில்லை; போகாதிருக்கவும் முடியவில்லை.''

''ஆமாம்; அலைகடல் உன்னை அழைத்துக் கொண்டிருக்கிறது. அதனால் என்ன? நானும் உன் கூட வருகிறேன். அதற்கு உன் சம்மதத்தைத் தெரியப்படுத்து. என் உடம்பும் குணமாகி விடும்.''

''அமுதா! நான் என் மனத்துக்குள் செய்து கொண்டிருக்கும் சபதம் அதற்குத் தடையா யிருக்கிறது.''

''அது என்ன சபதம்?''

''புவி ஆளும் மன்னனை மணந்து அவனுடன் சிங்காதனத்தில் அமர வேண்டும் என்பது என் மனோரதம். இது முடியா விட்டால் கன்னிப் பெண்ணாகவே காலங் கழிக்கச் சபதம் செய்திருக்கிறேன்.''

''ஆமாம்; பொன்னியின் செல்வர் உன் மனத்தில் இடம் பெற்றிருக்கிறார். ஆனால், பூங்குழலி! அது நடக்கிற காரியமா?''

''நீ தவறாக எண்ணிக் கொண்டிருக்கிறாய். பொன்னியின் செல்வரிடம் இச் சோழ நாட்டில் பிறந்தவர்கள் அனைவரும் அன்பு கொண்டிருக்கிறார்கள். ஆடவர்கள், மங்கையர்கள், வயோதிகர்கள், சின்னஞ் சிறு குழந்தைகள் எல்லோரும் அருள்மொழி வர்மரிடம் நேயம் கொண்டிருக்கிறார்கள். அது போலவே நானும் அவரிடம் அபிமானம் வைத்தேன். அவர் காய்ச்சலுடன் படகில் கிடந்த போது நீயும் நானும் சேர்ந்துதான் அவருக்குப் பணிவிடை செய்து காப்பாற்றினோம்.....''

''அப்படியானால், அவரிடம்....அவரிடம்... வேறுவித எண்ணம் உனக்கு நிச்சயமாக இல்லையா?''

''அமுதா! பொன்னியின் செல்வரை மணக்கப் பிறந்தவள் வேறொருத்தி இருக்கிறாள். அவள் கொடும்பாளூர் இளவரசி வானதி. நான் அவளிடம் ஏதோ விளையாட்டாகப் பேசப் போக அந்தப் பெண் 'நான் சிங்காதனம் ஏறுவதில்லை' என்று சபதம் செய்தாள்....''

''மன்னர் குலத்தில் பிறந்தவள் அவ்வாறு சொல்லிச் சபதம் செய்திருக்கிறாள். நீயோ 'சிங்காதனம் ஏறித்தான் தீருவேன்' என்கிறாய். இல்லாவிட்டால் கன்னிப் பெண்ணாகவே காலங் கழிப்பேன் என்று சொல்லுகிறாய்.''

''அமுதா! என் அத்தை, அரசர் குலத்தில் பிறந்தவரை நேசித்தாள். அதனால் அவளுடைய வாழ்க்கை துன்பமயமாயிற்று. என் அத்தை அடையத் தவறிய பாக்கியத்தை நான் என் வாழ்நாளில் அடைவேன். ஏன் கூடாது?''

''உனக்கு அந்த ஆசை ஏற்பட்டது என்னுடைய பாக்கியக் குறைவினால் தான்!'' என்றான் அமுதன்.

''அப்படி ஏன் நீ நிராசையடைய வேண்டும்? அரச குலத்தில் பிறந்தவர்கள்தான் அரசர்களா யிருக்கலாம் என்று விதி ஒன்றும் இல்லை. உன்னைப் போல் சாதாரண குடும்பத்தில் பிறந்தவர்கள் தங்கள் வீர பராக்கிரமச் செயல்களினால் இராஜ்யங்களை ஸ்தாபித்துச் சிங்காதனம் ஏறியிருக்கிறார்கள். நீயும் இன்றைக்கு அத்தகைய சபதம் எடுத்துக் கொள். இந்தப் பெரிய பாரத நாட்டிலோ, கடல் கடந்த அயல்நாடுகளிலோ உன் புஜ பல பராக்கிரமத்தி

னல் ஒரு இராஜ்யத்தை ஸ்தாபிக்கத் தீர்மானம் செய்து கொள். நான் உன்னை விட்டுப் பிரியாமல் உனக்குத் துணையா யிருக்கிறேன்'' என்றாள் பூங்குழலி.

''பூங்குழலி! அத்தகைய காரியங்களுக்கு நான் பிறக்கவில்லை. என் மனம் கத்தி எடுத்துப் போர் செய்வதில் ஈடுபடவில்லை. ஒரு சிறிய பிராணியை இம்சிக்கவும் நான் விரும்பவில்லை. மணி மகுடமும் சிங்காதனமும் என் உள்ளத்தைக் கவரவில்லை. சிவபெருமானையும் சிவனடியார்களையும் ஏத்திப் பரவிப் பாடிக் கொண்டு காலங் கழிக்க விரும்புகிறேன். ஆகையால் உனக்கும் எனக்கும் பொருத்தமில்லைதான்! உன்னை நான் மணக்க விரும்புவது முடவன் கொம்புத் தேனுக்கு ஆசைப்படுவது போலத்தான். பூங்குழலி! உன்னை இங்கே தாமதிக்கச் சொல்வதில் பயனில்லை. நீ போய் விடு! என் உடம்பு குணமாவதற்காகக் காத்திராதே!'' என்றான் சேந்தன் அமுதன்.

அச்சமயம் அக்குடிலின் வாசலில் காலடிச் சத்தம் கேட்கவே, இருவரும் பேச்சை நிறுத்தினார்கள். (தொடரும்)

# படித்துப்பாருங்கள்

## பாரத ஸ்தல யாத்ரா

காசி யாத்திரை செய்வது, கங்கையில் சிராத்தம் செய்வது, திரிவேணி சங்கம ஸ்நானம் — இவை ஆயிரம் பல்லாயிரம் ஆண்டுகளாக, ரயிலும் விமானமும் இல்லாத காலத்திலிருந்து நம் மக்கள் பின்பற்றி வரும் ஓர் உயர்ந்த ஆசாரமே. கயை, பிரயாகை, காசி க்ஷேத்ராடனம் 'த்ரிஸ்தல யாத்திரை' என்றே புகழ் பெற்றது. இதன் அங்கமே ராமேசுவரம் செல்கிற 'சேது யாத்ரா'. வைதிக சம்பிரதாயம் வழுவாமல் இந்த க்ஷேத்திரங்களை எப்படித் தரிசிப்பது, என்னென்ன கட்டங்களில் என்னென்ன வழிபாடு அல்லது பிதிர்க் கடன் செய்வது என்பதை யெல்லாம் சாங்கோபாங்கமாக இந்த நூலில் விளக்கி அந்தந்த ஸ்தல மகிமைக் கதைகளையும் கூறியுள்ளார் பண்டிதோத்தமரான தர்மக்ஞ வித்யாவாசஸ்பதி மாயூரம் ஸ்ரீ ராமநாத தீக்ஷிதரவர்கள். அதோடு கூட பாரதத்திலுள்ள மற்ற பிரசித்தி பெற்ற க்ஷேத்திரங்களைப் பற்றிய அரிய குறிப்புகளும் தரப்பட்டுள்ளன.

நூலின் வடமொழிப் பகுதி விரிவானது. தமிழ், ஆங்கிலம், ஹிந்தி இவற்றிலும் சுருக்கம் தரப்பட்டிருக்கிறது. ஸ்ரீ காமகோடி பெரியவாளின் ஆக்ஞையின் மீது எழுதப் பெற்ற நூல்; எழுதி முடித்த பின் ஸ்ரீ பெரியவாளின் அமோதனத்தைப் பெற்ற நூல் என்றாலே போதும் — ஆஸ்திக உலகுக்கு எவ்வளவு பயனுள்ள நூல் என்று அறிவதற்கு.

கிடைக்குமிடம்: ஸ்ரீ ஆர். பட்டாபிராம சர்மா, 21-பி, பீமண்ண முதலித் தெரு, ஆழ்வார்ப்பேட்டை, சென்னை—18. விலை: ரூ. 10.00.

## திருமலைப் பாடல்கள்

ஸ்ரீமதி ஹா. கி. வாலம் அம்மையார் சில ஆண்டுகளுக்கு முன்பு நோய்வாய்ப்பட்டிருந்து எவ்விதச் சிகிச்சைக்கும் வசப்படாமல் அவதியுற்றிருக்கிறார்; அப்பொழுது திருவேங்கடமுடையான் அவரது மனக்கண்முன் தோன்றி அருள்பாலிக்கவே, பாடல்கள் பொங்கிப் பொங்கி எழுந்தன. அவை யாவும் இந்நூலில் இடம்பெற்றுள்ளன. கலியுகத்தில் கண்கண்ட தெய்வமாக விளங்கும் ஏழுமலையான் திருவருள் பிரபாவத்தை நன்கு உணர்ந்து கொள்ள மேற்படி பாடல்கள் பெரிதும் உதவியாக உள்ளன. ஆழ்வார்களால் மங்களாசாஸனம் செய்யப்பட்ட திவ்ய தேசமான திருவேங்கடத்தின் பெருமை அளவு கடந்தது. அதை எடுத்துக் கூறும் இந்நூலுக்கு உயர்திரு பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராச்சார்ய சுவாமிகளும் மகா வித்வான் மே. வீ. வேணு கோபாலப் பிள்ளையவர்களும் மதிப்புரையும் அணிந்துரையும் அளித்திருப்பது 'பொன்மலர் நாற்றமுடைத்து' என்பது போல் சிறப்புக்குச் சிறப்பு செய்ததாயிற்று.

பிரசுரம்: தெய்விக வாழ்க்கைச் சங்கம், காஞ்சிபுரம் - 2. விலை: (தபால் கட்டணத்துடன் ரூ. 1.00 அனுப்ப வேண்டும்.)

## மோகன அலை என்னும் சிவானந்த லஹரி

இறையருளைப் பாடும் பணியே பணியெனக் கொண்டு சுமார் இருபத்திரண்டு ஆண்டுகளாக ஆயிரக் கணக்கான பக்தி ரஸப் பாடல்களைப் பொழிந்து, பக்தி உள்ளங்களையெல்லாம் நெகிழ வைக்கும் அரிய பணியைச் செய்து வருபவர் கவிதா ரத்தினம் ஸ்ரீமதி ஹா. கி. வாலம் அவர்கள்.

அவர்கள் ஆதிசங்கரர் இயற்றிய சிவானந்த லஹரி என்னும் தெய்விக நூலைத் தமிழ்ப் பாடல்களாக்கித் தந்திருக்கிறார். சிவானந்த லஹரி சிவபெருமானுக்கு உகந்த நூல்; சிவானந்த லஹரியில் திளைத்து மெய்ம் மறக்கச் செய்யும் அரிய நூல். அதைத் தமிழாக்குவதென்றால் பூர்வ ஜன்ம சுகிர்தமும், அளவு கடந்த பக்தி உணர்வும் பெற்றிருத்தல் வேண்டும். பாடல்களைப் படித்தால், ஆசிரியையின் தகுதியுடைமை நன்கு புலனாகும். இந்நூலின் பிற்பகுதியில் ஆசிரியையின் சொந்தப் பாடல்கள் சில காணப்படுகின்றன. அவையும் பக்திச் சுவை மிக்கவை.

கிடைக்குமிடம்: மோகனப் பதிப்பகம், 9-ஏ, எட்வர்ட் எலியட்ஸ் ரோடு, மயிலாப்பூர், சென்னை—4; விலை: ரூ. 2.50.

அலகாபாத் புருஷோத்தமதாஸ் பூங்காவில் மகாத்மா காந்தி சொற்பொழிவாற்ற இருப்பதாகக் கேள்விப்பட்டார் ஜெனரல் திம்மையா. (ஆனால் அப்போது அவர் ஜெனரல் அல்ல.) மாலையில் காந்திஜி பேச்சைக் கேட்கத் திட்டமிட்டார். இதை அறிந்த ஆங்கிலேய போலீஸ் அதிகாரி ஒருவர், ''உங்களுக்கு அந்தச் சிரமம் இருக்காது. இன்றைய கூட்டத்துக்கு மின்சார வசதி கிடைக்காமல் துண்டித்துவிட ஏற்பாடாகியிருக்கிறது. இது ரகசியம். கூட்டம் நடக்காது'' என்று சொல்லி விட்டுப் போனார்.

திம்மையா கூட்டத்தை ஏற்பாடு செய்தவர்களுக்கு இந்தச் செய்தியை எட்டச் செய்து



பைரன்

# சில மனிதர்கள் சில நினைவுகள்

விட்டார். நிர்வாகிகளும் மனம் தளரவில்லை. திம்மையா கூட்டம் நடந்த இடத்துக்கு மாலையில் வந்த போது அங்கே மண்ணெண்ணெய் விளக்குகளின் உதவிகொண்டு காந்திஜி சொற்பொழிவாற்றிக் கொண்டிருந்தார். சில கிராமப்புற மக்களை மேடைக்கு அருகே அமர்த்தியிருந்தார். அவர்கள் தங்கள் காதில் விழுந்த காந்திஜியின் வார்த்தைகளைப் பின்பக்கம் பார்த்துத் திருப்பிச் சொன்னார்கள். இப்படியே அலை அலையாகச் சொற்பொழிவு கடைசி வரிசையை எட்டியது. ஒலிபெருக்கி இல்லாததை யாரும் உணரவில்லை.

திம்மையாவினால் அந்த மங்கிய மண்ணெண்ணெய் விளக்கு ஒளியில் காந்திஜியின் முகத்தைத் தெளிவாகக் காண முடியவில்லை. ஆனால் காந்திஜியின் ஆன்மீக சக்தியை அன்று தெளிவாக உணர்ந்தார்.

★

உயர்நீதி மன்ற நீதிபதி சர் டி. முத்துசாமி அய்யர் கோடை விடுமுறைக்காகச் சென்னையிலிருந்து உதகமண்டலத்துக்கு ஒரு சமயம் முதல் வகுப்பு ரயில் பெட்டியில் பிரயாணம் செய்து கொண்டிருந்தார். சில ஐரோப்பிய சக நீதிபதிகளும் அதே ரயிலில் வெவ்வேறு பெட்டிகளில் பிரயாணம் செய்து கொண்டிருந்தார்கள்.

நடு இரவில் இடைவழி ஸ்டேஷன் ஒன்றில் ரயில் நின்ற போது அந்த ஸ்டேஷனைச் சேர்ந்த ஓர் ஆங்கிலோ இந்திய ஸ்டேஷன் மாஸ்டர், முத்துசாமி அய்யரின் பெட்டிக்குள் ஏறி அவரை எழுப்பி, அந்தப் பெட்டியில் ஓர் ஐரோப்பியரும் அவருடைய மனைவியும் பிரயாணம் செய்ய வேண்டியிருப்பதாகவும், முத்துசாமி அய்யர் வேறு இடம் பார்த்துக் கொள்ள வேண்டும் என்றும் அதிகாரம் செய்தார். வெளியே வந்த முத்துசாமி அய்யர் ஸ்டேஷன் மாஸ்டரைப் பார்த்து, ''முதல் வகுப்புப் பிரயாணிகளை நடுத் தூக்கத்தில் தொந்தரவு செய்யக் கூடாது என்று ஒரு ரயில்வே விதி இருப்பது உங்களுக்குத் தெரியுமா?'' என்று கேட்டார். ஸ்டேஷன்மாஸ்டர் பதில் அளிக்குமுன் அந்த ஐரோப்பியப் பிரயாணி குறுக்கிட்டு, ''அந்த விதியெல்லாம் ஐரோப்பியருக்கே அன்றி இந்தியருக்கு அல்ல'' என்று சொல்லிவிட்டு மனைவி சகிதம் அந்த முதல் வகுப்புப் பெட்டிக்குள் புகுந்து விட்டார்.

மறுநாள் காலையில் அவருடைய சக ஐரோப்பிய நீதிபதிகள், போத்தனூர் சந்திப்பில் முத்துசாமி ஐயரைத் தேடி வந்தபோது அவர் இரண்டாம் வகுப்புப் பெட்டியில் உட்கார்ந்திருப்பதைப் பார்த்துத் திடுக்கிட்டார்கள். அதே நேரத்தில் முத்துசாமி ஐயரை வெளியேற்றிவிட்டு அவர் இடத்தைப் பிடித்துக் கொண்ட ஐரோப்பியரும் அந்த நீதிபதிகளுடன் கலந்து கொண்டார். அந்த இடைவழி ஐரோப்பியர் ஒரு ஜில்லா நீதிபதி. அவருக்கு முத்துசாமி ஐயரைத் தெரியாது.

விவரம் அறிந்ததும் அந்த ஐரோப்பியர் முத்துசாமி ஐயரிடம் மன்னிப்புக் கோரினார்.

''இது ஒரு சிறு விஷயம். மறந்துவிட வேண்டும். ஆனால் ரயில்வே விதி பற்றி நீங்கள் நேற்று இரவு வியாக்கியானம் செய்தீர்களே,



திம்மையா



முத்துசாமி அய்யர்

அதே போல நீதிஸ்தலத்தில் அமரும்போது வியாக்கியானம் செய்யாதீர்கள்'' என்றார் முத்துசாமி ஐயர் பெருந்தன்மையாக.

★

சென்ற நூற்றாண்டில் காதல் மன்னன் என்ற அடைமொழியைப் பெற்றவர் ஆங்கிலக் கவிஞர் லார்ட் பைரன். அவருக்கு ஒரு கால் சற்று ஊனம். நடை சாய்ந்தேயிருக்கும். அவரை யாராவது பார்த்தால் தம் கால் ஊனத்தைத்தான் கவனிக்கிறார்களோ என்று கோபம் வரும். அதற்காகவே, அவர் கொள்ளைக்காரர்கள் பாணியில் உடை உடுத்திக் கையில் துப்பாக்கிகளுடன் நடமாடுவது வழக்கம். கொள்ளைக்காரன் நடையே சற்று அலாதியாகத்தானே இருக்கும்? —மேனு

# சுழிக்காற்று

## அத்தியாயம் 28

மஞ்சுளாவை வழிமறித்து மடக்கிய 'காரிலிருந்து இறங்கிய இன்ஸ்பெக்டர் ஏகாம்பரம் பரபரப்புடன் ''நான் உங்களை முல்லை வாசலிலேயே இருக்கும்படி சொன்னேனே... நீங்கள் அங்கிருந்து இப்படி...'' என்று கேட்டபடியே மஞ்சுளாவை நோக்கி வந்தார். அவரைப் பேசவிடாமல் கத்தினாள் மஞ்சுளா. ''எங்களைத் தடுத்து நிறுத்தாதீர்கள். எங்களைத் தொடர்ந்து வாருங்கள்'' என்றபடியே தன் காரைக் கிளப்பி வளைத்து ஒடித்து ஒரே பாய்ச்சலில் வேங்கையென முன்னால் பாய்ந்தாள். 'மோகனுவின் கார் இதற்குள் எத்தனை மைல்களைக் குடித்து விழுங்கி ஏப்பமிட்டிருக்குமோ' என்ற தவிப்பை அந்தத் தந்தக் கைகளின் துடிப்பில், சின்ன வெள்ளைப் பாதங்களின் அழுத்தத்தில் அறிந்து கொண்டான் சேகர். மஞ்சுளா காரை எடுத்த வேகத்தில் பின்னுவிருந்த கோபால் நிலைதடுமாறிச் சீட்டின் பக்கவாட்டில் உருண்டு மோதிக் கொண்டான். காரை டாப் கியரில் செலுத்தினாள் மஞ்சுளா. ஆக்ஸிலரேட்டர் பெடல் கிட்டத்தட்ட கார் தளத்தின் விரிப்போடு ஒட்டிக் கொண்டது.

நெடுஞ்சாலையில் ஒரு வளைவு. மோகனுவின் காரை நெருங்குவதற்குள்தான் எத்தனை தடைகள்? சே! ஆனாலும் அவள் கைகள் வண்டியை லாகவமாக ஒடித்துத் திருப்பின. பின் சக்கரம் முறுக்கித் திரும்பியது...அப்பாடா! இனிச் சாலை ஒரே நேர் கோடாக... அதோ தூரத்தில் பறப்பது மோகனுவின் வண்டிதான். ஆக்ஸிலரேட்டரை இன்னும் இன்னும் அழுத்தினாள் மஞ்சுளா. மழை நீர் வண்டியின் முன் கண்ணாடியில் மோதிக் கொண்டு சிதறியது. வைப்பர் அதை இங்கும் அங்கும் வழித்து ஒதுக்கி எறிந்து கொண்டிருந்தது. மை இருளில் அடித்துச் சொரியும் மழைத் திரையைக் கிழித்துக் கொண்டு மூன்று கார்கள் ஒன்றை யொன்று முந்திக் கொள்ளப் போட்டி போட்டன.

மோகனுவின் வண்டிச் சக்கரங்கள் சாலையில் பதியவே யில்லை. ஏதோ ஒரு மாயா சக்தியில் வீதியின் மேலாக அந்தரத்தில் மிதப்பது போலப் போய்க் கொண்டிருந்தது. அப்படி யொரு வேகம். மஞ்சுளாவும் அந்த வேகத்துக்கு ஈடு கொடுத்துத் தன் காரை ஓட்டினாள். இன்னும் சற்றைக்கெல்லாம் அதை முந்தி முன்னால் போயுமிருப்பாள்... அதற்குள்? அவள் கால்கள் திடீரென்று பிரேக் பெடலை அப்படி ஏன் வெறியோடு அழுத்தின? அந்த வேகத்தோடேயே ஸ்டீயரிங்கையும் திருகித் திருப்பினாள்...கார்ச் சக்கரங்கள் சாலையில் வழுக்கிக்கொண்டு கிரீச்சிட்டுச் சுற்றி வளைந்து திரும்பின. வீதியின் குறுக்கே கோணலாக ஓர் ஓரத்தில் போய் நின்றது மஞ்சுளாவின் வண்டி. பின்னால் தொடர்ந்து வந்த இன்ஸ்பெக்டரின் ஜீப், முன் வண்டியின் திமிர்த் திருப்பத்தைக் கண்டு எச்சரிக்கையாகச் சற்றுத் தொலைவிலேயே வேகம் குறைந்து ஓர் ஓரமாகப் போய் நின்றது. இல்லை, நிற்கும்படி பிரேக் போடப்பட்டது. இரண்டு வண்டிகளின் ஹெட் லைட்கள் அந்தப் பிராந்தியத்தின் இருளை விரட்டி ஒளியூட்டிக் கொண்டிருந்தன. மழை ஒரு சாய்வான கோணத்தில் அடர்த்தியாகக்



கொட்டிக் கொண்டிருப்பதை அந்த ஒளியில் நன்கு காண முடிந்தது. மனிதக் கால்கள் மழை நீரை வாரி அடித்தபடி வேகமாக ஓடி ஒரு குறிப்பிட்ட இடத்தில் ஒன்று கூடின. அங்கே?...

மோகனாவின் வண்டி சாலையிலிருந்து நழுவி ஒரு பள்ளத்தில் ஒருக்களித்த கோணத்தில் உருண்டு கிடந்தது. ஒரு பக்கத்துக் கதவுகள் சேற்றில் புதையுண்டிருக்க மேலே இருந்த மறுபக்கச் சக்கரங்கள் இரண்டும் ராட்டினத்தைப் போலச் சுற்றிக் கொண்டிருந்தன. உருண்டு புரண்ட பின்பும் அதன் சக்கரங்கள் அப்படி அந்தரத்தில் சுற்றிக் கொண்டிருப்பதானது அந்தக் கார் எத்தனை வேகத்தில் வந்திருக்கும் என்பதைச் சொல்லிக் கொண்டிருந்தது.

இன்ஸ்பெக்டரின் கையிலிருந்த டார்ச் விளக்கு, ஓர் ஒளிக் கோட்டை ஓடவிட்டது. வண்டியினுள்ளேயும் வெளியேயும். மோகனா வெளியே எறியப்பட்டுச் சகதியில் கிடந்தாள். அவள் பட்டுக் கன்னத்தில் ஒரு வெட்டு. அதிலிருந்து வழிந்த ரத்தம் அவள் உதட்டுச் சாயத்துக்கு இணையாக விளங்கியது. அவளது எடுப்பான மூக்கிலிருந்து வழிந்த ரத்தம்தான் அருவருப்பூட்டியது. வண்டி உருளும்போதோ அல்லது குலுங்கி இவள் வெளியே எறியப் பட்டபோதோ தெரியவில்லை; மோகனாவின் மேலாடை எதிலோ மாட்டிக் கொண்டு விகாரமாகக் கிழிந்து போயிருந்தது. வெட்கத்தை மறைக்கத் திராணியற்றுத் தொங்கும் அவளது அந்த ஆடையைச் சட்டென்று மஞ்சுளா எடுத்து: உயிரற்றுக் கிடக்கும் அவளது கேவலமான அழகை மூடினாள். பெண்ணுக்குப் பெண் சற்றேனும் அனுதாபம் இல்லாது போகுமா? காரின் பின்புறம் ஒரு மனிதன் - மூட்டையாக. பின் ஆசனத்தைப் பற்றிக்கொள்ள அவன் கைகள் பரபரத்தன. மெள்ள ஊர்ந்து உடலை அசைக்க முயன்றான் அவன், கடைசி முயற்சியாக. சேகர் அவனது ஒரு கையைப் பற்றி அவனுக்கு உதவினான். கோபால் அவனது சட்டைக் காலரைப் பற்றி அப்படியே ஒரு கையால் தூக்கினான். சட்டையின் பிடிப்பிலிருந்து உடல் நழுவ அந்த உருவம் வண்டியிலிருந்து வெளியே சகதியில் பொத்தென்று விழுந்தது. அதன் பிறகு அதில் சலனமே இல்லை. எல்லாம் ஓய்ந்து விட்டது.

விசாலமான உயர்ந்த நெற்றி; தலையில் மிருதுவான கேசம் சுருள் சுருளாக. அதில் நரை மயிர்க் கீற்றுகள் இல்லை. நல்ல கறுப்பு. ஒட்டிய சிவந்த முகம். பீதியினால் நிலைகுத்திப் போன கண்கள். இறந்த முகத்தின் திறந்த வாய் பார்க்கப் பயங்கரமாக இருந்தது.

அங்கு குடிகொண்டிருந்த மௌனம் ஒரு சில விநாடிகளானாலும் கூடத் தாங்க முடியாததாக இருந்தது. கொட்டும் மழை, குப்புறக் கவிழ்ந்த கார், குமரியின் முகத்தில் வழியும் குருதி. வியப்போடு கத்தினான் கோபால். சகதியில் விழுந்து கிடந்த அந்த மனித உருவத்தை ஆராய்ந்து கொண்டிருந்தான் அவன்.

''சேகர், மஞ்சுளாவின் அப்பா அன்று இறக்கவில்லை; இதோ இவர்தான்...!''

''மறுபடியும் நன்றாகப் பார் கோபால்'' என்று இன்ஸ்பெக்டரின் கையிலிருந்த டார்ச் விளக்கை வாங்கி அந்த மனிதனின் முகத்தில் விழும்படி காட்டினான் சேகர். கார் விபத்து நேர்ந்த வேகத்தில், அதன் பின் விளைவுகளைக் கண்ட அதிர்ச்சியில் திகைப்படைந்து செயல் புரிய நினைவற்றவர்களாக இருந்த ஏகாம்பரமும் துரைசாமியும் டார்ச் விளக்குக் குறி வைத்துக் காட்டிய மனித உடலின் அருகே ஓடிப் போய்க் குனிந்தார்கள். சேகர் எவ்விதப் பரபரப்பும் அடையவில்லை. அவனுக்குத் தெரியும் அந்த மனிதன் யார் என்று. தெரிந்துகொள்ள வேண்டியவர்கள் மற்றவர்கள்தான். விநாடிகள் மழை நீரோடு கலந்து ஓடின.

''கந்தசாமியின் தம்பி...தருமலிங்கத்தின் இரண்டாவது மகன், உரிமை இழந்து ஓடிப்போன வீராசாமி அல்லவா இது!'' என்றார் சி. ஐ. டி. துரைசாமி. அதைத் தொடர்ந்து மஞ்சுளாவின் நடுங்கும் குரல் ஒலித்தது. ''சின்ன வயசிலே கள்ளக் கையெழுத்துப் போட்டுத் தாத்தாவின் அன்பை இழந்து உரிமையைப் பறி கொடுத்துப் போன சித்தப்பா...! அந்தக் கெட்ட எண்ணம், குற்றம் புரியும் குணம் உங்களை விட்டுப் போகல்லியே. தாத்தா வெறுத்தாலும் நான் உங்க மேலே அநுதாபப்பட்டிருக்கேன். ஆனா... ஆனா... அதுக்குப் பிரதியாக நீங்கள்.... ஐயோ சித்தப்பா.... சீச்சீ... இனி உங்களை இந்த வாயாலே அப்படிக் கூப்பிடவே கூடாது. அதுக்கு அருகதை யில்லாத மனிதன் நீ. செய்த கொடுமைகளுக்கு ஆண்டவன் உனக்குச் சரியான முடிவைத்தான் வழங்கியிருக்கிறான். இப்படி யொரு மனிதனை இல்லை, கொலைகாரனை நான் பார்த்ததே இல்லை.. பார்க்கவும் வேண்டாம்...'' முகத்தைத் திருப்பிக் கொண்டவளைத் தாங்கிக் கொண்டான் சேகர். அவன் மார்பில் தன் முகம் புதைத்து உள்ளம் வெடிக்கக் கதறினாள் மஞ்சுளா.

* * *

சேகர், கோபால், மஞ்சு, ஏகாம்பரம், துரைசாமி அத்தனை பேரும் சாமுண்டிக் கோட்டை போலீஸ் ஸ்டேஷனில் கூடி இருந்தது — இதற்கு முன்பும் இதே போல இவர்களெல்லாம் அங்கிருந்த அந்த நாளை நினைவு படுத்தியது. அப்போது முன்னிரவு நேரம். இப்போதோ இரவு மூன்றும் ஜாமம். விடிவதற்கு இன்னும் சில மணி நேரமே இருந்தது. அப்போது இவர்களோடு நிர்மலா இருந்தாள், டாக்ஸி டிரைவர் காளியப்பன் இருந்தான். அவ்விருவரும் இப்போது இந்த உலகிலேயே இல்லை. அப்போது இன்ஸ்பெக்டர் அதிகார மிடுக்கோடு, தன் உத்தியோக தோரணையில் விளங்கினார். இப்போதோ — தோல்வியைத் தழுவிய நிலையில் சேகரிடம் மரியாதை கொண்ட மனிதராக வீற்றிருந்தார்.

வீராசாமி, மோகனா இவர்களின் உடலங்களைச் சவக் கிடங்குக்கு அனுப்பியாகி விட்டது. டாக்டர் ரகுநாத் வீட்டிலேயே காவல்

# தன் மனம்போல்
# இன்புறவே, தன் வழியில் தென்புறவே
# க்ளாக்ஸோஸ்-D®



தேநீரில் அல்லது காப்பியிலே க்ளாக்ஸோஸ்-D



குடிநீரிலே க்ளாக்ஸோஸ்-D



எலுமிச்சஞ் சாற்றிலே க்ளாக்ஸோஸ்-D



பழச் சாற்றிலே க்ளாக்ஸோஸ்-D



நேரடியாக க்ளாக்ஸோஸ்-D



பாலிலே க்ளாக்ஸோஸ்-D

உங்கள் சுதந்திரம். க்ளாக்ஸோஸ்-D
எப்போது, எப்படிச் சாப்பிடுவது
என்பதற்குக் கட்டுதிட்டங்கள் இல்லை.
களைத்த மனசுக்கு எப்படிப் படுகிறதோ
அப்படியே
எப்படிச் சாப்பிட்டாலும் சரி, ஒன்று நிச்சயம்:
இரண்டொரு ஸ்பூன்களிலே உடனடி
சக்திபெற
இதனிலும் இனிய வழி
இன்னொன்று இல்லை.
அசதி இனி வந்தால், வசதியாக
விரட்டுங்கள்.



**ஊக்க சக்தி உடனடி: அதற்கே க்ளாக்ஸோஸ்-D®**

dCP/GL/26 tam

வைக்கப்பட்டிருந்தார். விடிந்துதானே மேற் கொண்டு நடக்க வேண்டியவைகளைக் கவனிக்க முடியும்.

இதுவரை மஞ்சுளாவுக்கும், கோபாலுக்கும் விளக்கிய விஷயங்களை யெல்லாம் முறைப்படி இன்ஸ்பெக்டரிடமும் விவரித்து முடித்திருந்தான் சேகர். அவன் கூறியதைக் கேட்கக் கேட்க ஏகாம்பரத்துக்கு அவமானமாக இருந்தது. காளியப்பனைக் குற்றவாளியாக முடிவு கட்டித் தான் நடந்து கொண்ட முறை...? சேச்சே!

இன்ஸ்பெக்டரிடம் சம்பவங்களை விளக்கிக் கொண்டிருந்த போது கோபால் மறுமுறையும் அவைகளை உன்னிப்பாகக் கேட்டுக் கொண்டிருந்தான். எந்த விஷயத்தையும் ஒரு முறைக்கு இரு முறையாக விளக்கினல்தான் அவனுக்குப் புரிந்து கொண்ட திருப்தி ஏற்படும். இன்னும் அவன் விளங்கிக் கொள்ளாத விஷயங்கள் சில இருக்கத்தான் செய்தன. ஆகவே, அவைகளைத் தன் நண்பனிடம் கேட்டு விளக்கம் பெற நினைத்தான் கோபால்.

''சேகர் எனக்கு ஒரு சந்தேகம். மஞ்சுளாவின் சித்தப்பா வீராசாமியை நாம் இந்த ஊருக்கு வந்து இறங்கியதுமே ஸ்டேஷனில் பார்த்தோம் அல்லவா? அதற்கும் இப்போது இந்த விபத்தில் சிக்கி இறந்த வீராசாமிக்கும் உருவ அமைப்பில் ரொம்ப மாறுபாடு இருக்கிறதே?''

சேகரின் முகத்தில் முறுவல் படர்ந்தது.

''சரியான கேள்வி. இன்ஸ்பெக்டர்கூட இதைக் கேட்கவில்லை. அத்தகைய உருவ மாற்றத்தில்தான் இந்தச் சூழ்ச்சியின் கருவே இருக்கிறது. திட்டமிட்டது வீராசாமி. அதைக் கட்டிக் காத்தது கோகிலா. இந்தச் சதியின் முழு உருவத்தையும் தெரிந்து கொள்ள வேண்டுமானல், வீராசாமியின் நடவடிக்கைகளைப் பற்றித் தெரிந்து கொள்ள வேண்டும். நாம் இங்கு வந்த அன்று மாலையிலிருந்து அவனது செயல்களை விளக்கினல் போதும். அவன் இங்கிருந்து வெளியேற வேண்டிய அவசியம் ஏற்பட்டது. காரணம், நாம் இங்கு வந்தது. ஒரே நபர் கந்தசாமியாகவும் வீராசாமியாகவும் இரட்டை வாழ்வு வாழ்ந்து கொண்டு முல்லைவாசல் பண்ணைக்குள் இருக்க முடியாதே. ஆகவே, வீராசாமி அந்தப் பிராந்தியத்திலிருந்து வெளியேறுவதாக ஒரு நாடகம் நடிக்கப்பட்டது. அதன்படி அன்று பிற்பகல் மோகனுவுடன் அவன் காரில் முல்லைவாசலிலிருந்து கிளம்பினன் வீராசாமி. கிளம்புமுன் திராட்சைக் கொடி வீட்டிலிருந்து பாலுவின் உடல் உள்ள அந்தப் பெட்டியையும் யாரும் அறியாதபடி முக்கியமாகக் கோகிலாவுக்குத் தெரியாமல் உடன் எடுத்துக் கொண்டார்கள். தார்ப்பாலின் கொண்டு மூடப்பட்டிருந்தது அது. அவர்கள் நேரே சாமுண்டிக் கோட்டைக்கு வரவில்லை. அடுத்துள்ள ஓர் ஊருக்குப் போய் அங்கிருந்து நிர்மலாவுக்கு ஒரு தந்தி கொடுத்தார்கள்; பாலு கொடுப்பது போல. இருட்டும் வேளையில் சாமுண்டிக் கோட்டைக்கு வந்து டிரங்கை இன்ஸ்பெக்டரின் காரேஜின் முன் இறக்கி விட்டு வீராசாமி காளியப்பனுக்கு இன்ஸ்பெக்டர் டெலிபோன் செய்வது போல் போன் செய்து அதை எடுத்துப் போய் 'புக்' செய்யும்படி கட்டளையிட்டான். நாம் வரும் வண்டி சாமுண்டிக் கோட்டை ரயில் நிலையத்தில் வந்து நிற்கும் வரை மோகனுவின் கார் ஸ்டேஷன் அருகே வெளியே ஓர் இடத்தில் நிறுத்தப்பட்டிருந்திருக்கிறது. அதில் வீராசாமி இருந்திருக்கிருன். நாம் வந்த வண்டி கிளம்பும் வரை காத்திருந்திருக்கிருன் வீராசாமி. ஏன் தெரியுமா?'' வினு எழுப்பி நிறுத்திஞன் சேகர்.

''விடையையும் நீயே கூறி விடு, சேகர்! இனி இதில் ஊகங்களுக்கே இடமில்லை....'' என்ருன் கோபால்.

''வண்டி புறப்படும் நேரத்தில் மூச்சு வாங்க வீராசாமி உள்ளே நுழைந்து ஓடிவருகிருன். மோகனு வண்டியை எடுத்துக் கொண்டு முல்லைவாசல் திரும்புகிருன். சாமுண்டிக் கோட்டையில் கடைசியாக வீராசாமியைப் பார்த்தவர்கள், அப்போதைக்கு இப்போது தன் உருவத்தில் திடீரென்றும் விசித்திரமாகவும் மாறுதல் ஏற்பட்டிருப்பதைக் கவனிக்கக் கூடாது என்பதே அவன் நோக்கம். அதற்காகவே அவன் தன் பருமனைச் செயற்கையாகக் காட்டிக் கொண்டிருந்தான். டர்க்கி டவல்களைத் தன் இடையைச் சுற்றி உள்ளே கட்டிக் கொண்டிருந்திருக்க வேண்டும். உப்பிய கன்னங்களுக்குத் தாடையின் உள்ளே ரப்பர்-போன்ற எதையோ திணித்துக் கொண்டிருந்திருக்கலாம். மஞ்சு தன் சித்தப்பாவைப் பார்த்துப் பலவருஷங்களாயிற்று. ஆகவே, அவனது மாற்றம் அவளுக்கு இயற்கைக்கு மாறுபட்டதாகத் தோன்றுவதற்கு நியாயமில்லை. இருந்தாலும் அவள் தன் சித்தப்பா எடையில் கூடி இருப்பதைக் குறிப்பிட்டுக் கிண்டலாக விசாரிக்கத் தவறவில்லை. மஞ்சுவின் மனத்தில் தன்னைப் பற்றிய மாறுதலானதொரு தோற்றத்தைப் பதிக்க வேண்டும் என்பதே வீராசாமியின் இந்த உருவ மாற்ற நாடகத்தின் உத்தேசம். தொந்தியும், தொப்பையுமாக, சிவந்த குண்டு முகத்தோடு, சுருண்ட அடர்த்தியான கருங் குழலோடு உள்ளதோர் உருவத்தை, போகிற போக்கில் உறுதியில்லாததொரு காட்சியாக மஞ்சுளா பார்க்க வேண்டும். வீராசாமியை இவ்வாறுதான் மஞ்சுளா உருவகப் படுத்திக் கொள்ள வேண்டும். இதுதான் அவன் திட்டம். இப்போது புரிகிறதா கோபால்?'' என்று கேட்டான் சேகர்.



உலகிலேயே மிக மோசமான 'ஜோக்'குகள் எவை?

47-ம் பக்கம் பார்க்க

''மேலே சொல்லு'' என்றான் கோபால்.

''இப்படிப் பரபரப்புடன் ஓடி வந்து வண்டியில் ஏறிய வீராசாமியின் பிரயாணம் அதிக தூரம் இல்லை. சாமுண்டிக் கோட்டைக்கு அடுத்த ஸ்டேஷன் வரைதான். அடுத்த ஊரில் இறங்கும் அவனை அங்கு தயாராகக் காத்திருக்கும் டாக்டர் ரகுநாத் தமது வண்டியில் ஏற்றிக் கொண்டு முல்லைவாசலுக்குக் கொண்டு போய் விட்டு விட்டார். உனக்கு ஞாபகம் இருக்கிறதா ? அன்று நாம் சாமுண்டிக் கோட்டையிலிருந்து போலீஸ் ஸ்டேஷனை விட்டுக் கிளம்பும் போது எதிர்ப்பட்ட டாக்டர் ரகுநாத்தை மஞ்சுளா நமக்கு அறிமுகப் படுத்தி வைத்தாள் அல்லவா?''

''அப்போது அவரது காரில் வீராசாமி ஒளிந்திருந்தான் என்று சொல்கிறாயா சேகர்?''

''சந்தேகமில்லாமல். வீராசாமியை முல்லைவாசலுக்கு டாக்டர்தான் தம் காரில் கொண்டு போய்ச் சேர்த்தார். பிறர் கவனத்தைக் கவராத வகையில் வீராசாமி பிரதான பங்களாவின் மாடிக்கு, கந்தசாமியின் அறைக்கு, அதன் பால்கனியிலிருந்து மோகனால் தொங்கவிடப்பட்டிருந்த கயிற்றின் வழியாக ஏறி உள்ளே சென்று மறைந்தான். உள்ளே போனதும் இறந்த தனது அண்ணன் கந்தசாமியினுடையதைப் போலத் தன் உருவத்தை மறுபடியும் மாற்றிக் கொண்டான். அது அப்படியொன்றும் சிரமமான காரியமில்லை. கந்தசாமி அவர்களுக்கு விசாலமான உயர்ந்த நெற்றி. வீராசாமி தன் தலையின் முன்னால் உள்ள முடியை அதே போல் அகற்றி உயர்ந்த நெற்றியை உண்டாக்கிக் கொண்டான். கந்தசாமியின் முடி அடர்த்தியில்லாதது. மெல்லியதானது. அதே போலத் தன் முடியை ஆக்கிக் கொள்ளச் சீப்பின் பற்களுக்குப் பக்கத்தில் அத்துடன் ஒட்டினாற் போல் க்ஷவரக் கத்தியை இணைத்து முடியை அதனால் அழுத்தி வாரினால் முடியின் அடர்த்தி குறைந்து மெல்லியதாகவும் ஆகும். இந்த முறையைக் கையாண்டான் வீராசாமி. தன் அண்ணனின் முடி போலிருப்பதற்காகத் தன் சுருள் முடியைச் சுருள் இல்லாத முடியாக்க அதை இழுத்து நிறுத்த ஒரு வகை (GOOP) ரசாயனத்தைப் பயன்படுத்தினான். கந்தசாமி அவர்களுக்கு நரை மயிர் உண்டு. வீராசாமியின் தலை முடியில் நரை கிடையாது. ஆனால் இத்தனை ஏற்பாடுகளைச் செய்தவனுக்குக் கறுப்பை வெளுப்பாக்குவதுதானா ஒரு பிரமாதம்? மோகனின் அலங்காரப் பொருள்களில் அதற்கும் வசதி இருந்தது. அவனது மேக்கப் உபகரணங்களை வீராசாமியின் சிவந்த முகத்தைக் கந்தசாமியின் ரத்தமிழந்த (சோகை) வெளுத்த முகம் போலாக்கக் கை கொடுத்தது. மறக்காமல் கழுத்தில் காஸ் துணியும் பஞ்சும் உபயோகித்துப் பிளாஸ்திரியும் போட்டுக் கொண்டான். கடைசியாகக் கனமான லென்ஸோடு கூடிய மூக்குக் கண்ணாடியையும் அணிந்த போது அசல் அப்படியே கந்தசாமிதான் என்று பார்த்தவர் கூறும் வண்ணம் உருமாறி விட்டான் வீராசாமி. தர்மலிங்கம் இறப்பதற்கு முன்னால் இயற்கையாக இறந்துவிட்ட கந்தசாமியின் மரணத்தை மறைத்து. அவர் உயிரோடு இருக்கிறார் என்று பிறர் நம்பும்படி செய்ய வேண்டிய நாடகத்தின் காட்சிகள் ஒழுங்காக அமைய வீராசாமியின் நடிப்பு சிறப்பாக இருக்க வேண்டாமா?''

''அது சரி சேகர், மஞ்சுளா தன் அப்பாவைப் பார்க்கும் போது — அதாவது படுத்திருப்பவர் அப்பாதான் என்று எண்ணிப் பார்க்க வருபவளிடம் தன் வேஷம் பலிக்காது போனால் என்ன செய்திருப்பான் வீராசாமி?'' என்று கேட்டான் கோபால்.

''அப்படிப்பட்டதோர் அபாயத்தை எவ்வளவு குறைக்க முடியுமோ அவ்வளவுக்குக் குறைத்திருந்தான். மஞ்சுளா தன் அப்பாவைப் பார்த்து ஒரு வருஷத்துக்கும் மேலிருக்கும். பல மாதங்களாக நோயாளியாகப் படுத்த படுக்கையாக இருந்திருக்கிறார் கந்தசாமி. அப்பா ரொம்ப மாறிப்போயிருப்பார் என்றே மஞ்சுளா எதிர்பார்த்து வந்திருக்கிறாள். நோயாளியான தன் அப்பாவைப் பார்க்கச் சித்தியின் அனுமதி வேண்டி இருந்தது அவளுக்கு. அதுவும் எப்படி? அதிக நேரம் இல்லை. எப்படிப்பட்ட சூழ்நிலையில்? மங்கலான வெளிச்சத்தில். ஒரே ஒரு விளக்கு தான். அதுவும் வர்ண விளக்கு. அப்பாவின் முகம் நிழலுருவமாகத் தெரிவதற்காகத்தான் இந்த ஏற்பாடு. உன்னிப்பாக எதையும் காணக் கூடாது என்ற கருத்தோடு. தவிர உடன் பிறப்புக்களுக்கு இடையே இயற்கையாகவே இருக்கும் சாயலில் உள்ள ஒற்றுமையும் இவர்களின் சதிக்குக் கைகொடுத்திருக்கிறது. மஞ்சுளா வந்த அன்றைக்கோ கிளம்பும் போதோ தன் தந்தையையும் சித்தப்பாவையும் உருவத் தோற்றத்தில் ஒப்பிட்டுப் பார்க்கும்படியான சூழ்நிலையோ அதற்கான அவசியமோ ஏற்படவில்லை. பிறகு போலி அப்பாவின் உயிரற்ற உடலுக்குப் பதில் உண்மையான அப்பாவின் உயிரற்ற உடலைப் படுக்கையில் கண்டதும் தான் சட்டென்று ஏதோ ஒரு மாற்றம் அவளைத் தாக்கி இருக்கிறது. அதை அவளால் அலட்சியமாக ஒதுக்கித் தள்ள முடியவில்லை. அதில் அவள் உறுதியாக இருக்கவே சதிகாரர்களின் திட்டங்களுக்கெல்லாம் சாவு மணி அடிக்கப்பட்டது. சூழ்ச்சிக்காரர்கள் மஞ்சுளா தன் தகப்பனாரின் இறந்த உடலைப் பார்க்க விரும்ப மாட்டாள் என்று தப்புக் கணக்குப் போட்டு விட்டார்கள். தாத்தா தருமலிங்கம் இறந்த போது அவரது உயிரற்ற உடலைப் பார்க்க அவள் விரும்பவில்லை. அது அன்பின் மிகுதியால் மறுக்கப்பட்டது. அதே போல அப்பாவின் இறந்த உடலையும் பார்க்கமாட்டாள் என்று எண்ணிவிட்டார்கள். ஆனால் அந்த இடைக்காலத்தில் அவள் எண்ணம் மாறும்படியான விபரீதமான சம்பவங்கள் பல நிகழ்ந்து விட்டனவே! தான் வெளியேற்றப் பட்டதும் தந்தையின் மரணம் ஏற்பட்டிருக்கிறது என்ற எண்ணமே அவளைச் சதிகாரர்கள் எதிர்பாராதபடி செத்த உடலைப் பார்க்கச் செய்து விட்டது. அப்போது ஏற்பட்ட நிச்சயமற்ற ஏதோ ஒரு சந்தேகம் அதில் அவளை உறுதியாக நிலைக்கச் செய்துவிட்டது.

''மஞ்சுளாவின் குணமே அதுதானே ! ஏதாவது ஒரு விஷயத்தில் அவளுக்குத் திருப்தி ஏற்படவில்லையானால் அதை இலேசில் விடமாட்டாளே !'' என்றான் கோபால்.

(தொடரும்)

# "உலகின் மோசமான ஜோக்குகள்" (The World's Worst Jokes) என்ற புத்தகத்திலிருந்து ஒரு சில:

தொகுப்பு: பாபு

அரசியல்வாதி:



தேர்தலுக்கு முன் உங்கள் கைகளையும் தேர்தலுக்குப் பிறகுஉங்களையும்குலுக்குபவர்

வீட்டுக் குறிப்பு:

சீப்பில் பற்கள் உதிர்ந்து விட்டால் எறிந்துவிட வேண்டாம். வழுக்கைத் தலை நண்பருக்குப் பரிசாகக் கொடுக்கலாம்!



உடலில் உள்ள தோலின் அளவு 17 சதுர அடி. கொஞ்சம் அதிகமானால் சுருக்கம் விழும்!

புல்லாங்குழல்:

வருமான வரி செலுத்திய நாதஸ்வரம்.



ஒரு ரஷ்ய ஜோக் :

ஒரு நல்ல அரசியல் ஜோக்குக்குப் பரிசு கொடுக்கப்படும்.

முதல் பரிசு இருபது ஆண்டுகள்.

★



ஒரு புது கூந்தல் தைலம்:

தலைமயிரை வளர்க்க முடியாவிட்டால் இருக்கும் கூந்தலுக்குத் தகுந்தாற்போல் உங்கள் தலையைச் சுருக்கச் செய்துவிடும்.

★



அவள் வாய் பெரியது. சிரித்தால் காதில் லிப்ஸ்டிக் ஒட்டிக் கொள்கிறது.

★



"எங்க அப்பாவுக்கும் உங்க அப்பாவுக்கும் கொஞ்சம் தான் வித்தியாசம் - உங்க அப்பா கிரிமினல் வக்கீல். எங்க அப்பா கிரிமினல்!"



இரண்டு சுண்டெலிகளை ஒரு விஞ்ஞானி பழக்கினார். சுண்டெலிகள் பேசிக் கொண்டன:

"அந்த ஆசாமியை எப்படிப் பழக்கி விட்டேன் பார். நான் மணி அடித்தவுடன் சாப்பாடு கொண்டுவரக் கற்றுக் கொடுத்துவிட்டேன்!"



புகையிலையில் மரணம் என்றார் ஜோசியர். ஆசாமி புகைபிடிப்பது, பொடி போடுவது, புகையிலை போடுவது எல்லாப் பற்றையும் விட்டு விட்டார். புகையிலை லாரி ஏறி மரணமடைந்தார்!

வீட்டுக் குறிப்பு :



பட்டுத் துணியில் கறைபட்டு விட்டால், அதை நீக்கச் சுலபமான வழி: கத்தரிக்கோலை உபயோகிக்கவும்.



மிக்கி மௌஸ் - வால் நட்சத்திரம் (அதாவது வால் உள்ள சினிமா நட்சத்திரம்.)




நூற்றுக்கணக்கான பல்வேறு டிஸைன்கள் மாதக்-தோறும் வெளிவருகின்றன! வாயில்கள், ஸ்விஸ் வாயில்கள் மற்றும் பாலியெஸ்டர்கள்—உங்கள் ஒவ்வொரு உள்ளக்கிளுகிளுப்பையும் பிரதிபலிக்கும். ஏனென்றால், மங்கையரைப்புரிந்து கொண்டோர் எங்களைப்போல் எவருமில்லை.

**பாம்பே டையிங்**

# தியாகம் தேவையில்லை

## மன்ஹர் செளஹான்

அம்ருத் பேசாமல் புதரண்டை வந்து நின்று கொண்டான். இரவின் இருள் தொட்டுப் பார்க்கலாம் போல் அடர்ந்திருந்தது. ஓராண்டுக்கு முன் அம்ருத் ஊரை விட்டு வெளியேறியபொழுதும், இரவு இருளின் மடியில் இப்படித்தான் பயந்து படுத்திருந்தது. வானத்தையும் கார்முகில்கள் இதே போலத் தான் விழுங்கியிருந்தன. குமுமியிருந்த மேகங்களில் இன்று போலவேதான் அன்றும் மின்னல்கள் கிறீடவில்லை.

அம்ருத் வானத்தை அண்ணாந்து நோக்கினான். கார் முகில்கள் சில இடங்களில் கனத்தும் சில இடங்களில் கனமில்லாமலும் பேசாமல் மௌனமாகப் புரண்டு கொண்டிருந்தன. அவை புரள்வது புரியாப் புதிராக இருந்தது. அதோடு அச்சந் தருவதாகவும் இருந்தது. இன்றைய இரவைப் பார்த்தால் அன்றைய இரவைப் பார்க்க வேண்டியதில்லை. அம்ருத் ஒற்றையடிப் பாதை வழியாக மேலே, மேலே நடந்து கொண்டிருந்தான். இன்று போலவே காற்று அன்றும் இலேசாக அடித்துக் கொண்டிருந்தது. ஒற்றையடிப் பாதையின் இரு மருங்கிலும் பயிர்பச்சைகள் கருமை குமிழியிடத் தூங்கி வழிந்தவாறு அலைபாய்ந்து கொண்டிருந்தன.

அம்ருத் ஒற்றையடிப் பாதையில் நடந்தான். மனிதனது மனம் ஒரேயடியாகப் புழுங்கிக் கிடக்கும் நேரத்தில் அவனது நடை ஒலிகூட ஏனோ செவிகளில் விழுவதில்லை. அடர்ந்த புதர்கள் பின்தங்கி விட்டன. அம்ருத் நேர் எதிரில் இருளிலேயே ஓர் இருளைப் படைத்துக் காட்டும் கிணற்று வட்டத்தைக் கண்டான். சட்டென்று திகைத்து நின்றான். கிணற்றின் வட்டமான மேடையைத் தொட்ட பின்தான் ஒற்றையடிப் பாதை ஊருக்குள் நுழையும். அம்ருத் முன்னேறி நடந்தால் கிணறு கிட்ட வந்துவிடும். அப்பொழுது உள்ளே நீரின் ஆழத்திலிருந்து பிஜுரி பேசினால்...? 'வந்துவிட்டீர்களா?' என்று ஒரு கேள்வியைத் தூக்கிப் போட்டால்....?

என்ன விடை அளிப்பான் அம்ருத்?

'பிஜுரி குறைப்பட்டுக் கொண்டால் அதைத் தவறு என்று கூற முடியாது. 'திரும்பி வருவது என்று இருந்தால் ஏன் போனீர்களாம்?' என்று கட்டாயம் அவள் கேட்பாள். கேட்க வேண்டிய, கேட்கக்கூடிய கேள்வி இது.

கிணற்றுக்குள் பிஜுரி இருப்பாளா?

கிணற்றுக்குள் பிஜுரி இருக்கிறாள் என்று அம்ருத்திடம் யாரும் சொல்லவில்லை. ஆனால் அவனுக்குத் தெரியும், இந்த விஷயம். பிஜுரி அங்கு இருந்தால் கட்டாயம் கேட்பாள், 'வந்துவிட்டீர்களா?' என்று! அவள் கேள்வி கிணற்றின் வட்டச் சுவர்களை மோதிக் கொண்டு எதிரொலிக்கும். உடனே கிணற்றுக்குள்ளிருந்து 'உவா, உவா' என்று எதிரொலி புறப்படும். சரியாகப் பற்றிக்கொள்ளாத தீயிலிருந்து புகை புறப்படுமே, அது போல நீர் மட்டத்திலிருந்து நீராவி எழும். ஊஆ...ஊஆ... அந்த நீராவி மூச்சை முட்ட வைத்துவிடும்.

ஒருகணம் அம்ருத்தின் மனத்தில் சிந்தனை ஓட்டம் எதிர்நீச்சல் அடித்தது. 'நாம் திரும்பி வந்தது தவறு' என்று. இன்னமும் இந்தத் தவற்றைத் திருத்திக் கொள்ளும் வாய்ப்பு அவன் கையிலிருந்து அகன்றுவிடவில்லை. இப்படியே ஊருக்கு வெளியில் இருந்த வண்ணமே அவன் திரும்பிச் சென்றுவிட்டால்...? இருளோடு இருளாக இருளில் கரைந்து விட்டால்...? யாருக்குத் தெரியும், அம்ருத் வந்திருந்தான், வந்தவன் வந்த வழியே திரும்பி விட்டான் என்று!

ஆனால் பிஜுரிக்கு இது விவரம் தெரியாமல் போய்விடுமா? அவளுக்கு எப்படித் தெரியாமல் போகும்? ஆவிகளிடம் எந்த ரகசியத்தையாவது மறைக்க முடியுமா, என்ன? பிஜுரியின் ஆவிக்கு அப்பொழுதே தெரிந்திருக்கும். திரும்பி வரவேண்டும் என்ற எண்ணம் அவன் மனத்தில் முதன் முதலாக முளைத்த அந்தக்கணமே தெரிந்திருக்கும். அப்புறம்...? பிஜுரி கிணற்றுக்குள் இருந்தவண்ணமே மந்திரம் போட்டிருப்பாள். அதனால் தான் அவன் மனத்தில் முளைவிட்ட எண்ணம் கிடுகிடுவென்று வளர்ந்து மரமாகி விட்டது. அப்பப்பா! எத்தனை பெரிதாக வேர் பிடித்துத் தழைத்து விட்டது!

அம்ருத் குலை அதிர நடுக்கமுற்றான். கிணற்று மேடைக்கு மேல் முகத்தை நீட்டி பிஜுரி அவனையே வழிமேல் விழி வைத்துப் பார்த்துக் கொண்டிருப்பது போலத் தோன்றியது. அட! எங்கே, அந்த முகம்? எட்டிப் பார்த்துவிட்டுக் கிணற்றின் நீர்மட்டத்துக்கும் கீழே மூழ்கி விட்டதா, என்ன?

பேயுருவாகிவிட்ட ஆவிகளை நம்ப முடியாது. கணச் சித்தம், கணப் பித்தம்! இந்த நிமிஷம் சந்தோஷம். அடுத்த நிமிஷம் கோபம். அம்ருத்தின் மனத்தில் விந்தையானதோர் அச்சம் பிறந்தது. நான் இப்படியே திரும்பி விட்டால், கிணற்றுக்குள்ளிருந்து எலும்புக்கூடு எழும். ஆம், வெறும் எலும்புக் கூடுதான்! தோலும் சதையும் தான் கரைந்து போயிருக்குமே! சக் சக் சிக்! சக் சக் சிக்! நடனமாடும் எலும்புக் கூடு! பேய்ச் சிரிப்புச் சிரிக்கும் எலும்புக் கூடு! பிறகு பறக்கும் விர்ரென்று. தொப்பென்று



எதிரே வந்து குதிக்கும்! அப்புறம் கழுத்தைக் கட்டிக் கொண்டு விடும். ஹிஹி!

கூடாது. இனித் திரும்பிப் போகக் கூடாது. திரும்பினால் ஆபத்துத்தான்! வந்தது வந்தாகி விட்டது. திரும்பாமல் தைரியமாக முன்னேறினால் பேய்க்கு வருத்தம் ஏற்படாது; வாட்டம் ஏற்படாது. வருத்தமும் வாட்டமும் ஏற்படா விட்டால் கோபமும், குரோதமும்கூட ஏற்படாது.

அம்ருத் எதற்கும் துணிந்து விட்டான். தைரியமாகக் கிணற்றண்டை நடந்து சென்றான். கிணற்றின் கைப்பிடிச் சுவரிலேயே ஏறி உட்கார்ந்து கொண்டான். அச்சம் இல்லை; அலைபாயும் நெஞ்சம் இல்லை. கிணற்றுக்குள் எட்டிக் கூடப் பார்த்தான். காற்று மெதுவாக வீசிக் கொண்டிருந்தும் கிணற்று நீரில் சலனம் ஏற்படவில்லை; அலை புரளவில்லை. நன்றாகப் பெய்த மழை கிணற்றின் நீர்மட்டத்தை உயர்த்தியிருந்தது. அம்ருத் கையை விட்டு நீரைத் தொட்டான். விரல்களை விரித்து, உள்ளங்கையைத் துடுப்பாக்கி அளைந்தான். நீர் மௌனமாகப் பிரிந்து பிரிந்து சேர்ந்தது.

பிஜூரி கிணற்றில் இறங்கிய பொழுது கழுத்தில் கனமான கருங்கல்லைக் கட்டிக் கொண்டுதான் இறங்கியிருப்பாள்! அப்பொழுதும் நீர்மட்டம் இப்படித்தான் உயர்ந்திருக்கும்! பிஜூரி நேரே கிணற்றின் தரைமட்டத்துக்கு அழுந்தியிருப்பாள். சிறிது நேரம் மூச்சைச் சிரமப்பட்டு அடக்கிக் கொண்டிருப்பாள். அப்புறம் வியர்த்து விறுவிறுத்துப் போய்... அவளுடைய சுவாசப் பைகள் காட்டு மைனா போலத் துடி துடித்திருக்கும்! காற்றுக்குப் பதில் நீர் அவள் இரைப்பையை நிறைத்திருக்கும். பிஜூரி மூச்சுத் திணறி மரித்திருப்பாள். அவளோடு அவள் வயிற்றில் வளர்ந்து வந்த விதைக் குருத்தும் மடிந்து போயிருக்கும்...

பிஜூரி சில மாதங்கள் கழித்துத் தண்ணீரில் மூழ்கியிருந்தால் கருவில் வளர்ந்ததாவது புவிக்கு வந்திருக்கும்..

ஊஆ.... ஊஆ...

அம்ருத் துணுக்குற்றான். அருகில் இருந்த புதரிலிருந்து சில் வண்டுகள் ரீங்காரமிடத் தொடங்கியிருந்தன. ஒலியற்ற அந்த இரவில் அவற்றின் ஒலி பெரிதாகிக் காதைத் துளைத்தது. அம்ருத் நெடுமூச்சு விட்டான். வானத்தில் விரவியிருந்த மேகங்களிலிருந்து மின்னல் நாக்கை நீட்டியது. அதன் ஒளியில் அக்கம் பக்கத்திலிருந்த அத்தனை பொருள்களும் வெளுப்பாகக் காட்சி தந்தன. கண்மூடிக் கண் திறக்கும் நேரந்தான். அப்புறம் முன்னைக் காட்டிலும் மையிருட்டு. உடனே மேகங்கள் கர்ஜித்தன. மழை பொழியலாயிற்று. அம்ருத் முகத்தை அண்ணாந்து வைத்துக் கொண்டான்; மூடிய இமைகளில் மழை நீரைச் சேந்திக் கொண்டான். மனப் புழுக்கம் ஒருவேளை இதனால் கொஞ்சம் குறையலாமோ?

இப்பொழுது மின்னல் வெட்டியதே, இது போலத்தானே உன் பிஜூரியும் இருந்தாள்! என்ன பெயர்ப் பொருத்தம்! அவளுமே மின்னல் என்னும் பெயரைத்தானே தாங்கியிருந்தாள்! மின்னல் கொடியாகத் துவண்டு அவள் எதிரே வந்தால், அந்த ஒளியில் கண்கள் கூசத்தானே செய்தன! எப்பேர்ப்பட்ட கண்கள், எப்பேர்ப்பட்ட மூக்கு, எப்பேர்ப்பட்ட உதடுகள், எப்பேர்ப்பட்ட கழுத்து! எல்லாமே தீர்ந்தவை; தேர்ந்தவை. அவள் பேசினால் தேன் ஒழுகுமே!

ஊர் முழுவதும் காட்டுத் தீயெனப் பரவியது, அம்ருத் பிஜூரியைத் திருமணம் புரிந்து கொண்டு அழைத்து வந்த விஷயம். 'பிஜூரியின் மேனிக்குத்தான் என்ன மினுமினுப்பு! பார்த்தாயாடி அவளை!' அம்ருத்தின் ஓட்டுக் கூரை வேய்ந்த வீட்டில் ஊரே கூடி விட்டது. வருவதும் போவதுமாக என்ன கூட்டம், என்ன கூட்டம்! எல்லோரையும் காட்டிலும் மகிழ்ச்சி கண்டவன் அம்ருத்தின் தம்பி லல்லன்தான்.

பிஜூரி வீட்டுக்கு வந்ததைக் கண்டு லல்லன் மனம் மலர்ந்து போனான். ஆனால் அம்ருத் தான் கம்பீரமே உருவானான். அவனுடைய மகிழ்ச்சி யெல்லாம் மனத்துள்ளேயே அடங்கிப் போயிருந்தது. பிஜூரியை அழைத்து வருவதற்கு முன்னால் அவன் திருமணமே செய்து



கொள்ளப் போவதில்லை என்று ஊரறியப் பறைசாற்றி யிருந்தான். அவனுடைய அந்த முழக்கம் பொய்த்திராது. அன்று இரவு மட்டும் அவன் அந்தப் பேச்சைக் கேட்டிருக்கவில்லையென்றால்! அதுவும் அவன் தன் காதுகளாலேயே அல்லவா கேட்டுவிட்டான்!

அன்று இரவு அவன் பன்னிரண்டு மணிக்குத்தான் வீடு திரும்பினான். அச்சகத்தில் அலுவல் அதிகமா யிருந்ததால் பதினொன்றரைக்கு முன்னால் அவன் வெளியேற முடியவில்லை. கவலையற்ற நடையோடு அவன் வீட்டை அடையும்பொழுது தொடக்கப் பள்ளியின் காவலாளி சேமக்கலத்தில் பன்னிரண்டு முறை டணார் டணார்' என்று அடித்து முடித்தான்.

அம்ருத்தும் லல்லனும் — ராம லக்ஷ்மணர்களைப் போன்று இணைபிரியாத ஜோடி. ஒரே அச்சகத்தில் பணியாற்றி வந்தனர். அந்த அச்சகம் மிகச் சிறியது. உருவில் சிறிய இரண்டு ஜெட்டு 'டிரெடில்' இயந்திரங்கள்' மட்டும் கொண்டது. அவைதான் பொக்கைவாய் ஒலியோடு காகிதங்களை அச்சிடும்

பொறுப்பை ஏற்று நடாத்தி வந்தனர். இந்த அச்சகத்தின் பெயர் 'ஜெய் ஹநுமான் பிரிண்டிங் பிரஸ்'. இதில்தான் அம்ருத்தின் தகப்பன் வேலை செய்தான். தகப்பன் இறந்த பிறகு இந்த ராம, லக்ஷ்மணர்கள் வேலை செய்யலாயினர். அம்ருத்தின் அப்பன் இங்கு ஒன்றும் உயர்ந்த பெரும் பதவி பெற்றுவிடவில்லை. வாழ்நாள் முழுவதும் இங்கு அச்சுக் கோப்பாளனாகத்தான் பணியாற்றி வந்தான். மாலையில் அவன் வேலை முடிந்து கை கழுவும்போது, விடாமல் அச்சுக் கோக்கும் 'ஸ்டிக்'கைப் பிடித்திருந்ததனால், இடது கைப் பெருவிரல் வலியினால் ஒடிந்து போகிறாற் போல் ஆகிவிடும். வலது கை விரல்களிலோ நிலக்கரியைக் காட்டிலும் கரிய மை ஏறியிருக்கும். அச்சுக் கோக்கும் 'ஸ்டிக்'கில் நாள் முழுவதும் அச்செழுத்துக்களை அடுக்கிக் கொண்டிருப்பதனால் அந்த எழுத்துக்களின் ஈயம் தேய்ந்து தேய்ந்து விரல்களின் கருமைக்கு மேலும் 'பாலிஷ்' ஏற்றியிருக்கும். அடிக்கடி அவன் தன் இரு புதல்வர்களையும் எச்சரிப்பதுண்டு: 'பாருங்களடா குழந்தைகளா! ஒரு நாளும் கம்பாஸிட்டர்களாக ஆகாதிங்க. விரலில் ஈயம் பட்டுக் கொண்டே இருக்கும். ஈயம் விஷம். சிறுகச் சிறுக உடலில் ஏறும். அப்புறம் ஒரு நாள் ஆள் குளோஸ்தான்.'

தந்தை மீளா உறக்கத்தில் மூழ்கியபோது அம்ருத் அச்சுக் கோக்கும் வேலையைத் தானும் செய்வதில்லை; தன் தம்பியையும் செய்ய விடுவதில்லை என்றுதான் தீர்மானித்தான். எனவே, அவன் அச்சக முதலாளியிடம் சென்றான். அந்த ஊருக்கே அந்த அச்சக முதலாளிதான் பெருந்தனக்காரர்.

அம்ருத்தின் பேச்சைக் கேட்ட முதலாளி, ''கம்போஸிங் செய்ய மாட்டாய் என்றால் பணம் எங்கேயிருந்து வரும்?'' என்று கேட்டார். அம்ருத்துக்குத் திடுதிப்பென்று என்ன பதில் சொல்லுவது என்று விளங்கவில்லை. அச்சுக் கோத்தால் நாளைக்கு ஐந்தாறு ரூபாய் சம்பாதிக்கலாம். அச்சகங்களில் பொதுவாக இரண்டே வேலைகள்தான். ஒன்று அச்சுக் கோப்பது, இல்லாவிட்டால் 'டிரெடில்' ஓட்டுவது. மெஷின் ஓட்டினால் அதிகபட்சம் இரண்டரை ரூபாய் கிடைக்கலாம். அதாவது அச்சுக் கோப்பதில் கிடைப்பதைக் காட்டிலும் பாதி. வருமானம் படிக்குப் பாதியாகக் குறைந்து விடுமே!

தந்தை சாகும்போது செல்லாக் காசுகூடச் சேர்த்து வைத்து விட்டுப் போகவில்லை. இரண்டு சகோதரர்களும் மெஷின் ஓட்டியே சம்பாதிப்பது என்று முடிவுக்கு வந்தால், இரண்டரை இரண்டரை ரூபாய்தான் சம்பாதிக்க முடியும்; இருவரும் சேர்ந்து ஐந்து ரூபாய். இருவருக்கும் சேர்த்து அன்றாடச் செலவே கிட்டத்தட்ட மூன்று ரூபாய் ஆகி வந்தது. அதனால் தினம் மிச்சம் பிடிக்கக் கூடிய ரூபாய் இரண்டே இரண்டுதான். மாதம் அறுபது ரூபாய். வருஷத்துக்கு அறுபது பன்னிரண்டு... எழுநூற்றிருபது. எனவே, அம்ருத், தான் திருமணம் புரிந்து கொள்ளா விட்டாலும், தன் தம்பிக்காவது கட்டாயம் செய்து வைத்து விடுவது என்று முடிவுக்கு வந்தான். அதுவும் ஏப்பை சாப்பையாகக் கூடாது; விமரிசையாகச் செய்து வைக்க வேண்டும் என்று எண்ணினான். விமரிசையாகச் செய்து வைப்பதற்கு அறுபது பன்னிரண்டு என்று பெருக்கல் வாய்ப்பாட்டுக் கணக்கில் எத்தனை நாட்கள்தான் காசு சேர்த்துக் கொண்டிருக்க முடியும்? அப்படியே சேர்த்தாலும் அறுபது பன்னிரண்டு என்று கணக்காக ரூபாய் சேர்ந்து கொண்டிருக்கும் என்பதுதான் என்ன நிச்சயம்? எப்பொழுதாவது ஏதாவது நோய் நொடி வந்தால்...? ஏன், சில சமயம் திருட்டுக்கூடப் போகலாமே! தப்பித் தவறி உடம்புக்கு வந்து விட்டாலோ சேர்க்கிற பணம் அனைத்தும் டாக்டரின் கைக்குப் போய்விடலாம். வருகிற வியாதி கொஞ்சம் நீடித்தால் போதும், கடன்பட வேண்டியதுதான். இந்தக் காலத்து டாக்டர்கள் சிகிச்சைதான் செய்கிறார்களா, அல்லது உயிரை வைத்துத் தோலைத்தான் உரிக்கிறார்களா, தெரியவில்லை! வீட்டுக்குள் திருடன் புகுந்துவிட்டால் பணம் போகிறது மட்டுமா? மூச்சுப் பிரிய முனைந்தால் கத்தியை நீட்ட மாட்டானா?

திருட்டிலிருந்து தப்பிவிடலாம். அவனுக்கு வழி புரிந்து விட்டது. அச்சக முதலாளி ஒரு தடவை சொல்லியிருந்தார், ஊரில் உள்ள தபால் ஆபீசிலே பணத்தைப் போட்டு வைக்கலாம் என்று! ஆனால் நோய் நொடியிலிருந்து தப்பத்தான் வழி வகை தோன்றவில்லை! ஆமாம், எதுவுமே பணம் நிறைய இருந்தால்தானே? மடியில் கனம் இருந்தால் அல்லவா வழியில் பயம்?

இரண்டு ஆண்டுகளுக்குள்ளாவது லல்லனுக்குத் திருமணத்தை முடித்துவிட வேண்டும். அண்ணனுக்கு எதிரில் அவன் பசுப் போல் இருந்தாலும், பல இடங்களிலிருந்து அவன்வரை புகார்கள் வந்ததுண்டு, லல்லன் இங்கே இப்படி நடந்து கொண்டான், அங்கே அப்படி நடந்து கொண்டான் என்று! அதற்காக அம்ருத் லல்லனை ஒருபோதும் கண்டித்ததில்லை. 'வயசுப் பிள்ளை இப்ப ஆடாவிட்டால் என்ன இடுப்பொடிந்த பின்னா ஆடுவான்?' என்றுதான் எண்ணினான். இடுப்புக் கூனிய பின் ஆடினால் ஏச்சுக்கும் பேச்சுக்கும் வேறு இடம் ஆகும்! இந்த ஆட்டத்துக்கும் பாட்டத்துக்கும்கூட அதிக நாள் விட்டு வைக்கக் கூடாது. சட்டுப் புட்டென்று ஏதாவது முடிவு கட்ட வேண்டும். ஆம்... லல்லனுக்குத் திருமணம் செய்து விடவேண்டும். ஓராண்டு இரண்டாண்டு என்று காலம் கடத்தக்கூடாது. எவ்வளவு முடியுமோ, அவ்வளவு சீக்கிரம் முடித்துவிட வேண்டும்.

அம்ருத் அச்சக முதலாளியிடம் சென்று, ''இதோ பார், முதலாளி! எனக்கு அச்சுக் கோக்கும் வேலையைக் கொடு. தம்பி லல்லனை மெஷினில் போடு. சம்பாத்தியம் குறையும்; பரவாயில்லை. விபத்தையாவது விலைக்கு வாங்கிக் கொள்ளாமல் இருக்கலாமல்லவா?'' என்றான்.

மறுநாள் முதலே லல்லன் டிரெடில் மெஷினில் போடப்பட்டான். விழிகளில் மகிழ்ச்சி ஒளியைத் தேக்கியவாறு அம்ருத் அவன் அருகில் போய் நின்றான். லல்லன் அண்ணனைப் பார்த்து ஒரு முறுவல் பூத்தான். டிரெடிலை இயக்கும் இரும்புப் பிடி தரை

யைத் தொட்டாற்போல் இயங்கிக் கொண்டிருந்தது. லல்லன் அப்பிடியில் காலை வைத்து 'சைக்கிள் பெடலை'ப் போலப் பலம் கொண்ட மட்டும் மேலும் கீழுமாகச் சுழற்றிக் கொண்டிருந்தான். தையல் மெஷினை ஒரு காலால் சுழற்றி ஓட்டுவதில்லையா, அப்படி! இயந்திரத்தின் வாய் முதலை வாயைப் போல் திறந்து மூடிக் கொண்டிருந்தது. இயந்திரத்தின் வாய் திறந்து கொள்ளும்போது இயந்திரத்தை ஒட்டினாற்போல் போட்டிருந்த பலகையில் உட்கார்ந்து மன்சுகா தன் கையை அதன் வாயில் கொடுப்பான். அவன் கட்டை விரல்களும் மற்ற விரல்களும் காகிதத்தின் ஒரு மூலையைப் பற்றி இருக்கும். பாம்பு வேகத்தில் அவன் அந்தக் காகிதத்தை இயந்திரத்தின் வாயில் இருக்கும் ஊக்குகளோடு இணைத்து விடுவான். சட்டென்று வாய் மூடிக்கொள்ளும். மன்சுகாவும் கண்கொத்திப் பாம்பாகக் கையை வெளியே இழுத்துக் கொள்வான். மசியொத்தும் ரோலர் கீழேயிருந்து மேலே ஏறும். எதிர்ப்புறத்தில் உள்ள வாயில் அச்செழுத்துக்கள் — விரல்களைக் கறுப்பாக்கி விஷம் ஏற்றும் நஞ்சு எழுத்துக்கள் — காட்சி தரும். அவற்றின் மீது ரோலர்கள் மசியைப் பூசும். பிறகு மேலே 'டண்டண்' என்று ஒலிக்கும் வட்டத் தட்டுகளோடு உராயும், மீண்டும் புதிதாக மசி ஒற்றிக் கொள்வதற்காக. இரு அன்னங்களும் ஒன்றோடு ஒன்று ஒட்டி உறவாடும். இரட்டு 'டிரெடில்' 'கடாக்' என்ற ஒலியோடு ஒரு முறை உடலை உதறிக்கொள்ளும். அச்செழுத்துக்கள் காகிதத்தில் பதியும். உடனே இயந்திரத்தின் வாய் திறந்து கொள்ளும். திறந்த வாய்க்குள் லல்லன் கை விடுவான். அச்சடித்த காகிதத்தை வெளியே இழுத்துக் கொள்ளுவான். அதே சமயத்தில் மன்சுகாவின் கைகள் புதிய வெற்றுக் காகிதத்தை ஊக்குகளில் செருகி விடும்.

''அடே லல்லூ!'' —மன்சுகா கூச்சல் போட்டான்: ''கொன்னுடுவே போலிருக்கே! மெதுவா மிதிடா, படவா!''

பிடியில் கால் வைத்து உற்சாகம் பொங்க லல்லன் உதைத்த உதைப்பில் 'ஃப்ளை வீல்' வெகு வேகமாகச் சுழலத்தொடங்கியிருந்தது.

அந்த வேகத்துக்கேற்ப இயந்திரத்தின் வாயும் திறந்து மூடிக்கொள்ளலாயிற்று. மன்சுகாவினால் அந்த வேகத்துக்கு ஈடு கொடுத்துப் புதுப் புதுக் காகிதங்களைச் செருக முடியவில்லை. மன்சுகாவுக்குத் தோல்வி காட்டிவிட்ட முனைப்பில் லல்லன் முறுவல் பூத்தான். மன்சுகா 'அக்கா' பெயரை இழுக்கவே, லல்லன் பிடியிலிருந்து காலை அகற்றிக் கொண்டான். இருந்தாலும் 'ஃப்ளை வீலி'ன் இயக்கத்துக்கேற்பப் பிடி மேலும் கீழும் போய்வந்து கொண்டிருந்தது. அது சலாம் போட்டு மன்னிப்புக் கோருவது போலத் தோன்றியது.

மன்சுகா பலகையிலிருந்து கீழே இறங்கினான். அவன் நெற்றியில் வியர்வைத் துளிகள் முத்திட்டிருந்தன. டிரெடில் மெஷினின் பிரேக்கை அழுத்தி அவன் 'ஃப்ளை வீலை' நிறுத்தினான். பிறகு விரல்களால் நெற்றி வியர்வையை வழித்துக் கீழே சொட்ட விட்டான்.

''என்னதான் சொல்லு! அச்சு இயந்திரத்துக்கு அலாதிக் கவர்ச்சி இருக்கத்தான் செய்கிறது!'' அம்ருத் மகிழ்ச்சி பொங்கத் தொடர்ந்தான்: ''அச்சுக் கோக்கிற வேலை வெறும் தரித்திரம் பிடித்த வேலை! நாள் முழுவதும் 'ஸ்டிக்'கில் எழுத்தை அடுக்கிக் கொண்டிருப்பதும் ஒரு வேலையா? ஈயத்தைத் தொட்டுக் கையைக் கரியாக்கிக் கொள்கிறதைக் காட்டிலும் இதில் எத்தனை மன நிறைவு இருக்கிறது?''

''எல்லோருக்கும் பிறர் செய்யும் வேலை தான் நல்லதாகப்படுகிறது. நீ ஈயத்தைத் தொடுவதற்கு மனசை அலட்டிக் கொள்ளுகிறாய். நாங்கள் இந்த முதலை வாயில் கையைக் கொடுத்துக் கொடுத்து எடுக்க வேண்டியிருக்கிறதே என்று கிடந்து அடித்துக் கொள்ளுகிறோம். நொடி நேரம் தாமதித்தால்கூடக் கை உள்ளே போயிடும். காகிதத்துக்குப் பதிலாகக் கையை அழுத்தினால் எலும்பு பொடிப் பொடியாய்ப் போயிடும், தெரிஞ்சுதா? அப்புறம் ஆயுசுமுழுவதற்கும் பயன்படாது கை!''

மன்சுகா வெறும் தரையில் கைகால்களை நீட்டிப் படுத்து விட்டான். அவன் 'தொள தொள'வென்று ஓர் அரை டிராயர் மட்டுமே



அணிந்திருந்தான்; அதில் நீலம், சிவப்பு, கறுப்பு என்று அச்சடிக்கும் மை பொட்டுப் பொட்டாகப் படிந்திருந்தது. அவன் உடல் முழுதும் வியர்வையினால் குளிப்பாட்டப் பட்டிருந்தது, எண்ணெய் தேய்த்துக் கொண்டாற்போல. அவன் இமைகளில், நெற்றியில், மூக்கில், கன்னத்தில், திட்டுத் திட்டாக மசிக் கறை படிந்திருந்தது. தரையில் படுத்துக் கிடந்த அவன் பார்ப்பதற்கு 'டிரெடிலி'ன் ஒரு பாகமே கழன்று விழுந்திருக்கிறாற்போல் தோற்றமளித்தான். அம்ருத் லல்லனிடம் பத்துக் காசைக் கொடுத்து, ''நீ ரொம்பக் களைச்சுப் போயிட்டே! போ, போய்த் தேநீர் குடிச்சுட்டு வா!'' என்றான்.

லல்லன் பக்கத்தில் உள்ள பங்குக் கடைக்குத் தேநீர் குடிக்கப் போனதும், அம்ருத் மன்சுகாவிடம் நெருங்கி, ''உண்மையைச் சொல்லு! அச்சுக் கோப்பதைக் காட்டிலும் மெஷின் ஓட்டுவது அதிக ஆபத்தானதா?'' என்று கேட்டான்.

''இதுவும் ஆபத்தானதுதான்; அதுவும் ஆபத்தானதுதான்!'' உணர்ச்சியற்ற கல் முகத்தோடு அப்படியே அயர்ந்து படுத்த படியே மன்சுகா கூறினான்.

''அப்படியானால்...அப்படியானால் நான் லல்லனை அச்சுக் கோக்கும் பகுதியிலேயே மீண்டும் போட்டு விடட்டுமா ?'' என்று கேட்டான் அம்ருத்.

மங்களா சிரித்த வண்ணமே எழுந்து உட்கார்ந்தான். ''லல்லனுக்கு என்ன ஆபத்து? ஆபத்து எனக்கல்லவா ஏற்படும்?'' என்றான்.

''ஏன்?''

மங்களா அவனுக்கு விளக்கினான். லல்லன் மெஷினின் வாயில் அது திறந்திருக்கும்போது தான் தனது கையைக் கொடுக்கிறான். தானே இயந்திரத்தின் வாயில் அச்சடிப்பதற்காக வாய் மூடிக் கொள்ளும் பொழுது புதிய வெற்றுக் காகிதத்தைக் கொடுக்கிறேன். நான் கொடுக்கும்போது இயந்திரத்தின் வாய் மூடிக் கொள்வதனால் ஆபத்தான வேலை என்னுடையதுதான்'' என்றான்.

அம்ருத்துக்கு அதைக் கேட்ட பின்னரே நிம்மதி ஏற்பட்டது. 'பன்னிரண்டு புள்ளி' மோனோ டைப் கேசுக்கு அருகில் சென்று அவன் கம்போஸ் செய்யத் தொடங்கிய பொழுது துளியும் அவன் விரல்கள் நடுங்கவில்லை. சுயத்தைத் தொட்டுக் கரியாவதைக் கூட அவை பொருட்படுத்தவில்லை.

சிறிது நேரத்துக்கெல்லாம் லல்லன் தேநீர் அருந்திவிட்டுத் திரும்பி வந்தான். புத்துணர்வுடன் டிரெடிலின் பிடியைப் பிடித்துச் சுற்றலானான்.

'டன்னன்ன...கடாக்!'

இரண்டு நாட்களுக்குப் பின் ஒரு நாள். இரவு வீடு திரும்பியதும் லல்லன் கட்டிலில் காலை நீட்டிப் படுத்துக் கொண்டான். அப்புறம் முறையிடும் குரலில், ''என் கால்களில் வலி தாளவில்லை!'' என்றான்.

அம்ருத் துணுக்குற்று அவனைப் பார்த்தான். அரிக்கேன் விளக்கின் மங்கிய ஒளி அறையை நிறைத்திருந்தது. வாட்டத்தை எடுத்துக் காட்டுவது போல. ஓர் உற்சாக வெறியில் லல்லன் இத்தனை நேரமும் டிரெடிலைச் சுற்றியிருக்கிறான். அதனால் அவன் கால் நரம்புகள் பிடித்துக் கொண்டு விட்டன. அம்ருத் கடுகெண்ணெயைச் சூடு பண்ணி அவன் கால்களில் உருவித் தேய்த்துவிட்டான். அப்புறம்தான் லல்லனால் தூங்க முடிந்தது.

ஆனால் வெகு நேரம் வரையில் அம்ருத்துக்குத் தூக்கமே வரவில்லை. அவன் விளக்கை அணைத்தான், இருள் தூங்குவதற்கு உதவுமோ என்ற நம்பிக்கையில். ஆனால் அந்த இருள் எத்தனையோ ஐயங்களுடன் தோழமை பூண்டு அவனை ஆட்டிப் படைக்கலாயிற்று. அச்சகத்தில் பணியாற்றும் இரண்டொரு நபர்கள்-அம்ருத்துக்கு அறிமுகமானவர்கள் — சில ஆண்டுகள் தொடர்ந்தாற் போல் 'டிரெடில்' ஓட்டினால் கால் நரம்புகள் முறுக்கேறி முடிச்சு முடிச்சாகிவிடும் என்று அவனுக்குச் சொல்லி யிருந்தார்கள். அப்படியானால் பின்னி முடிந்துகொண்ட நரம்புகளோடு வாழ்வதுதான் லல்லனின் வாழ்வா? அம்ருத்துக்குத் தன்னைப் பற்றி ஏதும் கவலையில்லை. யார் திருமணமே செய்து கொள்ளப் போவதில்லையோ, அவன் கால் நரம்புகள் முடிச்சு முடிச்சானால் என்ன, சுயத்தின் நஞ்சு கண் பார்வையை மங்க வைத்தால்தான் என்ன; எல்லாமே ஒன்றுதானே? அதனால் அவனுக்கு என்ன வந்துவிடப் போகிறது?

ஆம். நிஜமாகவே அம்ருத்துக்குத் திருமணம் தேவையில்லை. அவன் பணம் சம்பாதிக்க விரும்பினான், நன்றாக. அதுவும் தனக்காக அல்ல; தன் அருமைத் தம்பிக்காக. விலைவாசிகள் ஏறிவிட்ட இந்தக் காலத்தில் இரண்டுபேர்களின் வருமானத்தைக்கொண்டு நான்கு பேர்கள் சுகமாக இருக்க முடியாது. மூன்றுபேர்கள் வேண்டுமானால் இருக்கலாம். அவன், லல்லன், லல்லனுக்கு வரப்போகும் பெண்சாதி.

லல்லனைப் பெற்றெடுத்த இரண்டு ஆண்டுகளுக்கெல்லாம் இரு சகோதரர்களையும் தனியே விட்டு விட்டு அன்னை விண்ணுலகம் சென்று விட்டாள். ஆனால் அம்ருத்துக்குத் தனக்குத் தாயார் இல்லை யென்ற நினைப்பு அவ்வளவாக உறுத்தவில்லை. தன் தம்பி லல்லன் இப்படித் தாயில்லாப் பிள்ளையாகி விட்டானே என்றுதான் வருந்தினான். லல்லன் அவன் கண்களுக்குத் துயரமே உருவானவனாகத் தோற்றுவான். கள்ளங் கபடமற்ற அன்பான அந்தக் குழந்தை முகம் கண்டு அவன் பெருமூச்செறிவான்.

லல்லன் டிரெடிலும் ஓட்டக் கூடாது. அச்சுக் கோக்கவும் கூடாது என்றே அம்ருத் விரும்பினான். ஆனால் லல்லன் என்ன வேலை செய்வது? — இதுவும் அவனுக்குப் பிடிபடவில்லை. எல்லாவற்றுக்கும் இறுதியில் அவன் இனிமையானதொரு முடிவுக்கு வந்தான். கூடிய விரைவில் லல்லனுக்குத் திருமணம் முடித்துப் பார்க்க வேண்டும் என்பதே அது. அந்த இனிய நினைவில் அவன் இமைகள் மூடி உறக்கத்தை வருவித்தன.

ஜய் ஹநுமான் பிரிண்டிங் பிரஸின் மொட்டு டிரெடில் தினமும் 'தன்' ஒலி யெழுப்பும். கம்போஸிங் ஸ்டிக்கில் 'ராமா பீடி குடியுங்கள்' என்ற எழுத்துக்களைக் கோத்துக் கோத்து அம்ருத்தும் சோர்ந்து போவான். திடும் திடுமென அவனுக்குத் தூக்கி வாரிப் போடும். மிஷின் ரூமில் டிரெடில் பிடியைச் சுற்றும் லல்லன் அவன் விழிகளில் படுவான்.

'டன்னன்னன் — கடாக்!'

....முறுக்கேறிய நரம்புகள்!

லல்லன் வேண்டாம் என்று தடுத்தாலும் அம்ருத் தினமும் அவன் கால்களுக்கு எண்ணெய் தடவி உருவி விடுவான். ஆனால் ஆண் பிள்ளையின் முரட்டுக் கை எங்கே? பெண் பிள்ளையின் மிருதுவான பூப்போன்ற விரல்கள் எங்கே? மெத்தென்ற சூடான உள்ளங்கை, சொல்லுக்குச் சொல் இனிமையான பேச்சு! அதற்கெல்லாம் அவன் எங்கே போவான்? அண்ணனின் முரட்டுக் கரங்கள் உருவி விடுவதனால், நரம்புகள் முறுக்கேறி முடிச்சு முடிச்சாகி விடலாம். ஆனால் பெண்ணின் பூப்போன்ற சூடான உள்ளங்கை தேய்த்து விட்டால், முறுக்கேறிய நரம்புகளும் பிரிந்து விட்டுக் கொள்ளுமே!

எனவே,— பெண்சாதி! லல்லனுக்கு ஒரு பெண்சாதியைக் கொண்டுவர வேண்டும்!

ஆனால் தனக்கு...?

அம்ருத்தின் வலியேறிய விரல்களுக்கும் கடகடவென்று - நெரியும் முதுகு எலும்புக்கும் இதமாக...

அட, தேவையே யில்லே. வேண்டவே வேண்டாம். அம்ருத் கிழக்கு; திருமணம் மேற்கு! இரண்டும் இரண்டு துருவம். இருபத்தெட்டாண்டுகள் தனியாகவே — ஒன்றிக்கட்டையாக இருந்தே ஓடிவிட்டன. முப்பத்தைந்தில் இந்திய மண்ணில் பிறந்தவன் மூப்புற்று விடுகிறான். இருபத்தெட்டு எப்பொழுது ஓடி விட்டதோ, பாக்கியும் ஓடிவிடும். ஆனால் லல்லனைப் பார்! எப்படிக் கட்டிளங்காளையாக இருக்கிறான்! வயது இருபத்திரண்டு தான் ஆகிறது. ஆனாலும் மதர்த்து இருபத்தைந்து ஆனவன் போலத் தோற்றுகிறான்!

பெண்சாதி....லல்லனுக்குப் பெண்சாதி...

மாலையில் அச்சகத்துக் குழாயடியில் குந்தி அமர்ந்து அம்ருத் சவுக்காரத்தைத் தேய்த்துத் தேய்த்துக் கைவிரல்களில் படிந்துவிட்ட மையத்தின் கருமையைக் கழுவி கொண்டிருந்தான். அவ்வழியே வந்த லல்லனை அருகில் அழைத்து, ''இங்கே வா! நிரம்பக் களைத்துப் போய்விட்டாயா?'' என்று கேட்டு அவன் முகத்தை நோக்கினான். உதடுகளுக்கு மேலே மூக்குக்குக் கீழே பார்வை பதிந்தது. மீசை எப்படிக் கருகருவென்று வளருகிறது பயலுக்கு! விழிகளிலும்தான் என்ன கருமை, மை தீட்டினாற் போல! வீட்டில் அவனுக்கென்று இன்னும் ஒருத்தி வரவில்லையே!

அம்ருத் அதே கையோடு ஒரு நிலச்சுவான்தாரிடம் சென்று, ''சாமி, வயல் காவலுக்கு ஆள் வேணுமா? இரவு முழுவதும் கண் விழித்துக் காப்பேன்!'' என்றான்.

வேலை கிடைத்து விட்டது. பகல் முழுவதும் அச்சகத்தில் அச்சுக் கோத்தல், மாலை வீடு சென்று 'சாப்பிட்டோம்' என்று பெயர் பண்ணுதல், லல்லனுக்கு எண்ணெய் தேய்த்து 'மாலிஷ்' செய்தல், அதை அடுத்து இரண்டு மணி நேரத் தூக்கம், அப்புறம் இரவு முழுவதும் காவல்! விடியற்காலையில் ஐந்தரை மணிக்கு வீடு திரும்புதல். ஒன்பதே கால் வரை தூக்கம். பிறகு சட்டுப் புட்டென்று குளியல், லல்லன் சமைத்த உணவை வாரி வாரிப் போட்டுக் கொள்ளுதல், அதே வேகத்தில் அச்சகத்துக்குச் செல்லுதல்... பத்து மணிக்கு மேல் ஒரு நிமிடம் தாமதித்துச் சென்றாலும் முதலாளியின் கரு விழிகள் தெறித்து விடும்போன்ற பார்வைக்கு இலக்காக வேண்டி வரும்!

பெண்சாதி... லல்லனுக்குப் பெண்சாதி...

லல்லன் சமைக்கிறான் காலையிலும், மாலையிலும்! லல்லன் ஏன் உணவு சமைக்க வேண்டும்? ஆண்பிள்ளையின் அலுவல் சம்பாதித்துப் போடுவது; பெண்பிள்ளையின் வேலை ஆக்கிப் போடுவது! பெண் பிள்ளையின் வேலை ஆக்கிப் போடுவது; ஆண் பிள்ளையின் வேலை அதைச் சாப்பிடுவது! வந்துவிடுவாள் பெண்சாதி! விரைவிலேயே வந்துவிடுவாள் லல்லனுக்குப் பெண்சாதி! இப்பொழுது நம் வீடு வீடாகவா இருக்கிறது? பெண்பிள்ளை இல்லாத வீடு ஒரு வீடா? இல்லை, இடுகாடு! விளக்கேற்றப் பெண் ஒருத்தி வந்து விட்டால், வீட்டில் இப்படி ஒட்டடை பிடிக்காது; சிலந்தி வலை கட்டிக் குடித்தனம் செய்யாது. வீடு விளக்கம் பெறும். ஒளிமயமான இல்லம் காணக் காண இன்பம் தரும்.

வீட்டில் இரண்டு அறைகள் இருந்தன. ஒன்றில் லல்லன் இருப்பான், ஒன்றியாக அல்ல; இரட்டையாக. இன்னொன்றில் இருப்பான் அம்ருத் தனியாக; இரட்டையாக அல்ல. காது கொடுத்து கேட்பான், லல்லனின் பெண்சாதி என்ன பேசுகிறாள் என்று! 'காலைக் கடுக்கிறதா? முட்டியை வலிக்கிறதா? இப்படி நீட்டுங்கள், பிடித்து விடுகிறேன்! விரல் மரத்துப் போகிறதா? இப்படி நீட்டுங்கள், சொடுக்கி விடுகிறேன்!' ட்சாக்! இரண்டாவது விரல் ட்சாக்! கை வளையல்கள் ஒலி எழுப்பும். சிற்சில சமயங்களில் நான்கு உதடுகள் எழுப்பும் 'சப்ல' என்னும் ஒலி கூடக் கேட்கலாம் அம்ருத்தின் செவிகளில்!

தப்பு! தப்பு! தப்பு! புருஷன் பெண்டாட்டி பேச்சை ஒட்டுக் கேட்கிறது உண்மையிலேயே மோசமான காரியம். யார் சொல்கிறது, மோசமான காரியம் என்று? லல்லன் நமக்கு அந்நியனா, வேற்று மனிதனா?

லல்லனின் மனைவி உணவு சமைப்பாள்; பரிமாறுவாள், மணக்க மணக்க. ஆவி பறக்கப்



''சீதா! இந்தா, நவராத்திரிக்கெனப் பண்ருட்டியிலிருந்து வாங்கி உங்க அப்பா கூட்ஸில் அனுப்பிய பொம்மைகள் !''

பறக்க! மூக்கைத்துளைக்கும் அறுசுவை மணம். அம்ருத்துக்குத் தன்னை யறியாமல் தன்னையும் மீறிச் சிரிப்பு வந்துவிடும். அவன் லல்லனை நோக்குவான், லல்லன் பார்த்தும் பாராதவன் போலக் கண் புதைப்பான். தன்னைத் தானே அடக்கியாள முயல்வான். கடைசியில் முடியாமல் முறுவலித்து விடுவான்.

வெள்ளிசாக ஓராண்டு பகல் பொழுது ஓடிவிட்டது; இரவுப் பொழுதும் ஓடிவிட்டது. ஆனால் அத்தனை ரூபாய் சேரவில்லை. எத்தனை ரூபாய்? எத்தனை ரூபாய் சேர்ந்தால் விமரிசையாகத் திருமணம் முடிக்க முடியுமோ, அத்தனை ரூபாய்! வயல் காவல் வேலை நிரந்தரமாகக் கிடைக்கவில்லை. இடையில் அம்ருத்துக்கு மலேரியா வந்து விட்டது. அதை அடுத்து வயிற்றிலே ஏதோ கோளாறு. நேரத்தை மிச்சப்படுத்துவதற்காக ஒருவன் டடடவென்று சரியாகச் - கவலைக்காமலே

சோற்றை விழுங்கினால்...? பகல் முழுவதும் மூதுரு ஓடிய வேலை செய்துவிட்டு இரவு நேரங்களிலும் தூங்காமல் இருந்தால்..... அப்பனே! மனிதன் மெஷினா என்ன?

பெண்சாதி... லல்லனுக்குப் பெண்சாதி...

அம்ருத் ஜமீந்தாரிடம் போனான். "ஐயா! நீங்கள்தான் எனக்குத் தாயும் தந்தையும். கடன் வேண்டி வந்திருக்கிறேன். லல்லனுக்குப் பெண் பார்த்துத் திருமணம் செய்ய வேண்டும். ஓராண்டுக்குள் கடனைத் திருப்பி பாக்கி இல்லாமல் அடைத்து விடுகிறேன்!" என்று வேண்டினான்.

ஏறக்குறைய ஆயிரம் உழைத்துச் சேர்த்திருந்தான். ஐந்நூறு கடன் வாங்கினான். அவன் போட்ட திட்டப்படி எத்தனையோ ஆயிரம் வேண்டும் செலவு செய்ய. ஆனால் அந்த எத்தனையோ ஆயிரம் எப்பொழுது சேருமோ, யார் கண்டார்கள்? அது வரை லல்லன் தனியனாக — ஒன்றிக் கட்டையாக இருப்பதா? அந்த ஒன்றரை ஆயிரத்திலேயே நல்ல தடபுடல் செய்து விட்டான். மன்சுகா 'டோல்' வாசிப்பில் தன் கைவரிசையைக் காட்டினான்: 'கட் கட் கடாக், தட் தட் தடாக்.' மன்சுகாவின் நண்பன் திரைப்படப் பாடல் ஒன்றை எடுத்துவிட்டான்: 'மேரி ப்யாரீ பஹனியா, பனேகி துல்ஹனியா!'

எப்படிக் களைகட்டி விட்டது மாப்பிள்ளை அழைப்பு! லல்லன் குதிரை மீது அமர்ந்து மாப்பிள்ளை என்றால் மாப்பிள்ளையாகத் திகழ்ந்தான்! கொம்பு வாணங்கள் சீறி எழும்பி வானத்தையே முட்டின!

இப்படிப் படு அமர்க்களத்தோடு சமியா அவன் வீட்டு மருமகளாக வந்தாள். கால்களில் சதங்கை கொஞ்ச வீட்டில் இங்கும் அங்கும், அங்கும் இங்கும் வளைய வந்தாள். வீடு எப்படி லட்சுமிகரமாகி விட்டது! சமையல் செய்வது, ஒட்டடை தட்டுவது போன்ற எல்லா வேலைகளும் அவள் கைக்கு மாறின. இரவு நேரங்களில் அறையின் அடுத்த பக்கத்திலிருந்து அம்ருத் அவர்கள் இருவருடைய இரகசியப் பேச்சைச் செவிமடுப்பான் அல்லது செவி மடுத்ததாகக் கற்பனை புரிந்து மகிழ்வான்.

சமியா புகுந்த வீட்டுக்கு வந்து மூன்று வாரங்கள் ஓடிவிட்டன. மன்சுகா வேலையை விட்டு விட்டுப் போய் விட்டான். அவனுக்கு நகர்ப்புறத்தில் ஒரு பெரிய அச்சகத்தில் சிலிண்டர் மெஷினில் வேலை கிடைத்துவிட்டது. அம்ருத்திடம் விடைபெற்றுப் போகும் பொழுது அவன், "சிலிண்டர் மெஷினில் காகிதம் கொடுப்பது இவ்வளவு ஆபத்தான வேலையில்லை. அதில் மெஷினின் வாயில் கையைக் கொடுக்க வேண்டி நேருவதில்லை. சௌகரியமாகப் பலகையில் உட்கார்ந்து கொள்ளலாம். ஒவ்வொரு காகிதமாகக் 'கிளிப்'பில் செருகிக் கொண்டு போகலாம். தானாகவே காகிதம் உள்ளே போகும். உருண்டையான சிலிண்டரில் ஏறி அச்சாகும்" என்று சிலிண்டரின் பெருமையைக் கூறினான்.

அம்ருத் சிலிண்டர் மெஷினைப் பார்த்தவனில்லை. அதனால் அவன் கூறிய விளக்கமெல்லாம் அவன் மூளைக்கு எட்டவில்லை. ஆனால் அவனுக்கு ஒன்றே ஒன்று மட்டும் விளங்கியது. டிரெடிலைக் காட்டிலும் சிலிண்டர் மெஷின் ஆபத்துக் குறைவானது என்பதுதான் அது. எனவே, அவன் வெகு அன்போடு காலில் விழுந்து, வேண்டாத குறையாக, "மன்சுகா! நம் லல்லனுக்கும் எப்படியாவது சிலிண்டர் மெஷினில் வேலை வாங்கிக் கொடுத்து விடேன்!" என்று கெஞ்சினான்.

மன்சுகா முயன்று பார்ப்பதாக அவனுக்கு வாக்குறுதி அளித்தான். அதற்குப்பின் அவன் அம்ருத்தை ஒரு மூலைக்கு அழைத்துச் சென்றான். கல் போன்ற தன் முகத்தில் சிறிதும் உணர்ச்சி வேறுபாடோ, நாணமோ காட்டிக் கொள்ளாமல் கேட்டான்: "ஆமாம், சின்னவன் திருமணம் செய்து கொண்டு விட்டான். பெரியவன் தனியன்தானா?"

அம்ருத் அதே பழைய புன்முறுவலை உதிர்த்தான். "திருமணம் புரிந்து கொண்டு நான் என்ன செய்யப் போகிறேன்? சின்னவனுக்கு ஆயிற்றே, அதுவே போதும்!" என்று விடையளித்தான்.

"ஆனால் உனக்கு ஒரு விஷயம் தெரியுமா?"

"என்ன?"

ஊரில் உன்னைப் பற்றி ஒரு பேச்சு அடிபடுகிறது."

"பேச்சா? என்ன பேச்சு?"

"அதாவது நீ.... நீ...."

"சொல்லு, மென்று விழுங்காமல்!"

"....திருமணம் செய்து கொள்ளத் தகுதியில்லாதவன் என்று!"

"அப்படின்னா....?"

"திருமணம் செய்து கொண்டாலும் உனக்குக் குழந்தை பிறக்காது என்று!"

மன்சுகா போய் விட்டான், வைக்கோல் போரில் தீக்குச்சியைக் கிழித்துப் போட்டு விட்டு! பேச்சு!.... குழந்தை பிறக்காது என்று.... இந்த ஜனங்களுக்கு வேறு எதுவுமே தோன்றுவதில்லையா?.... இது போல் பொருளற்ற பேச்சுத்தான் பேசுவார்களா? இந்தப் பசங்க நாக்கில் நரம்பில்லாமல் பேசிவிட்டான்களே! கேட்டானுகளா, பார்த்தானுகளா! ஏதோ வதந்தியைக் கிளப்பிவிட்டானுகளே! — குழந்தை பிறக்காதாமே!....

தம்பி சுகமாக இருக்க வேண்டும், அவனுக்கே சம்பாத்தியம் முழுவதையும் தர வேண்டும் என்பதற்காக நான் ஒன்றிக்கட்டையாக இருக்கிறேன்! அட, மடசாம்பிராணிகளா! உங்கள் கழுதைப் புத்தியை என்னவென்பேன்! எனக்குக் குழந்தை பிறக்காதா? உங்களுக்குத் தங்கை தமக்கை இருந்தால் எனக்குத் திருமணம் செய்து தரத் தயாராடா?....

உள் இருந்த மிருகம் விழித்துக் கொண்டு விட்டது. கண்களின் நிறம் மாறிவிட்டது. கருரத்தம் கட்டினாற்போல. உணர்ச்சிகளும் மாறிவிட்டன. முந்திய சாதாரணக் கண்கள் எங்கே? இப்பொழுதைய கனலைக் கக்கும், ஆத்திரம் தீரப் பழி வாங்கத் துடிக்கும் கண்கள் எங்கே? பார்வையில் படும் பொருள்கள் எல்லாம் பற்றி எரிந்துவிடும் போலிருக்கிறதே!

மன்சுகா போன பிறகு, சிற்சில வேளைகளில் இப்பொழுது அம்ருத்தும் டிரெடிலில் உட்காரும்படியாயிற்று. ஏனென்றால், இப்பொழுது புதிதாகவந்த 'மெஷின் மேன்' முழு நேரப் பணியாளனாக வரவில்லை. அவன் காலை பத்து மணி முதல் மதியம் பன்னிரண்டு மணி

வரைதான் 'டிரெடில்' ஓட்டுவான். அதற்குப் பின் சைக்கிள் ஏறி ஏழு மைலுக்கு அப்பால் உள்ள நகரத்துக்குச் சென்று இரண்டு மணியிலிருந்து பத்து மணி வரை சிலிண்டரில் வேலை செய்வான். அவனுக்குச் சம்பாத்தியம் ஏராளம். ஏனென்றால், நல்ல மெஷின்மேன்களுக்கு இப்பொழுதெல்லாம் நல்ல கிராக்கி. கேட்ட தொகை கூலியாகக் கிடைத்து வந்தது. எத்தனையோ தடவை அம்ருத்துக்கு அவன் மேல் பொறாமையேகூட ஏற்பட்டிருக்கிறது. ஆனால் உழைப்பாளி என்ற காரணத்தில் அவனுக்கு அவன் மரியாதையே காட்டி வந்திருக்கிறான். பன்னிரண்டு மணிக்கு மெஷின் மேன் போன பிறகு ஜய் ஹநுமான் பிரிண்டிங் பிரஸின் டிரெடில் சும்மாதான் வேலையின்றிக் கிடக்கும். அம்ருத் இருக்கும் போது லல்லனுக்கு அச்சுக் கோக்கும் வேலை தர முடியாது. அதனால் பன்னிரண்டு மணிக்கு அப்புறம் லல்லன் மாலை பொழுது சாயும்வரை சுவரில் சாய்ந்து தூங்கி வழிந்துகொண்டிருப்பான். முழுச் சம்பளமும் வேண்டும், வேலையும் வாங்கக் கூடாது என்றால் அச்சக முதலாளிக்கு அது பொறுக்குமா? மெஷின்மேனைக் காட்டிலும் அச்சுக் கோப்பவர்கள் சுலபமாகக் கிடைத்து வந்தார்கள். முதலாளி ஒரு முழு நேர அச்சுக் கோப்பாளரைத் தேடிப் பிடித்துக் கொண்டு வந்து விட்டார். அதனால் பன்னிரண்டு மணிக்குப் பின்னரும் டிரெடில் பெரும்பாலும் ஓடத் தொடங்கியது. கொஞ்சம் கொஞ்சமாக அம்ருத்துக்கு டிரெடில் வேலை பழகிவிட்டது.



அம்ருத்துக்கு அச்சக முதலாளி அதே பழைய சம்பளத்தைக் கொடுத்து வந்தார். அச்சுக் கோத்தாலும் இயந்திரத்தில் வேலை செய்தாலும் பாகுபாடு செய்யவில்லை. அதன் பலன், அம்ருத்தின் ஆர்வம் அசாத்திய வெறியாகியது.

ஆம், வெறிதான்!

சமியா ஆவி பறக்க நறுமணம் கமழும் உணவைப் பரிமாறும் பொழுதெல்லாம், அம்ருத்துக்கு என்னவெல்லாமோ செய்யும்! விளக்கை அணைத்துவிட்டு அவன் இரவெல்லாம் சிவராத்திரியாகக் கண் விழிப்பான். விளக்கு அணைந்து விட்டதைக் கொண்டு அண்ணன் தூங்கி விட்டான் என்று கருதி லல்லன் தன் அறையில் சுதந்திர புருஷனாகி விடுவான். இறுகும் அரவணைப்பில் முனகலும் ருசிக்கும் உதடுகளின் ஓசையும் சிலசமயம் கேட்கும். அதைக் கேட்டு அம்ருத்துக்கு மண்டையை விண் விண் என்று தெறிக்கும். ஒரே ஓட்டமாக ஓடி அச்சகத்துக்குச் சென்றால் என்ன, 'டிரெடிலி'ன் 'ஃப்ளைவீலை'த் தன் இஷ்டத்துக்கு வேகமாக மூர்க்கமாகச் சுற்றினால் என்ன என்று தோன்றும். 'கடாக்... டண்...கடாக், டண்ண்!....'

நாளடைவில் ஒரு வேளை எரியும் தணலில் நீறு பூத்தாலும் பூக்கலாம். வாழ்க்கை பழையபடியே ஓடியிருந்தாலும் இருக்கலாம். ஆனால் ஒரு நாள் அம்ருத்தின் நம்பிக்கையே தகர்ந்து போகும்படியான காரியம் நடந்து விட்டது! அவன் உள்ளத்துள் உறுதியாக இருந்த ஓர் இழையும் நைந்து அறுந்து போயிற்று. முதுகுக்குப் பின்னால், சில சமயம் முன்னாலும்கூட முறுவலிக்கிறவர்களின் முகங்கள் என்ன சொல்கின்றன என்பதை அம்ருத் நன்றாக அறிந்து வைத்திருந்தான். ஆனால் உலகம் என்ன வேண்டுமானாலும் எண்ணிக் கொண்டு போகட்டும், அல்லது சொல்லிக் கொண்டு போகட்டும், என் லல்லன் என்னை மனிதன் என்று எண்ணினால் அதுவே போதும் என்று தேற்றிக் கொண்டிருந்தான். எனக்கு வேறு ஒன்றும் வேண்டாம், என் தம்பியின் நல்ல நினைப்பைத் தவிர! — இப்படி முடிவு கட்டிக் கொண்டு எல்லாவற்றையும் மறக்க முனைந்து அதில் ஓரளவு வெற்றியும் கண்டிருந்தான்.

அன்று அச்சகத்தில் அவனுக்கு வேலை அதிகமாயிருந்தது. மாலை ஐந்து மணி வரை டிரெடில் தன் பொக்கை வாயை அசைபோட்டுக் கொண்டிருந்தது. அதற்குப் பின் லல்லனை வீட்டுக்கு அனுப்பிவிட்டு, அம்ருத் அச்சுக் கோக்கத் தொடங்கினான். பதினொன்றரை மணிக்குப் பெட்ரோமாக்ஸை அணைத்துவிட்டு அவன் அச்சகத்தின் கீழ்க் கூரை வழியாக வெளியே வந்தான். 'ஓவர் டைமி'ல் கிடைக்கப் போகும் காசுகள் அவன் கற்பனைக் கண் எதிரே களிநடம் புரிந்து கொண்டிருந்தன. அவை நாளை மாலைக்குள் அவனுக்குக் கிடைத்துவிடும். இரண்டு நாட்களுக்கெல்லாம் அவ்வூருக்கு ஒரு டூரிங் டாக்கீஸ் வர இருந்தது. முதலில் 'ராதா — கிருஷ்ணா' என்னும் படம் ஓடுவதாகவும் இருந்தது. அந்த நோட்டீஸைத்தான் அன்று அவசரமாக அச்சுக் கோத்துக் கொடுக்கவேண்டியிருந்தது. மறு நாள் காலைக்குள் அதை டிரெடிலில் ஏற்றியாக வேண்டும். அப்பொழுதுதான் அவர்களுக்குச் சரியான நேரத்தில் நோட்டீஸை சப்ளை செய்ய முடியும். பதினொன்றரை மணிக்கெல்லாம் 'கம்போசிங்' முடிந்து விட்டது. பொழுது விடிந்ததும் விளம்பரத்தை அச்சடித்து விடலாம். இனி இதில் ஐயமில்லை. நாளை பத்து மணிக்குப் பதிலாக ஒன்பதரை மணிக்கே லல்லன் டிரெடிலின் பிடியைச் சுழற்றத் தொடங்கினால் ஆயிற்று வேலை!

கவலை இல்லாத நடை நடந்து அவன் வீட்டுக்குப் போகவும், கிராமத்து ஆரம்பப் பள்ளியின் காவலாளி எண்ணிப் பன்னிரண்டு அடித்து முடிக்கவும் சரியாக இருந்தது.

அவன் தன் அறைக் கதவை மிகவும் எச்சரிக்கையாக ஓசைப்படாமல் திறந்தான், லல்லன் — சமியா தங்கும் பக்கத்து அறைக்கு ஓசை கேட்டு அவர்களுக்கு இடையூறு ஏற்படக் கூடாதே என்று! உள்ளே சென்று

சிறிது நேரம் அவன் பேசாமல் நின்றான். இருட்டில் கண்கள் பழக வேண்டுமே என்பதற்காகத்தான். அவன் கதவைச் சாத்தி விட்டுப் பாயில் படுத்தான். நடுச் சுவரில் கூரைக்குப் பக்கத்தில் ஒரு சின்ன சன்னல் இருந்தது. அதிலிருந்து தெளிவற்ற ஓர் ஒலி இந்தப் பக்கமாக நீந்தி வந்தது. அம்ருத் இனம் கண்டு கொள்ள முயன்றான். மன்சுகா சொல்லிச் சென்றது முதல் அம்ருத்துக்கு எதையும் ஒட்டுக் கேட்டு அறிந்து கொள்ளும் பழக்கம் அதிகமாகி விட்டது. எத்தனையோ தடவைகள் அவனால் தன் படுக்கையில் படுத்திருக்க முடிந்ததில்லை. எழுந்து சுவரண்டை செல்வான். இடுப்பைச் சற்று வளைத்துக் காது கொடுத்து என்ன பேசுகிறார்கள் என்று கேட்க முனைவான். இன்றும்கூட அப்படித் தான் பேசாமல் எழுந்து சுவரண்டை சென்று நின்று கொண்டான், இருளில் ஒரு சிலையாக.

"இதைக் கேட்டீங்களா?" இது சமியாவின் குரல்.

"ஊம்....":

"அண்ணன் ஏன் திருமணம் கட்டிக் கொள்ளவில்லை ?"

"உனக்குத் தெரியாதா ?"

"தெரியும். இருந்தாலும் உங்களையும் கேட்கிறேன்!"

"என்ன தெரியும்?"

"அதாவது.... அதாவது அவர் திருமணம் செய்து கொள்ளத் தகுந்தவர் இல்லை என்று."

"எனக்குத் தெரியாது !"

"எல்லோரும் இப்படித்தானே பேசிக் கொள்கிறார்கள் ?"

"எல்லாரும் பேசிக் கொண்டால் நான் என்ன செய்வது? நாம் யார் யாரை யென்று தடுக்க முடியும்?"

"ஆனால் இந்த விஷயம் உண்மையா, இல்லையா ?"

"எனக்குத் தெரியாது. ஜனங்கள் சொல்லிக் கொள்வதில் உண்மை இருக்கும் என்று தான் எனக்கும் படுகிறது. ஆனாலும் நீ யாரிடமும் வார்த்தைகளைக் கொட்டி வைக்காதே!"

சமியா மௌனமாயிருந்தாள்.

"நான் சொல்லுவது புரிந்ததா, இல்லையா?"

"உம் !"

"உறக்கம் வந்தால் உறங்கு!"

சமியா தூங்கினாளா, இல்லையா? - அம்ருத்துக்கு இது தெரியாது. ஆனால் அவன் இரவு முழுவதும் புரண்டு புரண்டு படுத்தே கழித்தான்; கொதிக்கும் இருப்புச் சட்டியில் உயிரோடு வாட்டப்படும் மீனைப் போல் துடித்தான்.

அடுத்த அறையில் அவர்கள் கசமசவென்று பேசிய பேச்சு மட்டும் இரவின் இருளில் வட்டமிடும் கருவண்டைப் போல் அவன் காதுகளில் ரீங்காரம் செய்து கொண்டிருந்தது. உண்மை இருக்கும் என்றுதான் எனக்கும் படுகிறது. எனக்கும் உண்மை... எனக்கும்....

மறு நாள் ஃப்ளைவில் சுழன்றது வேகமாக ! தடிப் பயல் மவனே! கடாக்! உங்க அக்கா— கடாக்! உன் அப்பா கடாக்! உன் மகள் கடாக்.....!

இத்தனை மட்டரகமான வசவுகளா ? அதுவும் இவ்வளவு 'நல்ல' குணம் படைத்த அம்ருத்தின் வாயிலிருந்தா?

"லல்லன்! இயந்திரத்தை இன்னும் வேகமாக இயக்கு! இன்னும் வேகமாக! இன்னும், இன்னும்.....!".

"அண்ணா! இன்று உங்களுக்கு என்ன நேர்ந்து விட்டது?".

"ஒரு மண்ணும் நேரவில்லை! மேட்டர் அர்ஜெண்டாக வேணுமாம்! வேகமாகச் சுழற்று !"

"இதைக் காட்டிலும் வேகமாகச் சுழற்ற என்னால் ஆகாது!"

சுழன்று கொண்டிருந்த 'ஃப்ளைவில்' கிரீச்சிட்டது. மெஷினில் இத்தனை அழுத்தமாகத் திடீரென்று இதுவரை அம்ருத் 'பிரேக்'— போட்டதே இல்லை. இரட்டு டிரெடிலின் ஒவ்வொரு பகுதியும் எதிர்ப்புணர்வில் ஆடித் துடித்து அடங்கியது. அச்சக முதலாளி மட்டும் அந்த நேரத்தில் வெளியே போகாமல் இருந்து இப்படிப் பிரேக் போட்டதையும் கண்டிருந்தால், அம்ருத்தை விழிகளாலேயே பொசுக்கியிருப்பார்.

அம்ருத் இப்படி நடந்து கொண்டதற்குக் காரணம் என்னவென்று லல்லனால் விளங்கிக் கொள்ள முடியவில்லை. அவனுக்கு முகம் செத்து, அழுகையே வந்து விட்டது. அதைக் கண்ட அம்ருத்துக்கு ஒரு குரூரத்தனமான மகிழ்ச்சி ஏற்பட்டது. அவன் முறுவலித்து, "சரி, மெதுவாகவே ஓட்டு!" என்றான். அவன் கோபம் பாலாகப் பொங்கி அடங்கத் தொடங்கியிருந்தது. சில கணங்களில் அதன் மேல் ஆடையும் புடைத்து நின்றது.

ஆனால் ஒவ்வோர் இரவிலும் மனத்துள் அசிங்கமான வெறுக்கத்தக்க வண்டு ரீங்காரமிட்டு வட்டமிட்ட வண்ணம் இருக்கிறதே, அதனிடமிருந்து ஆளை விடுவித்துக் கொள்வது எப்படி? ஒரே உபாயம்தான் தோன்றியது அம்ருத்துக்கு. அவன் திருமணம் செய்து கொண்டுவிட வேண்டியதுதான். அது ஒன்றே தான் சரியான வழி. அதை விட்டால் வேறு வழியே இல்லை. எல்லோரையும் போல் திருமணம் புரிந்து கொண்டு முதல் வருஷத்திலேயே....வேறு என்ன வழி? இந்த மட்டிப் பயங்களுக்கு நம்பிக்கை ஏற்பட வேண்டுமானால்...அது ஒன்றே வழி.

அம்ருத் திருமணம் புரிந்து கொள்வது என்று என்றைக்குத் தீர்மானித்தானோ, அன்றிரவு நாலரை மணி சுமாருக்கு ஊமைக் கோட்டான் ஒன்று அவன் அறைக்குள் புகுந்து விட்டது. அறைக் கதவு சாத்தியிருந்தது. அதனால் அது சாளரத்தின் வழியாகத்தான் வந்திருக்க வேண்டும். ஒரு சாண்கூட இராத இந்தச் சிறிய கோட்டான் எத்தனை கெட்ட சகுனங்களைக் கொண்டது என்னும் விவரம் அம்ருத்துக்கு நன்றாகத் தெரியும். ஒரு தடவை இந்த ஊமைக் கோட்டான் வீட்டுக்குள் நுழைந்துவிட்டால் போதும், அதை வெளியேற்றுவது மிக மிகக் கடினம். இங்கிருந்து விரட்டினால் அங்கு போய் உட்காரும். அங்கிருந்து விரட்டினால் இங்கு வந்து உட்காரும். விரட்ட விரட்டப் பாய்ச்சல் காட்டி ஆள் பிராணனை அப்போடு வாங்கி விடும். அப்புற



# தலைவலியா?

# அனாஸின்

## விரைவிலே குணம் பெற மேலானது.
## ஏனெனில் அது சக்தி வாய்ந்தது; நம்பகமானது.



''அனாஸின் தலைவலியை விரைவிலே அகற்றுகிறது'' என்று அடித்துக் கூறுகிறார், பம்பாய் ஆபீசர் திரு. எஸ். என். எஸ். ராவ். ''என்னுடைய கைப் பெட்டியில் எப்போதும் ஒரு ஸ்ட்ரிப் அனாஸின் இருக்கும்''

**சக்தி வாய்ந்தது**—ஏனெனில், உலகெங்கும் டாக்டர்கள் மிக அதிகமாக சிபாரிசு செய்யும் வலி நிவாரணியை அதிக அளவில் கொண்டது அனாஸின். ஆகையால்தான் அனாஸின் வலியிலிருந்து விரைவிலேயே நிவாரணமளிக்கிறது.

**நம்பகமானது**—ஏனெனில், டாக்டரின் நம்பகமான மருந்தைப் போல் பல மருந்துகளின் கலவையே அனாஸின். அதை குழந்தைகளுக்கும் கொடுக்கலாம்—எல்லா மருந்துகளுக்கும் கேட்பது போல உங்கள் குழந்தைக்கான இதன் சரியான அளவையும் டாக்டரிடம் கேளுங்கள்.

ஜலதோஷம் மற்றும் ஃப்ளூவினால் ஏற்படும் வலிகள்
மற்றும் நோவுகள், தலைவலி, முதுகுவலி, தசைவலி,
பல்வலி ஆகியவற்றுக்கு அனாஸின் சக்திவாய்ந்த நிவாரணி

# அனாஸின்

**இந்தியாவின் புகழ் பெற்ற வலி-நிவாரணி**



A-57

Regd User of Tm: Geoffrey Manners & Co., Ltd.

இப்பொழுது
ஃப்ரெஸ்காவை
உணர்ந்து பாருங்கள்




இரண்டு அளவுகளில்
கிடைக்கிறது.

கோத்ரெஜ் அளிக்கும்
ஃப்ரெஸ்கா பியூடி டால்க்

# ஃப்ரெஸ்கா என்றாலே புத்துணர்ச்சிதான்!

Interpub GF–3TM

மும் மனம் இருந்தால்தான் போகும்; இல்லா விட்டால், மனிதன் என்னதான் தலைகீழாக நின்றாலும் போகாது. இருட்டிலே கொட்டக் கொட்ட விழிக்கும்; வாய் திறந்து 'முணுக்கு'க்கூடத் தெறிக்காது. தன் மௌனத்தாலேயே நமக்கு எல்லாவற்றையும் அது விளங்க வைக்க முயல்வதாகத் தோன்றும். 'தம்பி! எனக்கு எல்லாம் தெரியும். உன் ஜம்பம் என்னிடம் சாயாது' என்று கூறாமல் கூறுவது போல் இருக்கும்.

அத்தனை நேரமும் யோசனையில் ஆழ்ந்திருந்தவன் சரியாகக் கண் உறங்கிக்கூட இருக்கமாட்டான்; கோட்டான் பறந்து வந்து கூரையின் மடித்துப் போன வைக்கோல்களை அவன் முகத்தின்மீது உதிர்த்துத் தூக்கத்தைக் கலைத்து விட்டது. கண் திறந்ததும் முதன் முதலாக அவன் கண்களில் பட்டது கோட்டானின் வட்ட வடிவமான விழிகள்தான்! அவன் வாயிலிருந்து அசிங்கமாக ஒரு வசவு புறப்பட்டது. இப்பொழுதெல்லாம் அவன் வாய்க்கு வசவு தண்ணீர் பட்டபாடு! உறவைக் கூறி ஓரே சொல்லில் ஒருவரைத் திட்டும் பாணியை அவன் நன்கு கற்றுத் தேர்ந்திருந்தான். ஆயினும் சட்டென்று உதடுகளைக் கடித்துக் கொண்டான். ஏனெனில் தன் அறைக்குள் ஊமைக்கோட்டான் புகுந்த செய்தியைப் பிறர் அறிய விரும்பவில்லை அவன். ஊமைக் கோட்டான் ஊரைக் கெடுக்குமே! ஊருக்கே ஆகாதபொழுது அது வீட்டுக்குள் வந்து விட்டால் எப்படி நல்ல சகுனம் ஆகும்?

கோட்டானை விரட்டும் முயற்சியில் வெற்றி காணாமல் அலுத்துப் போய் அம்ருத் லாந்தரை அணைத்து விட்டான்; தலையிலிருந்து கால்வரை போர்வையை இழுத்துப் போர்த்திக் கொண்டு படுத்துவிட்டான், கோட்டானைப் பார்ப்பதில்லை என்று! அது பார்த்தால் பார்த்துவிட்டுப் போகட்டுமே, அவனுக்கு என்ன வந்தது?

விடிந்தபின் முகத்தை மறைத்திருந்த போர்வையை அகற்றினான் அம்ருத். பார்த்தால் கோட்டான் எப்பொழுதோ விடை பெற்றுப் பறந்து போய் விட்டிருந்தது.

மெய்யாகவே அம்ருத் திருமணம் புரிந்து கொண்டான். பிஜூரியை இல்லக் கிழத்தியாக அழைத்து வந்தான். திருமணத்தில் கூடுமானவரை குறைவாகவே செலவு செய்தான். யாருக்கு அதிகச் செலவு செய்து தடபுடலாகத் திருமணம் செய்ய வேண்டும் என்று எண்ணியிருந்தானோ, அதுதான் அப்பொழுதே முடிந்து விட்டதே ! பார்க்கப் போனால் அம்ருத் ஆசையோடு, திருமணம் செய்துகொள்ள வேண்டும் என்று திருமணம் செய்து கொண்டான்? வீட்டுக்கு ஒரு பெண் பிள்ளையை அழைத்து வந்தான், அவ்வளவே. அதுவும் எதற்காக? எவ்வளவு முடியுமோ, அவ்வளவு சீக்கிரம் அவள் தனக்கு ஒரு குழந்தையைப் பெற்றுத் தர வேண்டும் என்பதற்காக! பசு கன்று போடுவது போல, கோழி முட்டை இடுவதுபோல, அவள் ஒரு குழந்தையைத் தர வேண்டும். அவ்வளவே அவன் நோக்கம்.

ஆனால் பிஜூரியினால் அப்படிச் செய்ய முடியவில்லை; அவன் ஆசையை நிறைவேற்றி வைக்க முடியவில்லை.

ஓராண்டு ஓடிவிட்டது. யாரிடம் கடன் வாங்கியிருந்தானோ, அந்தக் கடனைக் கூடத் தீர்த்துவிட்டிருந்தான்.

சமியாவின் மடியில் குழந்தை விளையாடிக் கொண்டிருந்தது. பூப்போன்ற ஒரு பெண் குழந்தைக்குத் தாயாராகும் பேற்றை அவள் பெற்றிருந்தாள். லல்லனுக்கு மகிழ்ச்சி மிதப்பில் உடலே பூரித்தது. 'என் மகள்! என் மகள்!' ... என்று சொல்லுக்குச் சொல் இறும்பூது எய்தினான். ''அண்ணியோவ் !



'' சாதாரண மண் பொம்மைதானென்று நினைச்சுடாதே. நான் என் கணவருடன் அகில உலகச் சுற்றுப்பயணம் செய்தபோது அமெரிக்காவில் வாங்கினேன்!''

இங்கே வாயேன், வந்து பாரேன்! இவள் எப்படி அழுகிறாள் என்று! லலலா! தந்நா! ஏ, சமியா! எங்கே போயிட்டே ! ஓடி வா, ஓடி வந்து குழந்தையை எடுத்துக்க! கொஞ்சம் எடுத்துவிட்டு அழுகையை ஓயச் செய்!'' என்றெல்லாம் குரல் கொடுத்தான்.

அம்ருத்தோ தன் அறையில் தனியாக உட்கார்ந்திருந்தான் ! 'அண்ணியோவ் !.... இங்கே வாயேன், வந்து பாரேன்!' என்று அவன் கூறியதுதான் தாமதம், அம்ருத் மனத்துக்குள்ளேயே திட்டித் தீர்த்தான்: 'நாசமாகப் போ நீ! நாசமாகப் போக உன் அண்ணி!''

அன்று அச்சகத்தின் டிரெடில் காலைமுதல் மாலை வரை விடாமல் ஓடிக் கொண்டிருந்தது. டண்ண் கடாக்! டண்ண் கடாக்!

கதிரவன் மலைவாயில் விழுந்து, மாலையை மயக்கிய பொழுது அம்ருத் லல்லனை வீட்டுக்கு அனுப்பி வைத்தான். ஆனால் அவன் சுற்றுத் தயங்கிப் பின் போய் வந்த இடமோ களைத்த மூளைக்கு வெறியூட்டிக் களிநடம் புரிய வைக்கும் இடம்.

அன்று இரவு அம்ருத் பிஜூரியை நெருங்கியபொழுது அவள் அஞ்சிப் பின் நகர்ந்தாள். ''நீ சாராயம் குடிச்சிருக்கே?'' அவள் கேள்வி முணுமுணுப்பாக அம்ருத்தின் செவிகளில் விழுந்தது.

அம்ருத் வாய் திறந்து பதில் சொல்லவில்லை. அவன் மௌனமே ஒப்புதல் வாக்கு மூலம் அளித்துவிட்டது. அவன் தன் உதடுகளை பிஜூரியின்மீது பதித்தான். எங்கு பதித்தான்! அவனுக்கே விளங்கவில்லை! அவன் உதடுகளை அகற்றிய பொழுது 'ச்ச' என்னும் ஒலி உரக்கவே எழுந்தது. வேண்டுமென்றே அவன் எழுப்பிய ஒலி அது!

அம்ருத்தின் முத்தங்கள் மௌனமானவை. முதலிரவேகூட அவன் எத்தனை அடக்கத்தைக் கடைப்பிடித்திருந்தான்! அதைக் கண்டு பிஜூரியே வியந்து போனதுண்டு.

ஆனால் இன்று....?

இன்று அவன் குடித்துவிட்டு வந்திருந்தான். ஆடிப் போய் வந்திருந்தான்; தன்நிலை மறந்துபோய் வந்திருந்தான்.

மறுமுறையும் அவன் 'ச்ச்' என்னும் ஒலி எழுப்பவே, பிஜூரி குலை நடுங்கிவிட்டாள். சாராய நெடியை அவள் கட்டோடு வெறுத்தாள். 'இப்படியெல்லாம் செய்வதாயிருந்தால் நான் எழுந்து போய்விடுவேன்!' என்று கடிந்தாள்.

பதிலுக்கு அம்ருத் அவளுக்கு மற்றுமொரு 'ச்ச்' தந்தான். அவனது அழுத்தமான அரவணைப்பிலிருந்து அவள் எவ்வளவு திமிறியும் தன்னை விடுவித்துக் கொள்ள முடியவில்லை. அவளது தொண்டையிலிருந்து இலேசாக முனகல் குரல் வந்தது. அம்ருத் திருப்தியோடு நகைத்தான்!

பிஜூரி வெட்கத்தினால் மாய்ந்து மடிந்து போனாள். அடுத்த அறையில் படுத்திருக்கும் சமியா கேட்டு விட்டால்....?

பிஜூரி கட்டிலைவிட்டு எழுந்திருக்கலானாள்.

'தடாக்!'

அம்ருத் அவளைப் பிடித்துத் தள்ளினான். ''ஐயோ!'' என்று கூவிய பிஜூரி சுவரில் போய் மோதிக் கொண்டாள். அவளுக்குக் கண்ணீர் மாலை மாலையாக வரலாயிற்று. புடவைத் தலைப்பை வாயில் திணித்துக் கொண்டு விட்டாள், உயிர் போனாலும் தன் ஓலக் குரல் எழக் கூடாது என்ற தீர்மானத்துடன். அம்ருத் கட்டிலிலிருந்து இறங்கினான். தலைக் கேசத்தைப் பற்றி பிஜூரியைத் தூக்கி நிறுத்தியவன் வயிற்றின் மென் சதையில் ஓங்கி ஒரு குத்து விட்டான்!

''உக்!''

பிஜூரியினால் அதற்கு மேல் தாங்க முடியவில்லை. என்ன ஏது என்று புரிந்து கொள்ளாமலே, ''லல்லன்! ஓ, லல்லன்!'' என்று குரல் எழுப்பி விட்டாள்.

இருள்....

இ....ரு....ள்....

''உம்.... ஹா....!''

வலி தாளாமல் பிஜூரி எழுப்பிய ஓலக் குரலிலே சுவருக்கு அப்பால் இருந்த குழந்தை துணுக்குற்று அழுதது. யாரோ சட்டென்று அதன் வாயை மூடி விட்டார்கள். ஆனால் அவள் அழுது கொண்டிருந்தாள்; உள்ளுக்குள்ளேயே புலம்பிக் கொண்டிருந்தாள்.

அப்படியானால் அடுத்த அறையில் சமியாவும் லல்லனும் விழித்துக் கொண்டுதான் இருக்கிறார்களோ?

அம்ருத் காட்டானைப் போல் இருட்டில் மறைந்து நின்று கொண்டிருந்தான். ஒருவேளை லல்லன் வரலாம், கதவை இடிக்கலாம், திறக்க வைக்கலாம் — அம்ருத் நடுநடுங்கிப் போனான்.

ஆனால் யாரும் வரவில்லை. சிறுகச் சிறுக விசும்பல் அதிகமாயிற்று. ஆம், பிஜூரிதான் விசித்தாள். விவேக உணர்வு கட்டவிழ்ந்து விட்டது. எனவே, விசிப்பின் ஒலி வர வரக் கூடியது. வெட்கம், மானத்தை விட்டு பிஜூரி விசித்து விசித்து உடல் குலுங்க அழலானாள். சந்தடியற்ற அந்த இரவில், இந்த விசிப்பொலி கேட்டு எத்தனை பேர் விழித்துக் கொண்டிருப்பார்களோ, யார் கண்டார்கள்?

அங்கே சமியாவும் குழந்தையின் வாயிலிருந்து பொத்திய கையை எடுத்துவிட்டாள். அதன் அழுகை சூடு பிடித்துவிடவே, 'ஊஆ, ஊஆ' என்று அழத் தொடங்கியது. சிறிது நேரத்துக்கெல்லாம் அழுகைக் குரல் குறையத் தொடங்கியது. லல்லன் வெடுக்கென்று கிள்ளி முடுக்கி விட்டான். மீண்டும் அதன் அழுகை வலுத்தது. 'ஊஆ..... ஊஆ....'

லல்லன் கரகரத்த குரலில், ''அழவிடு, குழந்தையை நன்றாக அழவிடு, பலமாக அழவிடு! அண்ணியின் அழுகையை யாரும் கேட்டு விடக் கூடாது. குழந்தையின் அழுகையில் அண்ணியின் அழுகை அடங்கிப் போய்விட வேண்டும், தெரிந்ததா? குழந்தையை உரக்க, இன்னும் உரக்க அழவிடு!'' என்று சமியாவிடம் கூறினான்.

அடுத்த கிள்ளு. ''ஊஆஆ.... ஊஆஆஆ''

மறு நாள் அம்ருத் முதல் நாள் செய்கைக்கு வெட்கம், மானம் பார்க்கவில்லை. லல்லனோடு காலை உணவை முடித்துக் கொண்டு தினமும் போல அச்சகத்துக்குப் புறப்பட்டான்.

''கடாக்!''

''டண், கடாக் கடாக்!''

அம்ருத்துக்கு ஒரே நினைவு. அதைச் சுற்றிச் சுற்றியே அவன் மனம் ஓடியது. டிரெடிலைப் போல். கட்டையிலே போகிற இந்த பிஜூரி மலடி. தோல்தான் வெப்பே தவிர வேறு ஒன்றும் இல்லை. ஓராண்டு ஓடி விட்டது. இந்தச் சனியன் பிடித்த பெண்! வெறும் மரமாக நிற்கிறாளே! உண்மையிலே மலடு இந்த பிஜூரி. ஆனால் ஜனங்கள் பேசிக் கொள்ளுகிறது, 'அம்ருத் கையாலாகாதவன்; ஆண் மலடு! தங்கமான பெண்ணின் வாழ்க்கையைக் கெடுத்து விட்டான் ஐயா!' என்று! இந்தத் தங்கப் பதுமை அம்ருத்தின் வாழ்க்கையைக் கெடுக்கவில்லையோ? யார் கேட்பது இவர்களை?

இந்தச் சிந்தனையை மறக்க....

''சாராயம்! ஏ, சாராயமே! அவள் தங்கப் பதுமை! நீ இரத்தினப் பதுமை! உன்னைக் கண்டு பிடித்தானே, அவன் நீடூழி வாழ்க! கொண்டு வா ஐயா, இன்னும் கொண்டுவா!''

ஆறு மாதங்கள் கழித்துப் பொன்னொளி படைத்த பிஜூரி மேனி மினுமினுக்க, நாணம் அதை மெருகிட, உள்ளத்து மகிழ்ச்சி உதடுகளில் தெறிய அருகில் வந்து அன்பு

தவழும் குரலில் அம்ருத்திடம் கூறினாள்: 'பிஜுரி இனி தனி மரம் இல்லை. அவள் வயிற்றில் அவன் வமிசத்து விதை வளர்கிறது!' என்று. அம்ருத்தின் செவிகளில் அந்தச் செய்தி அமிர்தமாக விழவில்லை. அவனுக்கு மகிழ்ச்சியே ஏற்படவில்லை; துளிக்கூட ஏற்படவில்லை. அவன் பீடியைப் பற்ற வைத்துக் கொண்டான். எரியும் நெருப்புக் குச்சியின் சுடரைக் கால் செருப்பினடியில் அழுத்தி அணைத்தான். பிறகு பிஜுரியின் முகத்துக்கெதிரே புகையை உமிழ்ந்தான். அவள் மூச்சுத் திணறும் நேரத்திலே கரகரத்த குரலில் கேட்டான்: ''சொல்லு! இந்த வமிச விதை யாருடையது?''

பிஜுரி இக்பிரமை பிடித்தவள் போலானாள். ஓரடி பின் நகர்ந்து தன் புடவைத் தலைப்பை இழுத்துப் போர்த்திக் கொண்டாள். அன்றிரவு அவன் செய்த அட்டகாசம் அவளுக்கு அப்படியே பசுமையாக நினைவிருந்தது !.... அவள் கை அவளையறியாமலே வயிற்றண்டை போயிற்று. அன்று அம்ருத் குத்திய குத்து நினைவுக்கு வந்தது. அன்று போலவே இன்றும் அவன் ஒரு குத்து விட்டால்....? அன்று வெறும் வயிறு.... இன்று வளரும் வயிறு! வளரும் பயிருக்கே மோசம் வந்து விடுமே !

என்ன செய்வது?

ஓடினாள் பிஜுரி. என்ன ஓட்டம் ! தரையில் கால் பாவவேயில்லை. எங்கே தடுமாறிக் கீழே விழுந்து விடுவாளோ என்று நினைக்கும்படியாக ஓடினாள் ! அவளுக்குப் பின்னாலேயே அம்ருத்தும் தடதட வென்று பாய்ந்து ஓடி வருவதாக ஒரு பிரமை ! 'இதோ பிடித்து விடப் போகிறான், சேலைத் தலைப்பை! அப்புறம் ஒரே தள்ளலில் தெருவில் தள்ளிவிடப் போகிறான்!' அவள் மனம் ஆணையிட்டது : 'ஓடு, ஓடு!' என்று! கால்கள் செயலாற்றின.

''லல்லன்.... லல்லன்!'' அவள் உரக்கக் குரல் கொடுத்தாள்.

வேறு யாரைக் கூப்பிடுவாள் அவள்?... மைத்துனனைத் தவிர அவளுக்கு உதவ அங்கே வேறு யார் இருந்தார்கள்?

ஆனால், அந்தப் பக்கத்திலேயே லல்லனைக் காணோம். எங்கே போய்த் தொலைந்தானோ, வேலை பார்த்து! யார் கண்டார்கள்? பிஜுரி ஓடிப் பக்கத்து வீட்டுக்குள் புகுந்து கொண்டாள். படாரென்று கதவை அடித்துச் சாத்திக் கொண்டாள். அவள் உடல் வெட வெட வென்று வாழை இலையாக ஆடிக் கொண்டிருந்தது.

இங்கோ...? அம்ருத் முன்னால் எப்படி உட்கார்ந்திருந்தானோ, அப்படியேதான் இப்பொழுதும் உட்கார்ந்திருந்தான். அவனது இடது கை, பீடி பிடித்திருந்த கை மட்டும் அவ்வப்போது அசைந்து கொண்டிருந்தது. அந்த அசைவுக்கு ஏற்ப உதடுகளில் பீடியின் சிவப்பு மூனை ஒளிரும். எண்ணம் என்னும் கருநாகம் 'பூபூ' என்று கரும் புகையைக் கக்கும். 'மிகவும் மோசமான பெண்! இந்தப் பெண்களையே நம்பக் கூடாது. தன் ஆசைக் காதலனை எப்படி அன்போடு கூப்பிட்டுக் கொண்டு ஓடினாள்! 'லல்லன், ஓ, லல்லன்!' — நான் என்ன, குழந்தையா? எல்லாம் தெரியும் எனக்கு. எப்பொப்போ எங்கெங்கே இவள் இந்த லல்லனைக் கண்டு பேசுவாளோ, யார் கண்டது? குலுக்கி மினுக்கிக் கொண்டு சொல்ல வந்தாளாம், இப்பொழுது நான் சூலுற்றவள் என்று ! அடி போடி, முண்டம்! அவனிடம் போய்ச் சொல்லு, எவன் சூலை ஏற்றிருக்கிறாயோ? — ஆமாம், அப்படியேதானே செய்தாள், இப்பொழுது யாரைக் கூப்பிட்டுக் கொண்டு ஓடினாள்? 'லல்லன்.... ஓ, லல்லன்' என்று கூப்பிட்டது யாரை?

அம்ருத் ஆதாரபூர்வமான காரணத்தைத் தேடவில்லை; முயலவும் இல்லை. அவன் மனத்தில் ஒரு குரல்: இல்லை, குரளி, 'கருவில் வளருவது உன்னுடையது அல்ல' என்று. என்னுடையது இல்லையென்றால் வேறு யாருடையது? லல்லனுடையதுதானே ? அவனைத் தவிர வேறு யார் இருக்க முடியும்? இவ்வளவு சுலபமாக இவளுக்கு வேறு யார் கிடைப்பான் ? சாஸ்திரங்கள் பொய் ஒன்றும் எழுதவில்லை.



'அழகு மனைவி பகைதான்'. அப்பப்பா! என்ன மட்டமான குணம் !

ஏ, லல்லன்! நீயும் பெரிய கைகாரனடா! உனக்காக நான் என்னவெல்லாம் செய்யவில்லை? உன்னிடம் உயிரையே வைத்திருந்தேனே ! நீயாடா இப்படி..... என் மனசு நீதான் என்று அடித்துச் சொல்லுகிறதடா!

நீதாண்டா அது....

ஊரிலே பேச்சு சாதாரணமாக எழுந்துவிடவில்லை. எத்தனையோ பேர் எனக்குச் சொன்னாங்க ! லல்லன் வீட்டுப் பாண்டத்தையே ஓட்டையாக்குகிறான்டா என்று! நான்தான் நம்பாமல் கண்ணை மூடிக் கொண்டிருந்தேன்.

எத்தனை எத்தனையோ விஷயங்கள் நினைவு வந்தன, அம்ருத்துக்கு. பிஜுரி அவன் வீட்டுக்கு வந்தாளே, அன்று எவ்வளவு மகிழ்ச்சியாக இருந்தான் லல்லன்!.... நான் பேசாமல் உட்கார்ந்திருந்தேன். அவன் என் உருண்டையாகக் குதித்தான்! 'எங்க அண்ணி, எங்க அண்ணி!' என்று வாய்க்கு வாய் புகழ்ந்து தள்ளினானே! — லல்லனைகூட முன்னாடி என்னைப் பற்றி என்ன கருத்துக் கொண்டிருந்தான் ! திருமணம் புரிந்து கொள்ளத் தகுதியற்றவன் என்று அவன் எண்ணவில்லையா ? எண்ணினான், சொன்னான்! 'எனக்கும் அது உண்மையாகத்தான் படுது' என்று அவன் சமியாவிடம் சொல்லிக்

கொண்டிருந்ததை நான் இந்தக் காதுகளாலேயேதானே கேட்டேன்! என்றைக்குப் பிஜுரி இந்த வீட்டுக்கு வந்தாளோ, அன்றைக்கே ஒரு கண் வைத்திருப்பான்! இந்த பிஜுரியும் என்ன சாமான்யமா? அவனிடம் எப்படிச் சிரிக்கச் சிரிக்கப் பேசிக் கொண்டிருந்தாள்!

பிஜுரிக்கும் வல்லனுக்கும் ஒரு முடிச்சுப் போட்டு அதை ஏற்கும் வேளையிலே அம்ருத் தன்னை அறியாமலே தனது கையாலாகாத் தனத்தையும் ஏற்றுக் கொண்டிருந்தான். தனது இந்தத் தவறு அவனுக்குப் பெரிதாகப்படவில்லை.

இந்தச் செய்தி அவனுக்குச் சரியான தேள் கொட்டு! எப்படி விர்ரென்று விஷமேறி விட்டது! அவனுக்கு இதையொட்டி முதல் நாள் மாலை நினைவு வந்தது. அவன் எங்கெல்லாமோ சுற்றிவிட்டு வந்த கவடு தெரியாமல் வீட்டுக்கு வந்திருந்தான். கண்ணுக்கெதிரே பிஜுரியையும் வல்லனையும் கண்டும் விட்டான். சமியா அப்பொழுது அங்கே இல்லை. வல்லன் சிரித்துக் கொண்டிருந்தான். பிஜுரி சிரித்துக் கொண்டிருந்தாள். வல்லன் 'அண்ணி, அண்ணி' என்று அடிக்கொரு தரம் கூப்பிட்டுச் சீண்டிக் கொண்டிருந்தான்.

அந்த மரமண்டை பிஜுரியும்...சாமான்யப்பட்டவளா?

இன்றைக்கு என்னடாவென்றால், என் னேறிக்கும் காட்டிலும் எல்லையே மீறிவிட்டது.

எப்படி மினுக்கிக் குலுக்கிக் கொண்டு வந்தாள், 'இதைக் கேட்டீங்களா? இனி நான் மலடி இல்லை. என் வயிற்றிலும்!' — சீ, நாயே!

எழுந்து அம்ருத் வெளியே வந்தான். அவன் கால்கள் அவனை வழக்கமான கடைக்கு இழுத்துச் சென்றன. போய் ஒரு மொந்தை போட்டு வந்தான். எல்லை மீறிப் போடவில்லை. மூளை விறுவிறுவென்றிருக்க எவ்வளவு தேவையோ, அவ்வளவு! கடையிலிருந்து அவன் புறப்பட்ட பொழுது மணி ஒன்பதே முக்கால் ஆகியிருந்தது. சரியாகப் பத்து மணிக்குப் போய்விடக் கூடிய தூரத்தில்தான் அச்சகம் இருந்தது. அவன் டிரெடிலையும் அதன் பொக்கைவாய் ஒலியையும் நினைத்துப் பார்த்தவண்ணமே நடையை எட்டிப் போட்டுக் கொண்டிருந்தான்.

மெஷின் அறையில் வல்லன் முன்னதாகவே தயாராயிருந்தான். அவன் டிரெடிலுக்கு எண்ணெய் போட்டுக் கொண்டிருந்தான். இங்க் கண்டெய்னரில் அச்சு மசியைப் போடுவதற்காக அவன் மேலே ஏறினான். அவன் ஒரு கால் பலகை மீது இருந்தது. மற்றொரு கால் 'ஃப்ளைவீல்' மீதிருந்தது. அம்ருத் மனத்துள் வேடிக்கையாகக் கூறிக் கொண்டான்: 'இப்பொழுது நான் 'ஃப்ளைவீலை'ச் சுற்றினால் தொபுகடீர் என்று விழுந்துவிடுவாயடா தம்பி!'

வல்லன் காலையிலேயே எங்கோ வெளியே போயிருந்தான். அவன் அப்படியே வெளியிலிருந்தவண்ணமே அச்சகத்துக்கு வந்திருந்தால், காலையில் நடந்த சம்பவம் பற்றி அவனுக்கு எதுவுமே தெரிந்திருக்காது. தெரிந்திருந்தாலும் வல்லன் ரொம்ப அழுத்தமானவன்; ஆழமானவன். அகத்தில் உள்ளதை முகத்தில் தெரியும்படியாக அவன் காட்டிக் கொள்ளவே மாட்டான்!

குறைச்சலாகக் குடித்ததாக எண்ணினாலும் அவன் அப்போதைக்குப் போட்டது அதிகம்தான். விறுவிறுப்பு மூளையில் வெகுவாகத்தான் ஏறியிருந்தது. டிரெடில் மெஷின் சில சமயம் சமீபத்தில் தோற்றம் அளிக்கும்; சில சமயம் தொலைவில் காட்சி தரும். அவன் தலையை ஒரு முறை குலுக்கி விட்டுக் கொண்டான். அச்சகக் கட்டடமே தட்டாமாலை சுற்றினாற்போல் இருந்தது.

தன்னைச் சுதாரித்துக் கொண்டு அம்ருத் பலகை மீது ஏறி அமர்ந்து முறுவலித்தான். ''வல்லன்! உன் பலம் கொண்ட மட்டும் சுழற்று. பார்ப்போம், ஒரு மணி நேரத்துக்குள் எத்தனை காகிதங்கள் அச்சடித்து இறங்குகின்றன என்று'' என்றான்.

டன்ன், கடாக்!

டிரெடில் இயங்கலாயிற்று.

'ஃப்ளைவீல்' சுழன்று கொண்டிருந்தது. வேகம், வேகம், வேகம்! என்ன வேகம்! அடேயப்பா! 'ஃப்ளைவீல்' பிடுங்கிக் கொண்டு எப்படி அந்தரத்துக்கு வந்தது? இடதுபுறமாக எழும்பி அது தலைக்கு மேல் அல்லவா சுழன்று கொண்டிருக்கிறது! மின்சார விசிறியைப்போல 'ஃப்ளைவீல்' சுற்றுகிறதே—விர்விர்!

அம்ருத் தலையை மீண்டும் உதறிக் கொண்டான். ஃப்ளைவீலும் இடதுபுறம் சென்று இருக்க வேண்டிய இடத்தில் ஒட்டிக் கொண்டது!

'ஆகா! ஓகோ! சிவந்த மேனிச் சாராயம்!

இந்த ரோலர்கள் குறுக்கும் நெடுக்குமாக எப்படி ஓடுகின்றன! மசிப் பிளேட்டில் புரண்டு எழுந்தபின் அவை பூமிப் பக்கம் திரும்பியே பார்க்கக் காணோமே! நேரே அம்ருத்தின் வாய்க்குள் அல்லவா புகுந்துவிடும் போலிருக்கின்றன! உருண்டு உருண்டு ஓடும் வழு வழு மழுமழுவென்று ஒளிவிடும் ரோலர்கள்! அம்ருத் தலையைப் பின்னுக்கு இழுத்துக் கொண்டான். ரோலர்கள் முகத்தில் கரியைப் பூசாமல் இருக்க வேண்டுமே!

சே! சாராயத்தின் வேலைதான் இது! போ, போய்த் தொலை!

ரோலர்கள் தங்கள் இடத்தில் பொருந்திக் கொண்டன.

மெஷினின் வாய் திறக்கிறது. டன்ன்... மூடிக் கொள்ளுகிறது — கடாக்!

ஒவ்வொரு காகிதமும் உள்ளே போகிறது. அச்சாவதற்கு! அச்சாகி ஒவ்வொன்றாக வெளியேயும் வருகிறது.

கடாக் — வல்லனின் கை ஒடிய!

கடாக் — வல்லனின் விரல் ஒடிய!

இந்த ஒலிக்கு ஏதோ விந்தையான மாய சக்தி இருக்கிறது! மாயமா? சாராயமா? சாராயமா, மாயமா....?

வல்லனின் கை உள்ளே போகிறது...எந்தக் கை... பிஜுரியின் கரத்தைப் பற்றும் கை!... இயந்திரத்தின் வாய் மூடுகிறது. கை வெளியே வருகிறது. வாய் திறக்கிறது. கை உள்ளே போகிறது! வாய் மூடும்பொழுது கை உள்ளேயே இருந்து விட்டால்....?

சீச்சீ! என்ன கெட்ட எண்ணம்? இதுஉள்ளே போயிருக்கும் சாராயத்தின் வேலையோ?

# இன்னுமொரு குழந்தையைப் பெறுவதற்குமுன் சற்று

# யோசியுங்கள்



முதலில் இந்தக்
குழந்தையை நன்கு
வளர்க்க வேண்டாமா?

சத்துமிக்க பால், ஊட்டம் தரும் உணவு, நல்ல உடை, விளையாட பொம்மைகள், புத்தகங்கள்... இவையனைத்தும் உங்கள் குழந்தைக்குக் கிடைக்க வேண்டும். அதுதானே உங்கள் ஆசை! கஷ்டமோ, நஷ்டமோ இவையனைத்தையும் உங்கள் குழந்தைக்கு அளிக்கத்தான் போகிறீர்கள். ஆனால், இன்னொரு குழந்தை உடனே பிறந்தால் இது முடியுமா? அடுத்த குழந்தை உடனே பிறப்பதைத் தவிர்க்கத்தானே விரும்புவீர்கள்!

நீங்கள் மட்டுமல்ல; உலகெங்கிலும் தம்பதிகள் இவ்விதம்தான் கருதுகிறார்கள். வளமுடன் வளர்க்க வசதிகள் பெருகும் வரை, அவர்கள் இன்னொரு குழந்தையைப் பெறுவதில்லை. நீங்களும் 'நிரோத்' உபயோகித்து குழந்தை பெறுவதைத் தள்ளிப்போடலாம். அனைவரும் விரும்பி ஏற்கும் ரப்பர் கருத்தடைச் சாதனம் நிரோத்: இது ஆண்களுக்கானது. நல்முறை நல்முறையாக உபயோகத்தில் இருந்துவரும் சிறந்த, எளிய, பாதுகாப்பான கருத்தடைச் சாதனம் நிரோத். நீங்களும் நிரோத் உபயோகியுங்கள்.

நிரோத் எங்கும் கிடைக்கிறது. அரசாங்க ஆதரவு விலை 15 பைசாவுக்கு 3

இன்னொரு குழந்தையை வளர்க்க வசதி பெறும் வரை




# நிரோத் உபயோகியுங்கள்



லட்சக்கணக்கான பேர் விரும்பி ஏற்கும் எளிய, பாதுகாப்பான கருத்தடைச் சாதனம் நிரோத்.

முடியாது, முடியாது. என்றால் முடியாது. நான் அப்படிச் செய்யமாட்டேன்; மாட்டேன், மாட்டவே மாட்டேன்!

வாய் திறந்தது. கை உள்ளே.... வாய் மூடியது.... கை உள்ளே!.....

வல்லன் வீறிட்டான். டிரெடில் படபடத்தது. முனகிக் கொண்டே அதன் வாய் திறந்தது. ரத்தம் தோய்ந்த வாய்! பல இடங்களிலும் சதைத் துண்டங்கள் ஒட்டியிருந்தன. வல்லனின் உள்ளங்கை வரையில் காணோம்! மெஷினின் வாய் அதை மென்று தின்று விட்டது! ஐந்து விரல்களின் எலும்புகளும் ஒடிந்து சதைக்கு வெளியே வந்து விட்டன. கைக்குப் பதில் இப்பொழுது வெறும் மாமிசத் துண்டம் மட்டுமே இருந்தது.

ஹாஹா! இனி பிடிப்பாயா, பிஜுரியின் கையை! அடே, வல்லன்! எப்படி இருக்கிறது இப்பொழுது!

சேச்சே! என்ன தீய எண்ணம் இந்தச் சாராயத்துக்கு!

அம்ருத் குதித்தான்!

மூர்ச்சையற்றுக் கிடந்த வல்லனைத் தூக்கி அச்சகத் தொழிலாளிகள் [மெஷின் அறையிலிருந்து வெளியே கொண்டுவந்து கிடத்தினர். அம்ருத் அழலானான், குழந்தையைப் போல! வல்லனைப் போய்க் கட்டிக்கொண்டான். ஐயோ! என்ன ஆயிற்று! ஐயோ, என் தம்பி! ஐந்து விரல்களும் போய்விட்டனவே! கையும் போய் விட்டதே! இந்த நாசகார மெஷின் மென்று விழுங்கி விட்டதே! இனி என்ன செய்வாய்...? என் வல்லன் இனி என்ன செய்வான்? வல்லன்! ஏ, வல்லன்! உன் விதி இப்படியா போக வேண்டும்? என் விதி இப்படியா ஆக வேண்டும்?

அம்ருத் அழுது கொண்டிருந்தான். மெய்யாகவேதான் அழுது கொண்டிருந்தான். உண்மையில் அவனுக்கு ஏற்பட்ட வருத்தம் சொல்லி முடியாது. அப்படியும் அவனுக்கு ஒரு விஷயம் மட்டும் நினைவு இருந்து கொண்டே இருந்தது. அழும் பொழுதும், விசிக்கும் பொழுதும், 'வல்லனின் கையை நான்தான் துண்டித்தேன், கூடப் பிறந்த சகோதரனை நான்தான் கெடுத்தேன்!' என்று எங்கே தன்னையும் மீறிச் சொல்லி விடுவோமோ!' என்ற அச்சம் அவனை ஆட்டிப் படைத்தது.

அச்சான காகிதத்தை எடுப்பதற்காக வல்லன் மிஷினின் திறந்த வாயில் கைவிட்டதும் அம்ருத் சட்டென்று கையை அப்படியே அழுத்தி விட்டான். கதிகலங்கி விட்டான் வல்லன்! சொல்லப் போனால் கூச்சலிடக் கூட மறந்து போனான். அவன் கூச்சலிட்ட பொழுது, நாம் கூச்சலிட்டோம் என்பதுகூட அவனுக்குத் தெரியவில்லை. வலி — பயம் காரணமாக அப்படியே மூர்ச்சையாகிவிட்டான் அவன்!

உடனே மாட்டு வண்டியில் தூக்கிப் போட்டுக் கொண்டு வல்லனை ஊர் ஆஸ்பத்திரிக்கு எடுத்துச் சென்றார்கள். அவனோடு போக வேண்டும் என்று எத்தனையோ எண்ணியும் அம்ருத்தினால் அவனோடு போக முடியவில்லை. என்றால் அவன் படும் துன்பத்தைப் பார்க்க முடியாது. அவன் துன்பத்தைக் காண எனக்குப் பொறுக்காது என்று சொல்லி விட்டான். போகாததற்கு ஒரு சாக்கு!

அந்தி நேரம் ஆக ஆக அம்ருத்தின் மனத்தில் கள்ளம் புகுந்து கொண்டது. கணத்துக்குக் கணம் அவன் மனத்தில் ஏதோ ஒன்று கொட்டிக் கொண்டே இருந்தது குளவியாக. 'எத்தனை மட்டரகமான, சிறுபிள்ளைத்தனமான காரியத்தைச் செய்துவிட்டேன் நான்!'

பிஜுரி நடத்தை கெட்டவள் என்று நிரூபிக்கச் சான்று எதுவும் கிடையாது. இருந்தாலும்... இருந்தாலும்..., ஐயோ! வல்லனின் கை போய்விட்டதே! இனி வாழ்நாள் முழுவதும் அவன் கைநொண்டிதானே! அவன் வாழ்க்கையே வீணாகி விட்டது — என் காரணமாக. என் முட்டாள்தனத்தின் காரணமாக. பிஜுரியின் முகத்தை நான் இனி எதிரிட்டு நோக்க முடியுமா? எனக்குத் தெரியும், பிஜுரியை. அவள் வாய் திறந்து ஒன்றும் கூற மாட்டாள். ஆனால் விழிகளாலேயே சுட்டெரித்து விடுவாள்! வாட்டி எடுத்து அவமானப்படுத்தி விடுவாள்., பிஜுரி படு சூடிகை. உடனே புரிந்து கொண்டு விடுவாள். வல்லனின் கை இப்படிச் சுலபமாக மெஷினுக்குள்ளே போய் விடாது. வேண்டுமென்றே செய்த விஷமத்தினால்தான் இந்தக் கதி நேர்ந்தது என்று கண்டு கொண்டு விடுவாள். இப்படி ஏன் நடந்தது? ஓர் அர்த்தமற்ற ஆதாரமற்ற ஐயப்பாட்டின் காரணமாகத் தானே இந்தக் கதி ஏற்பட்டது?

வல்லனுக்கு உணர்வு திரும்பியபின்.....?

அவனும் எல்லாவற்றையும் புரிந்து கொண்டு விடுவான். அவன் புரிந்து கொள்ளவில்லை என்று வைத்துக் கொண்டாலும் சரியா புரிந்து கொண்டு விடுவான். இந்தப் பெண்களின் கண்கள் எதை எதையெல்லாமோ ஊடுருவிக் காணும் ஆற்றல் வாய்ந்தவை. சரியாகவுமே புரிந்து கொள்ளவில்லை என்று வைத்துக் கொண்டாலும்,

### அருமை நண்பர்கள்!



பாலும் நீரும் இணைபிரியா நண்பர்கள். அதனால் தான் பாலைக் காய்ச்சும்போது நன்றாய்க் கண்டு நீர் வற்றும் நிலையை அடைந்ததும் தன் உயிர் நண்பனை விட்டுப் பிரிய வேண்டி இருக்கிறதே என்னும் துக்கம் தாங்காமல் பால் குபீரென்று பொங்குகிறது. பொங்கி வழியும் பாலை அடக்க வேண்டும் என்றால் கொஞ்சம் தண்ணீரை அதன்மீது தெளித்தால் போதும். உடனே அடங்கி விடும். நண்பனாகிய தண்ணீரின் பிரிவாற்றாமையின் காரணமாகப் பொங்கிய பால் தன் ஆப்த நண்பனை மீண்டும் கண்டதும் துக்கம் தீர்ந்து அடங்கி விடுகிறது.

கூறியவர்: வாரியார் - கேட்டவர்: விஜயம்

பிஜுரி கட்டாயம் புரிந்து கொண்டுவிடுவாள். பிஜுரி முரண்டு விட்டால்...? அவளுக்கு அறிவு பிறந்து விட்டால்....? அவள் ஊரைக் கூட்டி ஒன்று விடாமல் பறைசாற்றி விடுவாள்! ஊஹூம், பிஜுரி அப்படியெல்லாம் செய்யக் கூடியவள் அல்ல. ஆனால் புத்தி பிறந்து விட்டால் எதுவுமே தெரிவதில்லையே! அதற்கு நானே அத்தாட்சி! என் அறிவு பிறந்ததால்தானே....? லல்லனின் கையை விழுங்கி விட்டேன்! இப்பொழுது வருத்தப்படுகிறேன்; தலையைச் சொறிந்து கொள்கிறேன், செய்வதையெல்லாம் செய்து விட்டு! அதே போல் பிஜுரியும் புத்தி பிறந்து ஒன்றுக்கொன்று கூறினால்....? என்னைப் போலவே வருந்துவாள்; தலையைப் பிய்த்துக் கொள்ளுவாள்! ஒரு தடவை ஏதோ நடந்தது நடந்து விட்டது! இனி அப்படியெல்லாம் நடக்காது. பிஜுரி அப்படியெல்லாம் செய்ய மாட்டாள். ஆனால் அறிவு பிறந்து விட்டால்... அறிவு பிறந்து விட்டால்......?

அம்ருத் தலையை நிமிர்த்தினான். டிரெடில் அவன் கண்களில் பட்டது. அச்சகச் சிப்பந்தி ஒருவன் அதைத் தேய்த்துத் துடைத்துச் சுத்தப்படுத்திக் கொண்டிருந்தான். இரத்தம், லல்லனின் ரத்தம்! மாமிசத் துண்டங்கள் — பணியாளின் கைகள் நடுங்கி நடுங்கிப் போயின.

அம்ருத் முடிவுக்கு வந்து விட்டான், வீட்டுக்குப் போவதில்லை என்று! பிஜுரியின் முகத்தில் விழிப்பதில்லை என்று! எத்தனை அழகி பிஜுரி! என்ன சிவப்பு! என்ன மேனி மினுமினுப்பு! அவனிடம் உள்ள ஆசை போகுமா? போகுமோ, போகாதோ, போக்கியாக வேண்டும். அதற்கெல்லாம் இடம் தரக் கூடாது.

கடைசி முறையாக ஒரு தடவை பிஜுரியைப் போய்ப் பார்க்கட்டுமா?

'அம்ருத்! உன்னை மழுங்கிவிடவில்லையே?'

கடைசியாக அந்தத் தங்கப் பதுமையிடம் ஒரு வார்த்தை பேசிவிட்டு....

உன் மனம் ஏன்டா இப்படிப் புழுவாக நெளிகிறது, அம்ருத்?

ஒரே ஒரு தடவை, ஒரே ஒரு தடவை மட்டும் அவளைப் பார்த்து விடுகிறேன்!

அடச் சண்டாளப்பாவி! நாயினும் கேடான பிறவியாகிவிட்டியேடா! — நீ இங்கிருந்து போய் விடுவது என்று தீர்மானமாக இருந்தால், அவளைப் போய்ப் பார்த்து என்னடா பயன்? போடா! இப்பொழுதே இந்த ஊரை விட்டு ஓடுடா! உன் மனம் பலவீனமானது. ஊரை விடலேன்னு உன் தங்கத்தினிடம் போவாய். உன் தங்கத்திடம் போயிட்டே, அப்புறம் இந்த ஊரை விட்டுப் போக மாட்டே! வாழ்நாள் முழுதும் இந்தச் சிவப்புத் தோலையே சுத்திச் சுத்தி வந்துக்கிட்டிருப்பே. எல்லோரும் உன்னை விரட்டுவார்கள்! எள்ளி நகையாடுவார்கள். அவர்களுடைய அத்தனை ஏச்சுக்களையும் பேச்சுக்களையும் பொறுத்துக் கொண்டு இங்கேயே கிடப்பாயே ஒழிய ஊரை விட்டுப் போகமாட்டாய்! எடுப்பான பெண் உடலின் கவர்ச்சியிலே மயங்கினால் அப்புறம் அவ்வளவுதான். புரிந்து கொண்டாயா, சொல்றதை! ஓடு, இங்கிருந்து ஓடு, இப்பொழுதே ஓடு!

அவன் கால்கள் அந்த ஒற்றையடிப் பாதையை நோக்கி முன்னேறின, இணைந்து மேடையைத் தொட்டுக் கொண்டு வளைந்து போகிறதே, அந்த ஒற்றையடிப் பாதையைத் தான்! வானத்தைக் கருமுகில்கள் விழுங்கியிருந்தன. அந்த மேகங்களில் மின்னல் ஏதும் வெட்டவில்லை.

அம்ருத் எங்கு எங்கெல்லாம் சுற்றி அலைந்தானோ, தெரியாது! தாடி வளர்த்துக் கொண்டு, வேஷம் மாற்றிக் கொண்டு, — பொய்ப் பெயர் வைத்துக் கொண்டு! எத்தனையோ முறை பசி அவனை வாட்டி எடுத்திருக்கிறது. ஆனால் பசித்த வேளைக்குச் சோறு கிடைத்ததில்லை. சோறு கிடைத்த வேளைக்குப் பசித்ததில்லை. பெரும்பாலான நாட்கள் அவனுக்குப் பசித்ததும் இல்லை; பசிக்குச் சோறு கிடைத்ததும் இல்லை!

ஊரிலிருந்து ஓடிய மூன்றாம் நாள் அம்ருத்தின் செவிகளில் மிகத் துயரம் தரும் அந்தச் செய்தி விழுந்தது. அன்று அவன் தேநீர்க் கடை ஒன்றில் அமர்ந்து தேநீர் பருகிக் கொண்டிருந்தான். அவன் பக்கத்தில் உட்கார்ந்து பீடி குடித்துக் கொண்டிருந்த ஒரு கிராமத்தான் அவனை உறுத்துப் பார்த்துக் கேட்டான்: ''அண்ணே, இந்தச் செய்தியைப் படிச்சியா?''

வாய் திறந்து பேசினால் தன்னை இன்னான் என்று அடையாளம் கண்டு கொண்டு விடுவார்கள், அப்புறம் சிறைப் படுத்திவிடுவார்கள் என்று பயந்தானோ, என்னவோ? அம்ருத் பேசாமல் இருந்தான். தேநீர்க் கோப்பையிலிருந்து கண்களை அகற்றி அவன் அந்த நாட்டுப்புறத்தானை ஒரு கேள்விக் குறியோடு பார்த்தான். உதடுகளில் நகையைக்கூட வருவித்துக் கொள்ளவில்லை. நாட்டுப்புறத்தானின் கையில் ஒரு செய்தித்தாள் இருந்தது.

''பிஜுரி என்னும் பெயருள்ள பெண் நிம்தரானில் கழுத்தில் கல்லைக் கட்டிக் கொண்டு கிணற்றில் மூழ்கி விட்டாள். அவள் கணவனுக்கு அவளிடம் சந்தேகமாம், தன் மைத்துனனோடு அநுசிதமான தொடர்பு வைத்துக் கொண்டிருக்கிறாள் என்று! அவள் மைத்துனன் ஓர் அச்சகத்தில் வேலை செய்து வந்தான். அவன் இப்பொழுது ஆஸ்பத்திரியில் இருக்கிறான். இரண்டொரு நாட்களுக்கு முன் அச்சடிக்கும் இயந்திரத்தில் அவன் கை சிக்கிக் கொண்டுவிட்டதாம். மைத்துனன் திருமணம் ஆனவன்; ஒரு பெண் குழந்தைக்குத் தந்தையுங்கூட. பிஜுரியின் கணவனைக் காணோம். போலீஸ் அவனைத் தேடி வருகிறது.

''கழுத்தில் கல்லைக் கட்டிக் கொண்டு குதித்ததால் பிஜுரியின் சடலம் தண்ணீரில் மிதக்கவில்லை. ஆனால் நீர் நாற்றமெடுக்கத் தொடங்கியிருந்தது. கிணற்றை இறைத்துச் சுத்தப்படுத்துகிறார்கள். கிணற்றில் விழுந்து இறந்த பிஜுரி கருவுற்றிருந்தாள் என்று டாக்டர் பரிசோதனைக்குப்பின் தெரியவருகிறது......''

செய்தித் தாளைப் பிரித்து வேறு பக்கத்தைப் புரட்டி அந்த நாட்டுப்புறத்தான் வேறு செய்திகளைப் படிக்கலானான். அம்ருத்தின்

கைகள் நடுங்கிய நடுக்கத்தில் தெரிச் சிந்தி அவன் உடைகளைக் கறைப்படுத்திவிட்டன.

ஐயோ, பிஜானி! என்ன காரியம் செய்து விட்டாய் நீ! இரண்டு கொலைகள் அல்லவா என் தலையில் சுமந்து விட்டன! கருவைக் கொல்வது மறையோரைக் கொல்வதற்குச் சமமாயிற்றே! பிஜானி! ஐயோ! நீ உன் வருங்காலத்தைக் கெடுத்துக் கொண்டதோடு என்னையும் அல்லவா கெடுத்து விட்டாய்! நரகத்தில் நாம் இருவரும் புழுத்துத்தான் நெளியப் போகிறோம்!

அம்ருத்துக்கு எங்குமே அமைதி கிட்டவில்லை. ஓரான்டு ஓரிடத்திலும் நிலைகொள்ளாமல் எங்கெங்கோ அலைந்து சுற்றிக் கொண்டிருந்தான். நாடோடிக் கும்பலைப் போல் நாயாக அலைந்தான். வீட்டுக்கு வீடு வசவும் இட்டும் வாங்கிக் கட்டிக்கொண்டான். என்னென்னவோ செய்து தன் உள்ளத்து வலியை மறக்க முயன்றான். ஆனால் அவனால் தன்னை ஏமாற்றிக் கொள்ள முடியவில்லை.

''பிஜானி பாவம், கிணற்றில் மூழ்கி மரித்து விட்டாள்! அவள் ஆத்மாவுக்கு அமைதி கிட்டாது! அவள் பேயாகத் திரிவாள்! அந்தக் கிணற்றடியிலேயே சுற்றி வருவாள்!''

இந்தக் கற்பனைப் பேய் நிழலைப் போல் அம்ருத்தையே ஒட்டிக் கொண்டிருந்தது; குடைந்து எடுத்துக் கொண்டிருந்தது....

மீண்டும் மாரிக் காலம் வந்த பொழுது — அம்ருத் வேறு வழி தோன்றாமல் திரும்பி ஊருக்கே போய் விட்டால் என்ன என்று யோசித்தான். 'ஊருக்குப் போய் லல்லன் எங்கே இருக்கிறான், என்ன செய்து கொண்டிருக்கிறான் என்று கண்டுபிடிக்க வேண்டும். கை வெட்டுண்டதனால் வாழ்க்கை நடத்த எவ்வளவு சிரமப்படுகிறானோ? சமியா சௌக்கியமா? அவளுக்குப் பிறந்த பெண் குழந்தை சௌக்கியமா? அப்புறம் அதற்குத் தங்கை—தம்பி பிறப்பதற்கான அறிகுறி இருக்கிறதா?' என்றெல்லாம் அறிய வேண்டும் என்று ஆசை ஏற்பட்டது! அதைத் தொடர்ந்து....

லல்லன் தன் தலையைக் கண்டதும் தடியை எடுத்துக் கொண்டு அடிக்க ஓடிவருவானோ? இதயத்தில் கத்தியை நுழைத்து விடுவானோ? 'ஏண்டா, இங்கே திரும்பிவந்தாய்? என் கையை ஒடித்தாய், என் அண்ணியைக் கொன்றாய், அவள் வயிற்றில் வளரும் சிசுவைக் கொன்றாய். இவ்வளவும் போதாது என்று இப்பொழுது எதற்கு வந்தாய்? சொல், சொல்! ஏன் வந்தாய்?' என்று அவன் கேட்டால்.....?

சே! லல்லன் அப்படியெல்லாம் கேட்க மாட்டான். இவ்வளவு கொடு நெஞ்சம் படைத்தவன் அல்ல லல்லன். மனிதனாகப் பிறந்தவன் எவனுமே தவறு இழைப்பது சகஜம். யார்தான் தவறே இழைக்காமல் இந்த உலகத்தில் இருக்கிறார்கள்? லல்லனுக்கு இது விவரம் தெரியாததல்லவே!



'' கடந்த மூன்று வருஷமாக என்னைக் கொலை செய்யப் போவதாகத் தினம் பத்து மிரட்டல் கடிதங்களாவது வருவது வழக்கம். இன்று ஒன்றுகூட வரலை. பயமாக இருக்கு சார்! பாதுகாப்பு வேணும் சார்!''

லல்லன் அப்படியே வாயில் வந்தபடி ஏசுகிறான் என்றாலும், மார்பில் கத்தியால் குத்தி விடுகிறான் என்றாலும், அதை எப்படித் தவறு என்று கூற முடியும்? நான் செய்த பிழைக்கு அவனுக்கு இந்த உரிமை கூடவா கிடையாது?

அம்ருத் தன் செயலுக்குத் திட்டு வாங்கிக் கொள்ளாத வரையில், லல்லனின் வசவுகளைக் கேட்காத வரையில், அவன் கத்தியால் குத்த வராத வரையில் இவனுக்கும்தான் அமைதி ஏது? அம்ருத் என்ன தீயவனா? பிஜானிகூடக் கெட்டவள் அல்லவே! லல்லன் கெட்டவன் அல்ல; சமியா கெட்டவள் அல்ல. யாருமே கெட்டவர்கள் அல்ல; எல்லாருமே நல்லவர்கள். எல்லோருமே நல்லவர்களாயிருந்தும் இந்தக் காரியங்கள் எப்படி நடந்தன? எப்படி நிகழ்ந்தன? இவ்விபரீதங்கள் எல்லாம்? இப்படியெல்லாம் கெட்டவர்களிடையே நடப்பது சகஜம். நல்லவர்களான நம்மிடையே எப்படி நிகழ்ந்தது?

யோசிக்க யோசிக்கப் புரியவில்லையே! இப்படிச் செய்ய வேண்டும் என்று தீர்மானித்து யாரும் செயல்படவில்லை. எல்லாம் தானாகவே யாரும் அறியாமல் நடந்து விட்டது.

யோசித்துக் கொண்டிருந்தான் அம்ருத். அதே நேரத்தில் ஊரை நோக்கி நடையையும் கட்டிக் கொண்டிருந்தான்.

அவன் ஓசைப்படாமல் புதரண்டை வந்து நின்று கொண்டான். இரவின் இருள் அடர்த்தியாக இருந்தது. நொட்டு உரைலாம் போல.

அம்ருத் முகத்தை மேல் நோக்கித் தூக்கிக் கொண்டான். மூடிய இமைத் திரைகளில் மழைத் துளிகளைச் சேர்த்துக் கொள்ள. மனத்தைத் தகித்துக் கொண்டிருந்த சூடு இதனால் ஒருவேளை சற்றுத் தணியலாமோ?

உட்கார்ந்தவன் எழுந்து நடக்கலானான். ஊரை அடைந்து வீட்டை நெருங்கிய நேரத்தில் அம்ருத்தின் மனத்தில் ஓர் ஐயம்: 'லல்லன் இந்த வீட்டை விட்டு வேறு எங்கேயாவது போயிருப்பானோ?'

'அப்படிப் போயிருந்தால்...?'

லல்லன் அந்த வீட்டில் இருந்தாலும் இல்லாவிட்டாலும் அம்ருத் அந்த வீட்டுக்குப் போகத்தான் வேண்டும். அங்கே இருப்பவர்களைக் கொண்டு லல்லன் எங்கே இருக்கிறான், எப்படி இருக்கிறான் என்பதை அறிந்துகொள்ளத்தான் வேண்டும்.

''மோதி, மோதி!... நான்தான் அம்ருத்! ஷ்ஷ்ஷ்...!'' இருளில் அம்ருத் கசமுசத்தான். மழை நின்று போய்விட்டதால் பக்கத்து வீட்டு நாய் வெளியே வந்து விட்டது. அது குரைக்காமல் இருக்க வேண்டுமே!

அதனால்தான் அம்ருத் தன்னை அறிமுகப் படுத்திக்கொள்ள முயன்றான். ஆனால் பல நாட்கள் ஆகி விட்டதால் நாய் அவனை அடையாளம் கண்டு கொள்ளவில்லை. முதலில்

அது உறுமியது. அப்புறம் 'வள்வள்' என்று உரக்கக் குரல் எழுப்பிக் குரைத்தது.

'வெட்!' அதன் மேல் கையை ஓங்கிய வண்ணம் அம்ருத் வேகமாக லல்லனின் வீட்டை நோக்கி நடந்தான். நாய் பின் தொடர்ந்தே வந்தது: யார் நீ? வள் வள்! எதற்காக வந்திருக்கிறாய்? வள் வள்!

நாய் பாய்ந்து கடித்துக் குதறிவிடக் கூடாதே என்று பயந்தவாறு வீட்டை நெருங்கிய அம்ருத் ஒரு கணம் திகைத்து நின்றுவிட்டான், கதவை இடிக்காமல். எந்த அறையின் கதவை இடிப்பது? அம்ருத்தும் பிஜூரியும் இருந்த அறையில் இப்பொழுது லல்லனும் சமியாவும் இருப்பார்களோ? அல்லது தாங்கள் முன்பு இருந்த அறையிலேயேதான் அவர்கள் இருப்பார்களோ?

லல்லன் நாயின் குரைப்பைக் கேட்டு எழுந்து வந்து, நாய்க்குப் பக்கத்தில் தன் சகோதரன் நின்றுகொண்டிருப்பதைக் காண்பதை அம்ருத் அவ்வளவாக விரும்பவில்லை. கதவை இடித்து அந்த ஓசை கேட்டுத்தான் லல்லன் விழித்துக் கொள்ள வேண்டும், வந்து கதவைத் திறக்கவேண்டும் என்றுதான் அம்ருத் விரும்பினான்.

இப்படி எண்ணியவன் சட்டென்று ஒரு முடிவுக்கு வந்தான். சட்டென்று தான் இருந்த அறையின் வாசலுக்குச் சென்றான்.

வாசற் கதவு வெளிப்புறமாகப் பூட்டியிருந்தது.

ஒரு மின்னல் மின்னிற்று. பூட்டுத் தெரிந்தது. பூட்டைக் காட்டிவிட்டு மின்னல் மறைந்தது. வானம் இடிக்கத் தொடங்கியது.

'வள் வள்! எதற்காக வந்திருக்கிறாய்? வள், வள்!'

''சீ, நாயே! நொறுக்கிப் போட்டு விடுவேன்! என்ன நினைத்துக் கொண்டிருக்கிறாய்?'' என்று திட்டிய வண்ணம் அவன் குனிந்து கற்களைப் பொறுக்கி விட்டெறிந்தான். இரண்டொரு கற்கள் நாயின் கால்களில் பட்டன. அது வீறிட்டது. ஆனால் ஓடவில்லை.

''யார் அது?'' பின்னாலிருந்து குரல் வரவே, அம்ருத் நடுங்கி விட்டான்.

எதிரே லல்லன் நின்று கொண்டிருந்தான்.

''யார் அது?'' மறுபடியும் கேட்டவாறே அவன் நெருங்கி வந்தான்.

லல்லனைக் கண்டதும் அப்படியே ஆரத் தழுவிக் கொள்ள வேண்டும் என்று அம்ருத் எண்ணியிருந்தான். ஆனால் அவனை எதிரே கண்டதும் ஒன்றும் தோன்றாமல் ஸ்தம்பித்து நின்றுவிட்டான். எதுவுமே தோன்றாமற் போகவே, அம்ருத் குறுகுறுக்குற்றுத் தன் இரு கைகளாலும் முகத்தை மறைத்துக்கொண்டான், இருட்டில்கூட லல்லன் தன்னை நன்றாகப் பார்ப்பது போல.

மெதுவான காலோசை...

லல்லன் நெருங்கி வந்து கொண்டிருக்கிறானோ? இதுவரை லல்லன் அவனை அடையாளம் கண்டுகொள்ளவில்லையோ?

''ஏன் வாய் திறக்கவில்லை? ஊமையா, என்ன?''

லல்லன் அருகில் வந்து அவன் முகத்திலிருந்து கைகளை அகற்றினான். அம்ருத்துக்கு முதன் முதலில் அவனுடைய வெட்டுண்ட கைதான் தெரிந்தது.

''அட, அண்ணனா?'' முணு முணுத்து விட்டு லல்லன் ஓர் அடி பின்னே நகர்ந்தான்.

இருள்...

அம்ருத், 'ஆம், நான்தான்' என்று சொல்லத்தான் விரும்பினான். ஆனால் சொற்கள் தொண்டையிலேயே சிக்கிக்கொண்டன. லல்லனின் முகத்தைப் பார்ப்பதைத் தவிர அவனுக்கு வேறு ஒன்றும் தோன்றவில்லை.

'அண்ணா!' என்று கூவிக்கொண்டு லல்லன் வந்து அவனை ஏன் கட்டிக் கொள்ளவில்லை? பயப்படுகிறானா? அம்ருத்துக்கு நெஞ்சு அடித்துக்கொண்டது.

''அண்ணா! நீயா?''

அம்ருத் அவனுடைய குரலைக் கேட்டான். அது வியப்பில் எழுந்த குரல். மகிழ்ச்சியில் எழுந்த குரல் அல்ல. குரலைக் கொண்டே அவன் முடிவுக்கு வந்தான். அம்ருத் சிரிக்க நினைத்தான். ஆனால் 'வள் வள் — நீ யார்? வள் வள்!'

''மோதி, மோதி! போடா அந்தண்டை!'' என்றான் லல்லன். அம்ருத்தின் அருகில் நெருங்குவதற்குப் பதிலாக நாயின் பக்கம் சென்றான். நாய் வாலை ஆட்டியது. லல்லன் அதைத் தடவிக்கொடுத்தான். அது அந்தண்டை நகர்ந்து போய்விட்டது. லல்லன் அம்ருத்தின் பக்கம் திரும்பி, ''வா அண்ணா!'' என்றான். அவன் தன் அறைப் பக்கம் சென்றான். திறந்த கதவின் வழியே மங்கலான வெளிச்சம் வந்து கொண்டிருந்தது. அம்ருத் லல்லனுக்குப் பின்னால் சென்றான். வாசற்படியில் போய்த் தயங்கி நின்றான். பிறகு உள்ளே போனான்.

லல்லன் சமியாவை எழுப்பிக் கொண்டிருந்தான். ''அடியே, எழுந்திரு! அண்ணா வந்திருக்கிறார், அண்ணா, அமிருத் அண்ணா!'' என்றான்.

அவன் சமியாவின் பக்கம் குனிந்து கூப்பிட்டுக் கொண்டிருந்ததால், முதுகு மறைத்தது. அம்ருத் சமியாவின் முகத்தைப் பார்க்க முடியவில்லை. போர்வையின் அசைவைக் கொண்டு சமியா முகத்தை மூடியிருந்த போர்வையை அகற்றியிருக்க வேண்டும் என்று அவன் ஊகித்தான்.

'' அம்ருத் அண்ணா வந்திருக்கிறார் !'' லல்லன் மீண்டும் கூப்பிட்டான்.

இதற்குள் அம்ருத் அறை முழுவதையும் ஒரு முறை நோட்டம் விட்டு விட்டான். எந்தவித மாறுதலும் இல்லை. ஒவ்வொரு பொருளும் முன்பு எப்படி இருந்ததோ, அப்படியே இருந்தது. கை ஒடிந்து போய்விட்டாலும், லல்லன் முன் போலவே பழைய சம்பாத்தியத்துக்குச் சிறிதும் குறையாமல் சம்பாதித்துக் கொண்டிருக்க வேண்டும் என்றும் தோன்றியது. அம்ருத்துக்கு அது ஓரளவு திருப்தி அளித்தது. ஆனால் மகிழ்ச்சி உணர்வு முகத்தில் படருவதற்கு முன்னால், ''யாரு? அம்ருத் அண்ணனா?'' என்று சமியா ஏதும் உறவு முறை அறியாதவள் போலக் கேட்பது அவன் செவிகளில் விழுந்து விட்டது.

''என்ன பேசுகிறாய், சமியா? அம்ருத் அண்ணன் இல்லே, என் சொந்த அண்ணன்! அவரு வந்திருக்கிறார்!'' என்றான் லல்லன்.

''எதற்காக வந்திருக்கிறார்? சொல்லுங்க. அவரைப் போகச் சொல்லுங்க!'' — சமியா வெடுக்கென்று போர்வையை இழுத்து



# வாஸ்மால்



வாஸ்மாலே எப்பொழுதும் உபயோகியுங்கள்

அது நரை மயிரை கருமையாக்குகிறது
நீங்கள் இளமையாகத் தோற்றமளிப்பதுடன்
இளமையையும் உணர்வீர்கள்!

குழம்பு போன்ற தைலமாகவும் போமேடாகவும் எங்கும் கிடைக்கிறது
எங்கும் லக்ஷக்கணக்கான மக்களால் உபயோகிக்கப்படுகிறது

---

# ஸ்ரீ கணேஷ்ராம்ஸ் அனலிட்டிகல் லாபரெட்டரிஸ்

(இந்திய அரசினரின் விவசாய, வினியோக ஆலோசகரின் அங்கீகார சான்றிதழ் பெற்றவர்கள்
இந்தியன் ஸ்டாண்டர்ட் நிறுவன உறுப்பினர்)

"ஸ்ரீ அம்மே நாராயண நிவாஸ்"
54, தம்பு செட்டித் தெரு
சென்னை - 1




போன்: 20401/20402/20403
P. B. X. 3 லைன்கள்
தந்தி: "COCHUTNI"

## தரத்தை விரும்பும் நேயர்களுக்கு!

மிளகு, சீரகம், வெந்தயம் போன்ற சரக்குகள்; அரைத்து செய்த சாம்பார் பொடி, ரசப் பொடி, கறிப்பவுடர் (மசாலாத் தூள்) முதலியன; புண்ணாக்கு வகைகள்; கொழுப்புகள் மற்றும் கடலை எண்ணெய், நல்லெண்ணெய், தேங்காய் எண்ணெய், வெண்ணெய் நெய் போன்ற பால் பண்ணைப் பொருள்கள்; பெப்பர்மிண்ட்கள், கேக், பிஸ்கத்துகள் வகையறா; தேன்; ஸ்குவாஷ்கள் கிரஷ்கள், கார்டியல்கள் போன்ற பான வகைகள்; ஜாம் ஜெல்லி மற்றும் மார்மலேட் போன்ற பழங்களினாலான தயாரிப்புகள்; ஊறுகாய்கள்; நெல் மற்றும் தானியங்கள்; பருப்பு வகைகள்; சோடா பானங்கள்; பெருங்காயம் மற்றும் உணவுப் பொருள்களும், தின்பண்டங்களுக்கான கலர் வகைகள் முதலியவற்றையும் "அக்மார்க்" ஸ்டாண்டர்ட் மற்றும் I. S. I., F. P. O., கோட்பாடுகளுக்கு இணங்கவும், உணவு கலப்படத் தடை சட்டத்திற்கு ஏற்பவும் நவீன சாதனங்களுடன் கூடிய எமது ஆய்வுக் கூடத்தில் நிபுணர்களின் மேற்பார்வையில் பரிசோதித்து, தர அளவைகளுடன் அளிக்கிறோம்.

தங்களது விவசாய பண்டங்களின் தரத்தில் அக்கறைகொண்ட உணவுத் தயாரிப்பாளர்கள் மொத்த விற்பனையாளர்கள், சில்லரை வியாபாரிகள் அனைவருக்கும் எங்களது சேவை எப்பொழுதும் கிடைக்கும்.

கட்டண விபரங்களுக்கு எழுதவும்:

**R. N. ரமணி,** B. Sc.,
(மானேஜிங் புரொப்ரைட்டர் & டைரெக்டர்)

ஆரோக்கியத்திற்குச் சிறந்தது — பரிசோதித்த தண்ணீர்! கிணறு மற்றும் டியூப்வெல் தண்ணீரைப் பயன்படுத்த சகல வசதிகளுடன் கூடிய எமது லாபரெட்டரியில் மிதமான கட்டணத்தில் பரிசோதனை செய்து உதவுகிறோம்.

---

# கடன் வசதி பெற

நன்றாக தொடர்ந்து இயங்கும் வாணிபம், தொழில்கள், சொத்துக்கள், தோட்டங்கள், சுரங்கங்கள், பங்குகள், தியேட்டர்கள், முதலியவற்றின் மீது ஐந்து லட்சமும் அதற்கு மேலும் கடனாகப் பெறலாம்.

தயவுசெய்து கடிதப் போக்குவரத்தை ஆங்கிலத்தில் வைத்துக் கொள்ளவும்

**C. ஹர்கிஸன்தாஸ்**

பாங்கர்ஸ்

93, வாலகேஷ்வர் ரோடு, பம்பாய் - 6

முகத்தை மூடிக் கொண்டாள். போர்வைக்குள்ளிருந்த வண்ணமே, "அவர் முகத்தை நான் பார்க்கத் தேவையில்லை!" என்றாள்.

லல்லன் அதைக்கேட்டு அயர்ந்துவிட்டான்.

அம்ருத்தினால் கோபித்துக் கொள்ள முடியவில்லை. முன்பிருந்தே அவன்தான் இக்பிரமை பிடித்தவன் போலாகி யிருந்தானே!

லல்லன் சமியாவின் பக்கம் குனிந்திருந்த தன் உடம்பை நிமிர்த்திக் கொண்டான். பிறகு ஒரு புறமாக ஒதுங்கினான். அம்ருத் அப்பொழுது சமியாவின் முகத்தை மறைத்திருந்த போர்வையைத்தான் பார்க்க முடிந்தது. லல்லன் நீண்ட பெருமூச்சு விட்டான், வறட்டுச் சிரிப்போடு. "இந்தப் பெண் பிள்ளைகளே எப்பொழுதும் ஜடங்கள்தான்; மூளையே கிடையாது. காலையிலே எழுந்ததும் கவனிச்சுக்கிறேன். இப்போ ஏதாவது பேசினால் உரக்கக் கூவி ஊரையே கூட்டிவிடுவாள்!" என்றான்.

அம்ருத்தும் ஆழ்ந்த மூச்சு விட்டான். இத்தனை நேரமும் அவன் மூச்சை அடக்கிக்கொண்டிருந்தான். சமியாவின் கட்டிலுக்குக் கீழே கிடந்த பழந் துணிக் குவியலைப் பார்த்தான். அதை மெத்தையாக்கி லல்லனின் பெண்ணைத் தூங்க வைத்திருந்தார்கள். அவள் காலிலிருந்து கழுத்து வரை போர்த்தியிருந்தது. தலை மட்டும் திறந்திருந்தது. சிம்னி விளக்கின் ஒளியில் கட்டிலின் நிழல் குழந்தையின் முகத்தை நன்றாக மறைத்திருந்தது. அதனால் அம்ருத் தூங்கும் குழந்தையின் முகத்தைச் சரியாகக் கவனிக்க முடியவில்லை. குழந்தையைக் கொஞ்சம் வெளியில் வெளிச்சத்துக்குக் கொண்டு வாயேன் என்று லல்லனிடம் சொல்லக்கூட அவனுக்குத் துணிவு உண்டாகவில்லை.

கட்டிலுக்கு அடியில் அம்ருத் கூர்ந்து நோக்குவதைக் கண்ட லல்லன் இலேசாக இளநகை புரிந்தான். "கஞ்சரி இது. முன்னைக்கு இப்போ பெரியவளாகி விட்டாள். இல்லை?" என்றான்.

ஆனால் அவன் கஞ்சரியைக் கட்டிலுக்கடியிலிருந்தும் எடுக்கவில்லை. சிம்னியை எடுத்துத் தூக்கிக் காட்டிக் கீழே இருந்த நிழலை அகற்றி நன்றாகப் பார்க்கவும் விடவில்லை.

அம்ருத் எச்சிலைக் கூட்டி எப்படியோ விழுங்கினான். 'நான் வந்து எத்தனை நேரமாகிறது? வந்ததிலிருந்து வாய்திறந்து ஒரு வார்த்தை கூடப் பேசவில்லையே!' என்று எண்ணினான். எனவே கரகரத்த குரலில், "பெரியவளாகி விட்டாள்தான்!" என்றான். அதைக் கேட்டவுடனே சமியா போர்வைக்குள்ளிருந்து உறுமினாள்: "போய்விடுங்கள், குழந்தையைப் பார்க்காதீர்கள்!"

"சமியா!" பல்லைக் கடித்துக் கொண்டு லல்லன் சமியாவை நெருங்கினான். ஒருவேளை அவன் அவளைப் புடைத்திருப்பான்! ஆனால் இடையிலேயே அம்ருத் கை நீட்டி அவனைத் தடுத்துவிட்டான். ஏன், அவன் இரு கைகளையும் கெட்டியாகப் பிடித்துக் கொண்டான். ஓராண்டுக்குப் பின் ஏற்பட்ட அந்த ஸ்பரிசம்! எவ்வளவு பரிச்சயமானதாகப் பட்டதோ அதைக் காட்டிலும் அதிகப் பரிச்சயமற்றதாகவும் பட்டது. லல்லன் அண்ணனின் விழிகளைக் கூர்ந்து கவனித்தான். அதில் இரு சிம்னி விளக்குகள் முத்தொளி விட்டுக்கொண்டிருந்தன. அம்ருத் வெகு நேரம் வரை லல்லனின் கையை விடவே யில்லை. தம்பியைத் தீண்டும் வாய்ப்பே இதுவரை ஏற்படவில்லையோ என்று எண்ணும்படி இருந்தது. வெகு நேரம் கழிந்த பின்தான் 'அவனுக்குத் தான் பற்றியிருந்த கை வெட்டுண்ட கை; அரைக் கையாகிவிட்ட கை' என்பது நினைவுக்கு வந்தது. உடனேயே கையை விட்டு விட்டான் அவன். அதோடு பதறிப் போய்க் கூரையைப் பார்க்கலானான், பழைய நினைவில்.



**எல்லைத் தொல்லை இல்லை!**

உலகிலேயே பாதுகாப்பு, காவல் ஏதுமில்லாத மிக நீளமான எல்லைக் கோடு அமெரிக்காவுக்கும் கனடாவுக்கும் இடையே உள்ளது. இதன் நீளம் 3986 மைல். ஒரு போர்வீரர் கூட இதைக் காவல் காப்பது கிடையாது.

--- நியூஸ்வீக் - முத்து

"வா, அண்ணா! அடுத்த பக்கத்து அறைக்குப் போவோம். உன் அறைக்கு, அண்ணா! அங்கே கட்டில் இருக்கிறது, படுக்கை இருக்கிறது. படுத்து உறங்கு. பொழுது விடிந்த பின் பேசிக் கொள்ளுவோம்! என்ன, சரிதானே?" என்றான் லல்லன்.

"சரிதான்!" எப்படிச் சொன்னானோ இந்த வார்த்தையை அம்ருத்! அப்புறம் லல்லனுக்குப் பின்னாலேயே நடந்து வெளியே வந்துவிட்டான். லல்லன்தான் அவனுக்கு அண்ணனோ என்று தோன்றும்படி நடந்து கொண்டான் அம்ருத். இருவரும் முற்றத்தைத் தாண்டிப் பக்கத்து அறைக்கு வந்து நின்றார்கள். இருளில் தடவிப் பார்த்து லல்லன் பூட்டைத் திறந்தான். இருவரும் உள்ளே நுழைந்தார்கள். லல்லன் ஒரு மெழுகுவத்தியை ஏற்றிப் பூமியில் நிறுத்தினான். கட்டில் முன்பிருந்தே போட்டிருந்தது. அதன்மீது அவன் சட்டென்று ஒரு மெத்தையை விரித்தான். தலையணையை எடுத்துப் போட்டான், போர்த்திக்கொள்ள ஒரு போர்வையையும் கால்மாட்டில் போட்டான். விரித்த விரிப்பின் சுருக்கங்களை நீவிச் சரி செய்தான். எல்லாம் ஆழ்ந்த மௌனத்தோடு நடைபெற்றன. அதே மௌனம் அம்ருத்தையும் ஆட்கொண்டது.

"தூங்கு, அண்ணா!" என்றான் லல்லன். சொல்லவில்லையானால் அண்ணனுக்குத் தூக்கமே வராது என்ற நினைப்பு அவனுக்கு. அம்ருத் கட்டிலண்டை சென்றான்.... அப்பொழுது....கூரையில் சிறகு அடித்துக் கொள்ளும் ஒலி கேட்டது. மேலிருந்து சில வைக்கோல்களும் விழுந்தன. அம்ருத் பார்வையை உயரத் தூக்கினான். கோட்டான்!

இங்கிருந்து அங்கும், அங்கிருந்து இங்குமாக அது பறந்து கொண்டிருந்தது, 'முனுக்' தெரிக்காமல். ஊஹூம், நீ வந்துவிட்டாயா? ஊஹூம், வந்து விட்டாயா? நீ? ஹூஹூம்!

லல்லன் கோட்டானை ஒரு திட்டுத் திட்டினான். "இந்தப் பீடை மாசத்துக்கொரு

தரம் கட்டாயம் வந்து விடுகிறது. இன்று இதன் உயிரை வாங்கிவிட்டுத்தான் மறு காரியம் பார்க்கப் போகிறேன்! சமியா! ஏ, சமியா!'' என்று கூவினான்.

சுவரின் அந்தப்புறத்திலிருந்து பதில் குரலே வரவில்லை.

''காதில் விழுகிறதா? கோட்டான் வந்திருக்கிறது. கோட்டான்!'' லல்லன் உரக்கக் கூப்பாடு போட்டான்.

அப்பொழுதும் மௌனம்தான்.

லல்லன் அம்ருத்தின் பக்கம் திரும்பினான். ''அண்ணா! நான் அங்கே போய் ஈட்டியை எடுத்து வருகிறேன். இந்தக் கோட்டானுக்காகத்தான் மூந்தாநாள் சந்தையிலே ஈட்டி வாங்கினேன். போய் இதோ எடுத்து வந்து விடுகிறேன்!'' என்றான்.

லல்லன் அறையிலிருந்து வெளியேறினான். அம்ருத் கட்டிலின் மீது அமராமல் கோட்டானை வெறித்த பார்வையோடு உற்று நோக்கிக்கொண்டிருந்தான்!

கோட்டான் அப்படியே கூரையோடு ஒட்டிக்கொண்டு உட்கார்ந்திருந்தது. அசையும் வழியாகக் காணோம்.

லல்லன் திரும்பவும் உள்ளே வந்தான். அவன் கையிலிருந்த ஈட்டி நல்ல நீளம். கூரை வரை கூட எட்டக் கூடியதாக இருந்தது. மூங்கிலும் நல்ல வலுவான மூங்கில். அவன் ஜன்னலைச் சாத்தினான். கதவைச் சாத்தினான். அப்புறம் அந்தக் கோட்டானைக் குறி வைத்து ஈட்டியை நீட்டினான்.

அம்ருத்துக்கு அதைக் கண்டு மனம் புழுங்கியது.

ஈட்டி சரக்கென்று பாய்ந்தது; கோட்டானைத் துளைத்தது. சிறகை அடித்துக் கொண்டு அது ஈட்டியோடு கீழே விழுந்தது. ஈட்டி கட்டியிருந்த மூங்கில் அதிர்ந்து போய்ப் பாம்பென நெளிந்து கொடுத்தது. கோட்டான் படபடத்தது. லல்லன் அதைப் பிடித்தான். இரத்தம் தோய்ந்த ஈட்டியிலிருந்து அதன் உடலைப் பிடுங்கினான். கழுத்தைத் திருகிப் போட்டான். கோட்டானின் பட்டுப் போன்ற சிறகுகள் தரையில் உதிர்ந்தன. லல்லன் நிம்மதியாகச் சிரித்தான். அப்படியே அம்ருத்தைப் பார்த்தான். அம்ருத் திக்கித் திணறிப் போய்விட்டான். ''நான் இங்கே இருந்தபொழுதும் இது வந்தது!'' என்று எப்படியோ சொல்லி முடித்தான்.

''அப்படியா?'' லல்லன் வியப்போடு கேட்டான்: ''நீங்கள் சொல்லவே யில்லையே?''

அம்ருத் மேலும் திணறி விட்டான். தன் திகைப்பைக் காட்டிக் கொள்ளாமல் இருக்கத் 'தம்'மென்று கட்டிலில் உட்கார்ந்து விட்டான்.

லல்லன் போன பின் அவன் தூங்கும் முயற்சியில் ஈடுபட்டான். ஆனால் விழித்துக் கொண்டேயிருந்தான். வட்டம் வட்டமாகப் பெரிய பெரிய விழிகள்! நுனியில் வளைந்த சிறிய அலகு! 'ஹூம், நீ வந்துவிட்டாயா? ஹூஹூம்.'

நாயும்தான் எப்படிக் குரைத்தது? தரித்திரம் பிடித்த சனியன் ஒரு வருஷத்துக்குள் மறந்து விட்டது. 'லள், லள், யார் நீ? நீ ஏன் வந்திருக்கிறாய்?...'

ஆமாம். அம்ருத் மெய்யாகவே எதற்காக வந்திருக்கிறான்?

லல்லன் சம்பாதிக்கிறானா இல்லையா என்பதைப் பார்க்கத்தானே? வீட்டின் துப்புரவான நிலை லல்லன் நன்றாக இருக்கிறான் என்று கூறாமல் கூறிக் கொண்டிருந்தது. அம்ருத் கேட்கவில்லை. கேட்கத்தான் வாய்ப்பு எங்கே கிடைத்தது? லல்லன் இப்பொழுது எங்கே வேலை செய்கிறான்?

ஆமாம், எங்கே வேலை செய்கிறான், என்ன வேலை செய்கிறான் என்பதை அறிந்து கொள்ள வேண்டிய அவசியம்?... என்ன செய்தால் என்ன அவன்? சௌக்கியமாக இருக்கிறான். அது போதாதா?

'அண்ணா, காலையிலே பேசிக்கொள்வோம்' என்று சொல்லி யிருக்கிறான் லல்லன்.

என்ன பேச வேண்டும்? எதற்குப் பேச வேண்டும்? எப்படிப் பேச வேண்டும்?

'கொக்கரக்கோ!'

பொழுது புலர்ந்து கொண்டிருக்கிறது. இருட்டு பிரிந்து கொண்டிருக்கிறது.

''எதற்காக வந்திருக்கிறார் அம்ருத் அண்ணா? யார் அது? போகச் சொல்லு அவரை உடனே! குழந்தையைப் பார்க்காதே!''

கோட்டான் செத்து விட்டது. அதன் உயிரற்ற உடலை லல்லன் எடுத்துச் சென்று விட்டான். 'இப்பொழுதே கொண்டு போய்க் குப்பையிலே கடாசிவிட்டு வருகிறேன்' என்று கூறிச் சென்றானே!

எறிந்திருப்பான்! கோட்டான்தான் நிசமாகவே செத்து விட்டது. எங்கே செத்தது? இதோ இருக்கிறதே, இதோ இருக்கிறதே கோட்டான்! கட்டிலில் படுத்திருக்கிறதே!

அம்ருத் பரந்து படபடத்துப் போய் எழுந்து உட்கார்ந்தான்.

கொக்கரக்கோ! இருள் பிரிந்து கொண்டிருக்கிறது. காலையில் ஊர் முழுவதும் செய்தி பரவிவிடும், அம்ருத் திரும்பி வந்திருக்கிறான் என்று! ஊர் மக்கள் விரும்பி ஏற்பார்களா? யார் விரும்புவார்கள், கோட்டானை! கோட்டான் வெட்கம் மானம் கெட்ட ஜென்மம். இங்கே விரட்டினால் அங்கே போகும், அங்கே விரட்டினால் இங்கே வரும். அறையை விட்டு வெளியே போகாது. பேசுவதை ஒட்டுக் கேட்கும். ஆனால் வாய் திறந்து பேசாது.

அம்ருத் எழுந்தான். வெகு நேரம் வரை இருளில் நின்று கொண்டிருந்தான். பிறகு மெழுகுவத்தியை ஏற்றினான். இறக்கும்பொழுது படபடத்த கோட்டானின் பட்டுச் சிறகுகள் பூமியில் சிதறிக் கிடந்தன. இன்னும் அவை அங்கேயேதான் இருந்தன. மங்கலான ஒளியில் அவற்றை ஒன்றுவிடாமல் திரட்டினான் அம்ருத். சட்டைப் பைக்குள் திணித்துக் கொண்டான்.

அறையிலிருந்து வெளியேறி அந்தக் குளத்தண்டை போனான். கையை நீட்டி நீரைத் தொட்டான். பிஜுலி, ஏ, பிஜுலி!

அப்புறம் திரும்பிப் பாராமலே முன்னேறிவிட்டான் அவன். ஒற்றையடிப் பாதை அவன் முதுகுக்குப் பின்புறம் நீண்டது: நீட்டி முழக்கிக்கொண்டு படுத்தது.

தமிழாக்கம்: ரா. வீழிநாதன்

---

Printed & published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-31
Managing Editor: T. Sadasivam

# குடும்பத்தினர் அனைவரும்
# திட ஆரோக்கியத்துடன் திகழ

# ஃபாஸ்ஃபோமின்®




ஃபாஸ்ஃபோமின், விடமின் பி காம்ப்ளெக்ஸ் மற்றும் பல்வேறு கிளிஸரோபாஸ்பேட்டுகள் அடங்கிய விடமின் டானிக். அது உங்கள் குடும்பத்தினருக்கு வலிமை, புத்துணர்வு மற்றும் ஆரோக்கியம் அளிக்கிறது. ஃபாஸ்ஃபோமின் சாப்பிடத் தொடங்கினதும், களைப்பும் சோர்வும் பறந்துவிடும். ஃபாஸ்ஃபோமின் சக்தியை அதிகரிக்கிறது. பசியைத் தூண்டுகிறது. வலிமையைப் பெருக்குகிறது. நோய்களை எதிர்க்கும் சக்தியைக் கூட்டுகிறது. குடும்பத்தினர் அனைவரும் திட ஆரோக்கியத்துடன் திகழ உதவுகிறது.



**ஃபாஸ்ஃபோமின்...**
**பழரஸ மணம் கமழும்**
**பச்சை நிற விடமின்**
**டானிக்.**



SQUIBB® SARABHAI CHEMICALS.

® இந்தச் சின்னம் ஈ.ஆர். ஸ்க்விப் அண்ட் ஸன்ஸ் என்ற ஸ்தாபனத்தின் ரிஜிஸ்டர் செய்யப் பெற்ற ட்ரேட் மார்க் ஆகும். கே.பி.பி.எல். அதை உபயோகிக்கும் லைஸன்ஸ் பெற்றவர்கள்.

Shilpi-HPMA-31A/71 Tam.

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon

Who cares if your hair is different?

# Sunsilk cares –
## with 3 special shampoos

**Pick the one that's perfect for you**

**Sunsilk Lemon Shampoo**
**For Greasy Hair:** Gently washes out excess grease... gives you days of clean, bouncing, silken hair.

**Sunsilk Tonic Shampoo**
**For Dry Hair:** Contains Allantoin to nourish your hair...revives that silken lustre, leaves hair softly glowing.

**Sunsilk Beauty Shampoo**
**For Normal Hair:** Perfectly balanced to keep your hair in beautiful condition, weaving silk into every strand.




**Sunsilk** – more than a shampoo, a cosmetic for your hair

*Quality Products by HINDUSTAN LEVER*

LINTAS-SS. 11-140